# அன்பொடு புணர்ந்த ஐந்திணை

– சங்கப் பாடல்கள் –

## குறிஞ்சி

*(இரண்டாம் தொகுதி)*

தொகை - வகை - உரை

*இலக்கிய வல்லுநர்*

புலவர் த. கோவேந்தன்

**வேமன் பதிப்பகம்**

*19, நியூ காலனி - சோசியர் தெரு,*

*நுங்கம்பாக்கம்*

*சென்னை - 600 034*

# நூல் விளக்கம்


| | | |
|---|---|---|
| நூல் பெயர் | : | அன்பொடு புணர்ந்த ஐந்திணை |
| ஆசிரியர் | : | த கோவேந்தன் |
| பதிப்பு | : | 24 08.2003 |
| பொருள் | : | சங்க இலக்கியம் - குறிஞ்சி |
| அளவு | : | 1 X 8 தெம்மி |
| எழுத்து | : | 11 புள்ளி |
| கட்டமைப்பு | : | சாதா அட்டைக் கட்டு |
| விலை | : | ரூ. 80/- |
| பக்கங்கள் | : | 200 |
| வெளியீடு | : | வேமன் பதிப்பகம்<br>19, நியூ காலனி, சோசியர் தெரு<br>சென்னை - 34<br>தொலைபேசி 28211134 |
| ஒளியச்சு | : | அன்பு - சகுராம் கிராபிக்ஸ்<br>சென்னை - 24<br>தொலைபேசி 24727236 |
| மறுதோன்றி | : | ரவிராஜா ஆப்செட்<br>சென்னை - 14 |

# அன்பொடு புணர்ந்த ஐந்திணை

தொல்பழங்கால நாகரிக நாடுகளில் தமிழகம் தலைசிறந்த ஒன்றாகும். சீனமும் தமிழும்தான் இன்றும் உயிர்ப்போடு உள்ளன தமிழிலக்கிய வரலாறு மிகமிகத் தொன்மையானது கிமு 3000-த்திலிருந்து கிபி 300 வரை பரப்புக்குட்பட்டது நாகரிக முதிர்ச்சியிலும் பண்பாட்டு நிலையிலும் இயற்கையோடியைந்த காலங்கள் முச்சங்கங்கள் நிலவின காலம்

ஈராயிரமாண்டு காலப் புலமைச் சான்றோர்களின் பாடல்களைக் கடற்கோளுக்கும் வந்தேறிகளின் அழிவுக்கும் பின்னும் அகம் என்றும் புறம் என்று தொகுக்கப்பட்டன. அவை.

**நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூறு**
**ஒத்த பதிற்றுப் பத்து ஓங்கு பரிபாடல்**
**கற்றறிந்தோர் ஏத்தும் கலியோடு அகம்புறம் என்று**
**இத் திறத்து எட்டுத் தொகை.**

**முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை**
**பெருகு வளமதுரைக் காஞ்சி - மருவினிய**
**கோல நெடுநல்வாடை கோல்குறிஞ்சி, பட்டினப்**
**பாலை கடாத்தொடு பத்து -**

பாட்டும தொகையுமாகப் பாடினோர் ஒருகாலத்தவர், ஒரு நாட்டவர் அல்லர் ஓர் ஊரினர் அல்லர்.. குமரி முதல் வடவேங்கடம் வரை பல்வேறு காலங்களில் வாழ்ந்தவர்கள்.

இன்று நமக்குக் கிடைத்துள்ள பாடல்கள் தொகை - பாட்டு நூற்படி மொத்தம் 2279 ஆகும அகம் புறம் இரண்டும் பாடிய சங்கச் சான்றோர்கள் 238 பேர் ஆவர் மொத்தப் பாடலகளில 102 புலவர்களின் பெயர் தெரியவில்லை இவர்களை நீக்கிப் பெயர் தெரிந்தவர்கள் 472 பேர் ஆவர்

அகப் பாடல்கள் அடி எல்லையைக் கொண்டும் பாவகையைக் கொண்டும தொகுக்கப் பெற்றவை ஐங்குறுநூறு 500, குறுந்தொகை 401, நற்றிணை 400, கலித்தொகை 149, பரிபாடல 8, பத்துப்பாட்டு 4 - ஆக 1862 பாடல்கள் அகததிணை வாழ்வு பறறியவை

## ❧ அன்பொடு புணர்ந்த ஐந்திணை - குறிஞ்சி

இயற்கை நெறிக்காலமாகிய சங்ககால ஆண் பெண் அன்புறவு நட்பில் மலர்ந்து தோழமையில தோய்ந்து காதலில் இன்புற்று அறநெறி தவறா ஒழுக்க வாழ்வாகும நானிலத்தின் பாகுபாட்டோடு வாழ்ந்த தமிழினத்தினர் களவில் தொடங்கி கற்புடை இல்லறவாழ்வில் இனிது வாழ்ந்தனர் வாழ்வோடும் நிலைத்தணை இயங்குதிணையோடும் இரண்டறக் கலந்து துய்த்தனர்

தோழர் தங்கப்பா கூறுவதுபோல "பாலுறவு அதன் முழுமையான பயனையும் நுண்சுவையினையும் நல்குவது அன்பு நிலையில்தான். ஒருவரில் ஒருவர் உண்மை அன்பு பூண்ட ஆணும பெண்ணும் தம்முள் கூடி வாழும் வாழ்வில்தான் பாலுறவு வாழ்வின் மலர்ச்சிக்குத் துணை புரிகிறது" எனகிறார் இதனின் மணிச்சுருக்கம் தான் 'அன்பின் வழியது உயிர்நிலை' என்பதும - 'மலரினும் மெல்லியது காமம், சிலர் அதன் செவவி தலைபடுவார்' என்பதுமாகும்.

பிற உயிர்களிடத்தும் ஆண்பெண் அன்புறவு உள்ளதெனினும் அஃது இயற்கையின் இயல்பூக்க உணர்ச்சியே தவிர, மனமலர்ச்சியின பேரின்பம் நுகரவில்லை. அதனால் தான் தொல்காப்பியன,

**'எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது**
**தானமர்ந்து வரூஉம் மேவற்றாகும்'**

என்றான இந் நூற்பாவின் பொருள் உயர்திணை மாந்தர்க்கு மட்டுமின்றி பிற உயிரினங்கட்கும் பொருந்தும் அஃறிணைகள் மொழியைப் படைக்கத் தெரியாததால் தம்தம் இன்ப உணர்வுகளை வெளிப்படுத்த முடியவில்லை மாந்தன் உணர்ந்ததை உணர்த்தும் படைப்பாற்றல் உள்ளவன் ஆதலால் மொழி முதல் உளிவரை உள்ளது சிறக்கும் மனத்தறிவால உணர்ச்சி வெளிப்பாட்டினை மொழியில் வெளிப் படுத்தியவையே இலககியங்கள் இதில அகமும் புறமும் அடங்கும்

தமிழர் வாழ்விலும் சங்க இலக்கியங்களிலும் 'அன்பொடு புணர்ந்த ஐந்திணைதான் உண்டே தவிர தொல்காப்பியன கூறும் கைக்கிளையும் பெருந்திணையும் தமிழர் வாழ்விலே இல்லை. இவ் இரண்டும் ஆரியர்களின் அழிம்பு நிலைகள். எனவே தான குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல, பாலை என வகுத்தனர் இப் பாகுபாடு அறிவியலுக்கும சமூக மனவியலுக்கும் பொருத்தமானவை

எந்தையர் வே.மு தங்கவேலனார் தமிழ், தெலுங்கு சமற்கிருதம ஆகிய மும மொழிகளில வலலுநராய இருந்தும் சங்க இலக்கியங்கள்

கற்றிருந்தாலும் சைவ சமயத்தவராகவே வாழ்ந்ததாலும் என கல்வி விட்டு விட்டுத் தொடர்ந்ததால் எட்டாம் வகுப்பு படிக்கையில் தான சங்க நூல்கள் அறிமுகமாயின காரணம் 'செந்தமிழ்ச் செல்வி' 'தமிழ்ப் பொழில்' வீட்டுக்கு வந்தன. பாடநூல்களிலும் சங்கப்பாடல்கள் பாடப்பகுதியில் வந்திருந்தன. இவற்றுக்கும் மேலாய் வேலூர் கு மு அண்ணல்தங்கோவின் மாணவர் படையின் தலைவனாய் இருந்ததால் 40-50-களில் நடந்த தைப் பொங்கலின் ஒரு வார விழாவில் அக் காலத்தில் சிறந்தோங்கி யிருந்த பல பெருபுலமைச் சான்றோர்களின் சொற்பொழிவுகளாலும் அவர் களுக்குத் தொண்டு செய்தபோது பெற்ற செவிச் செல்வமும் செழுந்தமிழ் நூற்படிப்பும் என்னை மதுரைத் தமிழ்ச்சங்கத் தேர்வில் புகுத்தியது. பாவேந்தர் தொடர்பும் அறிவுரையும் சங்க இலக்கியங்கள், காப்பியங்கள், சமய இலக்கியங்கள் சிற்றிலக்கியங்கள் பாரதி - பாரதிதாசன் ச.சு சோமசுந்தர பாரதி, வெள்ளை வராணனார், வேங்கட ராமையா, மயிலை வேங்கடசாமி, ந.மு. வேங்கடசாமி நாட்டார், கரந்தைக் கவியரசு, பெரும்புலவர் வேணு கோபால நாய்கர் - பாலசுந்தர நாய்க்கர், உரைவேந்தர் அவ்வை சு துரை சாமி பிள்ளை, மு.வ. போன்ற பலரின் தொடர்பும் என்னைப் பிற இலக்கியங்களிலிருந்து சங்க இலக்கியத்தில் மேலும் மேலும் தோயச் செய்தன 1957-இல் தோழர் தங்கப்பாவின் நட்பு சங்க இலக்கிய ஐந்தருவி யில் திளைத்தின்புறச் செய்தது.

சென்னை வாழ்க்கை என்னைப் பிறர்க்கெழுதிப் பலர் பேரும் புகழும் பட்டமும் பெற முன்னிறுத்தியது. என் வாழ்க்கைக்குரிய வருவாய் அதில் வந்தது. அப்பொழுது சங்க ஆய்வுக் களத்தில் மருதம் பற்றி ஆய்வு செய்தேன். அதற்கு முன்பே அகப்பொருள் நூல்கள் எவையும் ஏனோ குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் - பாகுபாடு நூலுக்கு நூல் வேறுபட்டிருப்பதை அறிந்து தெரிந்திருந்த எனக்கு அகப் பொருள் பாடல்கள் அனைத்தையும் இப் பாகுபாட்டில் பிரிக்க வேண்டும் என்ற உந்தாற்றல் என் மனப் பண்ணையில் உயிர்த்தெழுந்தது.

தொகை நூல்களில் முதன்முதல் தொகுக்கப்பட்டது குறுந்தொகையும் அடுத்து நற்றிணையும் ஆகும் எனவே இரு நூல்கள் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் பாடல்கள் காவனத்தில் உலாவும் பல்வகை அஞ்சிறைத்தும்பிகளாக முறையின்றி ஊடுருவியுள்ளன அரிமா நோக்காக நற்றிணையில் ஒவ்வொரு பத்தாம் பாட்டும் பல மருதத்திணையாகிறது பின்னர் தொகுக்கப்பட்ட ஐங்குறுநூறு மருதம் - நெய்தல் - குறிஞ்சி

பாலை - முல்லை என்று கார்கானாற்றாய்த் திசைமாறி சிறகுகின்றன. அக நானூற்றிலோ களிற்றுயானை நிரை, மணிமிடை பவளம், நித்திலக்கோவை யென முப் பிரிவாகி ஒற்றை எண் 1, 3, 5, 7, 9 எனப் பாலைப் பாடல்களும் 4, 14, 24, 34 என 4 - இல் முடியும் முல்லைப் பாடல்களும், 6, 16, 26, 36 என 6-இல் முடியும் பாடல்கள் மருதப் பாடல்களாகவும், 10, 20, 30, 40 - எண் பாடல்கள் நெய்தலாகவும் எண் அடிப்படையில் கலம்பகமாகவே உள்ளன. பிற்கால நூலான கலித்தொகையோ பாலை, குறிஞ்சி, மருதம், முல்லை, நெய்தல் எனப் பூமஞ்சரியாக விளங்குகின்றன

சங்க நூல்களைப் பதிப்பித்த அறிஞர் பெருந்தகைகளும் நூலாராய்ச்சி வல்லுநர்களும் இம் முறை மாறி நிற்பவற்றை ஏனோ எண்ணவில்லை. பேராசிரியர் சு வையாபுரிப் பிள்ளை துணிந்து சங்கப் பாக்களை ஆசிரியர் அகவரிசையில் முறைப்படுத்தியது போல - சீரிய கூரிய செம்மொழி அறிஞர் பேரா. வ. சுப மாணிக்கனார் தம் முனைவர் ஆய்வேடான 'தமிழ்க் காதல்' ஏட்டில் இம் முறை மாற்றம் பற்றிச் சுட்டிக் காட்டியது பற்றி நேரில் வினவுகையில் நீங்கள் முறைப்படுத்துங்களேன் என்று 1962-லேயே என்னிடம் கூறினார். அவ் வகையில் என்னை முழுமையாகச் செயல்படச் செய்தவர் தோழர் ம. இல. தங்கப்பா.

ஒவ்வொரு திணைக்கும் நூற்பெயர் - ஆசிரியர் பெயர் பாட்டின் கீழ் தந்துள்ளேன். முதலில் வரிசை எண்ணும் ஒவ்வொரு திணைக்கும் தனித்துத் தந்துள்ளேன். பாடல் ஆசிரியர் பெயர் தெரியாதவிடத்து பாட்டுக்கடியில் உவமையாலோ அருந்தொடராலோ பாடினார் பெயர் சூட்டாமல் 'பாடினார்?' என்று வினாக்குறி இட்டுள்ளேன். நற்றிணையில் மட்டுமே பாடினார் பெயர் தெரியாத பாடல்கள் மிக்குள்ளன.

நெடுநாளைய என் திட்டத்தை செயல்படுத்தப் போய் நான் இழந்த பேரிழப்பைச் சொல்லி மாளாது அதாவது என் அன்புக்குரிய தோழர் தங்கப்பாவுடன் மடல் தொடர்புகளை இழந்தேன். இப் பணியில் ஒரு வெறியனைப் போல் இருந்ததால் அவரிடமிருந்து ஆறுமடல்களை இழந்தேன். இது ஒரு தனி மாந்தனுக்கு ஏற்பட்ட இழப்பன்று. தமிழுக்கும் நாட்டிற்கும் உலகுக்கும் ஏற்பட்ட இழப்பாகும். அவ்விழப்பை என் தொகை வகை - உரைப் பணி ஈடு செய்யுமா என்பது ஐயமே. என் வருவாயையும் இழந்தேன். அது எனக்குப் பேரிழப்பில்லை. நண்பரின் வாழ்வியக்க எண்ணங்களை மடலாகப் பெறாமையே ஈடிலாப் பேரிழப்பு.

என் இவ் இலக்கியப் பணியினை மற்றவரும வழிகாட்டினால செய்தல் கூடும். ஆனால், கல்லூரி, பல்கலைக் கழகப் பேராசிரியர்கள தொன்னூற்கஞ்சி தடுமாறுளத்தராயினர். வருவாயோ புகழோ பெறமுடியா பணியென மடியின் மடியில் மகிழ்பவராய் உள்ளனர் பட்டிமன்ற சொ பொழிவுத் தொழில் வணிகப் பரத்தராக விளங்கும் இரு மனத்தராகவும், தன்மையே விற்கும் வேடிக்கை மாந்தராகவும் நாளுக்கொரு பேச்சும், வேளைக்கொரு பேச்சு என வலியுருக்கி நோயின் வாயில்களாக வாழ்கின்றனர். எனவே பாடுபட்டுழைக்கும் பண்பிலிகளாயினர்

இந் நூலைத் தொகை - வகை - உரையுடன் கொண்டு வருவதில் ஓர் ஆர்வமும் அக்கறையும் உண்டு. இதற்கு முன் சங்க இலக்கியத்திற்கு என் உரைகள் வேறு வேறு மாந்தர்களின் பெயரால் வெளிவந்துள்ளன பெயரிடப் படாமல் மற்றொரு நிறுவனம் அரைகுறையாய் வெளியிட்டது. இரண்டாண்டுகளுக்கு நான் புதுக்கிய உரைகள் பணம் தந்தன ஆனால் இருவர் - மூவர் பெயரில் மலிவு விலையைப் போலவே பிழைகளும் மலிந்து வெளிப்பட்டன உழைப்புக்குக் கூலி கிடைத்தது. அதற்குரிய பேரும் புகழும் யார் யாரோ உரிமை கொண்டாடினர். அதற்காக நான் வருந்தவில்லை. ஏனெனில் சங்க இலக்கியம் பரவுவதில் எனக்குள்ள ஈடுபாடே காரணம்.

திரை உலகில் பின்னணிப் பாடகர் பெயர் போடப்பட்டாலும் வாய் அசைப்பவரான கதை மாந்தருக்கன்றோ பேரும் புகழும்! பாடு பட்டுப் பயன் விளைவிக்கும் வேளாளரை எவர் நினைக்கின்றனர்? (தேவையும் இல்லை) ஆனால், சிற்றுண்டிப் பேருண்டிச் சாலைகளுக்குத் தானே பெயரும் புகழும். தாயையே மறக்கின்ற உலகத்தில் தந்தையை மறப்பது உலகத்தியற்கைதானே?

* * *

அகப் பாடல்கள் அடி மிகமிக முதல் இக உரிப்பொருள்கள் விரி வடைகின்றன. அவையே போல். தமிழ் மன்னர்கள், அவர் தம் மற, அறச் செயல்கள் பிற மாந்தர் செயல்கள் தொழில்கள் வரலாறு நானல் வாழ்க்கை ஆகியவற்றின் குறிப்புகள் மிகுகின்றன.

ஆனால் கலித் தொகையிலோ, ஆரியரின் தொன்மச் செய்தி களும், பாண்டியனைப் பாடலிலுமில்லை குறிக்கப்படுகின்றன. ஆனால் எந்தப் பாண்டியன் என்று ஒரு பத்தியிலுமில்லை மேலும் மருதத்திலும் வரும் பரத்தையர், ஐங்குறுநூறு, குறுந்தொகை, நற்றிணை, நெடுந்தொகை,

கலித் தொகையில் பரத்தையர் புனலாடலும், தலைவி ஊடலும், எங்கும் சுட்டப் பெறவில்லை. பரிபாடல் இதில் முதன்மை வகிக்கிறது. பரத்தை யர்கள் பெரும்பாலும் பார்பணத்திகளே என்பது என் ஆய்வின் முடிவு.

கலித் தொகை முல்லைத் திணையில் கொல்ஏறு அடக்குதல் வருகின்றது. ஆனால், பிற சங்க அகநூல்களில் மாடுபிடி போர் இல்லை. இது பிற்காலத் தமிழக வாழ்வில் இணைந்தது போலும். இந் நூலின் திணை வரிசைக்கேற்ப ஆய்வு செய்தால் பெருகும் என்பதனை விடுத்து, இத் தொகை - வகை உரை நூலை முறைப்படுத்துங்கால் என்னை இடையறாது ஆக்கப் பணிக்கு ஊக்குவித்த கலைஞன் பதிப்பகம் திரு. மாசிலாமணி அவர்களுக்கும், ஆங்கில அறிஞர் திரு. சகதீசன் அவர்களுக்கும், என் மகன் சிற்பி கோ. வீரபாண்டியனுக்கும் வெளியீட்டாளர் திரு. வேலாயுதம் அவர்களுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றி. தமிழகம் இப் புதிய வார்ப்பினை ஏற்று பயனடையும் என்பது என் நம்பிக்கை.

சங்கத் தமிழ்ச்சான்றோர் நூற்றொகைத் தந்துவக்கத் தங்கத்தைத் தேடுதல்போல் தம்வாழ்வைத் தாமிழந்து செங்கதிராய்த் தென்தமிழ்ச் செல்வத்தை நானிலத்தில் எங்கும் இருந்தமிழே உன்னால் இருந்தேன். ஓ, தங்கும் உயிர் வானோர் விருந்தமிழ்தம் வேண்டேம்என இங்குழைத் தார்க்கெல்லாம் நன்றி இயம்பிடுவன் பொங்குகடல் வீறலை போல்.

அன்பன்
த. கோவேந்தன்

*காதலினால் உயிர் தோன்றும் - இங்குக்*
*காதலினால் உயிர் வீரத்தில் ஏறும்;*
*காதலினால் அறிவெய்தும் - இங்குக்*
*காதல் கவிதைப் பயிரை வளர்க்கும்*

*செவ்விது, செவ்விது, பெண்மை - ஆ!*
*செவ்விது செவ்விது செவ்விது காதல்*

- பாரதி

# குறிஞ்சி

## அகநானூறு

### 378. விரிந்தன வேங்கைப் பூங்கொத்துகள்

கோழிலை வாழைக் கோள் முதிர் பெருங் குலை
ஊழுறு தீம் கனி, உண்ணுநர்த் தடுத்த
சாரற் பலவின் சுளையொடு, ஊழ் படு
பாறை நெடுஞ் சுனைவிளைந்த தேறல், ஊழ் படு
அறியாது உண்ட கடுவன் அயலது
கறி வளர் சாந்தம் ஏறல் செல்லாது,
நறு வீ அடுக்கத்து மகிழ்ந்து கண்படுக்கும்
குறியா இன்பம், எளிதின், நின் மலைப்
பல் வேறு விலங்கும், எய்தும் நாட!
குறித்த இன்பம் நினக்கு எவன் அரிய?
வெறுத்த ஏளர், வேய் புரை பணைத் தோள்,
நிறுப்ப நில்லா நெஞ்சமொடு நின்மாட்டு
இவளும், இனையள் ஆயின், தந்தை
அருங் கடிக் காவலர் சோர் பதன் ஒற்றி,
கங்குல் வருதலும் உரியை; பைம் புதல்
வேங்கையும் ஒள் இணர் விரிந்தன
நெடு வெண் திங்களும் ஊர் கொண்டன்றே.

*– கபிலர் அக 2*

*"வளமான இலைகளை உடைய வாழையின் காய்ப்பு மிக்க பெரிய குலையில் உள்ள முதிர்ந்த இனிய கனியாலும், தம்மை உண்டவர் பிற கனிகளை உண்ணாமல் தடுக்கும் மலைச் சாரலில் உள்ள பலாப் பழத்தின் முற்றிய சுளையாலும், பாறை*

*யில் அமைந்த பெரிய சுனையில் உண்டான தேனைத் தேன் என்று அறியாது உண்டது ஆண் குரங்கு அதனால் அது பக்கத்தில் உள்ள மிளகுக் கொடி படர்ந்த சந்தன மரத்தில் ஏற மாட்டாமல் பூக்களால் ஆன படுக்கையில் மகிழ்ந்து உறங்கும் இத்தகைய எதிர்பாராத இன்பத்தை நினது மலையில் உள்ள பலவகை விலங்குகளும் எளிதாக அடையும் இத்தகைய சிறப்புடைய நாடனே! நீ எண்ணி அடைய முயலும் இன்பங் கள் உனக்கு எங்ஙனம் அரியனவாகும்? மிகுந்த அழகை யுடைய மூங்கில் போன்ற பருத்த தோள்களையுடைய இவளும், தடுத்து நிறுத்தவும் நில்லாத நெஞ்சுடையவளாய் உன்னிடம் காதல் கொண்டவளானாள் ஆதலால் இனி இவள் தந்தையின் அரிய காத்தல் தொழிலுடைய காவலர் சோர்ந்திருக்கும் பொழுதை மறைவாக உணர்ந்து இரவிலே இவளைக் கூடும் பொருட்டாக வருவதற்கும் உரியவன் ஆவாய்! அன்றியும் பசிய புதர்கள் சூழ்ந்த வேங்கை மரங்களும் ஒளியுடை பூங்கொத்துகள் மலரப் பெற்றன மேலும் வெண் மையான கதிர்களையுடைய திங்களும் வளரும் பருவத்தை அடைந்தது. இவற்றை ஆராய்ந்து செய்யக் கூடியதைச் செய்வாயாக!" என்று பகற்குறி வந்த தலைவனிடம் தோழி அறிவுரை கூறி மணக்க வேண்டினாள்.*

## 379. செல்லாமையே நன்று

ஈயற் புற்றத்து ஈர்ம் புறத்து இறுத்த
குரும்பி வல்சிப் பெருங் கை ஏற்றை
தூங்கு தோல் துதிய வள் உகிர் கதுவலின்
பாம்பு மதன் அழியும் பானாட் கங்குலும்,
அரிய அல்ல – மன் – இகுளை! 'பெரிய
கேழல் அட்ட பேழ்வாய் ஏற்றை
பலா அமல் அடுக்கம் புலாவ ஈர்க்கும்
கழை நரல் சிலம்பின் ஆங்கண், வழையொடு
வாழை ஓங்கிய தாழ் கண் அகம்பில்
படு கடுங் களிற்றின் வருத்தம் சொலிய,
பிடி படி முறுக்கிய பெரு மரப் பூசல்
விண் தோய் விடரகத்து இயம்பும் அவர் நாட்டு

எண் அரும் பிறங்கல் மான் அதர் மயங்காது
மின்னு விடச் சிறிய ஒதுங்கி, மென்மெல,
துளி தலைத் தலைஇய மணி ஏர் ஐம்பால்
சிறுபுறம் புதைய வாரி, குரல் பிழியூஉ
நெறி கெட விலங்கிய, நீயிர், இச் சுரம்
அறிதலும் அறிதிரோ?' என்னுநர்ப் பெறினே.

*– பெருங்குன்றூர்க் கிழார் அக 8*

*தோழியே! "பெரிய ஆண் பன்றியைக் கொன்ற பிளவுடைய வாயையுடைய ஆண் புலி, பலா மரங்கள் செறிந்த பக்க மலைகளில் புலால் நாற்றம் உண்டாக அப் பன்றியை இழுத்துச் செல்லும். அங்கு மூங்கில்கள் ஒலிக்கும். அங்குச் சுரபுன்னை மரத்துடன் வாழை ஓங்கி வளர்ந்த தாழ்ந்த இடத்தையுடைய எப்போதும் நீர் நீங்காத குழி. அதில் ஆண் யானை அகப்பட்டது. அதன் வருத்தத்தைப் போக்குதற்கு அதன் பெண் யானை அந்த ஆண் யானை எறுதற்குப் படியாக அமைத்திடப் பெரிய மரத்தை முறித்தது. அதனால் உண்டான ஓசை வானத்தே அளாவிய மலைக்குகையில் சென்று ஒலிக்கும். இத்தகைய இயல்புடைய நம் தலைவர் நாட்டில், எண்ண இயலாத குன்றுகளின் பக்கமாகச் செல்லும் விலங்குகளின் நெறிகளில் மயங்கித் திரியாது மின்னலானது வழியைக் காட்டச் சிறுகச் சிறுகச் மெல்ல நடந்து,*

*ஈயல்கள் பொருந்திய புற்றின் மேற் பக்கத்தே தங்கிய புற்றாஞ் சோறான உணவையடைய பெரிய கைகளை உடைய ஆண் கரடி தொங்குகின்ற தோல் உறைக்குள் உள்ள கூர்மையான நகம் பற்றிக் கொள்வதால் பாம்பு தனது வலிமை இழந்தழியும். நள்ளிரவிலும் செல்லுதல். மழைத் துளியை உடைய நீலமணி போன்ற அழகிய கூந்தலைப் பிடரி மயிர் நிறையக் கோதி அதைப் பிழிந்து விட்டு வழிகள் செல்வதற்கு முடியாத படி பின்னிக் கிடக்கும் இச் சுரத்தின் நெறியை நீவிர் முன்பு அறிவீரோ என இரங்கி எவரேனும் வினவுவாராயின், நமக்குச் செல்ல அவ் வழிகள் அரியவை அல்ல! ஆனால் அவ்வாறு வினவுவோர் இல்லையே!" தலைவி தோழிக்குச் சொல்லுவதுபோல் ஒரு புறம் நிற்கும் தலைவன் கேட்பக் கூறினான்.*

## 380. இரவுக்குறி வரின் வாழாள் தலைவி

யாயே, கண்ணினும் கடுங் காதலளே;
எந்தையும், நிலன் உறப் பொறாஅன்; 'சீறடி சிவப்ப
எவன், இல! குறுமகள்! இயங்குதி?' என்னும்
யாமே, பிரிவு இன்று இயைந்த துவரா நட்பின்,
இரு தலைப் புள்ளின் ஓர் உயிரம்மே;
ஏனல்அம் காவலர் ஆனாது ஆர்த்தொறும்
கிளி விளி பயிற்றும் வெளில் ஆடு பெருஞ் சினை
விழுக் கோட் பலவின் பழுப் பயம் கொண்மார்,
குறவர் ஊன்றிய குரம்பை புதைய,
வேங்கை தாஅய தேம் பாய் தோற்றம்
புலி செத்து, வெரீஇய புகர்முக வேழம்,
மழை படு சிலம்பில் கழைபட, பெயரும்
நல் வரை நாட! நீ வரின்
மெல்லியல் ஒரும் தான் வாழலளே. — *கபிலர் அக 12*

*"தினைப்புனம் காக்கும் அழகிய மகளிர் ஓயாமல் ஆர வாரிக்கும் தோறும் கிளிகள் தம் இனம் என எண்ணிப் பல காலும் அழைப்பதற்கு இடமாய் அமைந்தது. குறவர் அணில் கள் ஆடும் பெரிய கிளையையும், சிறந்த காய்களையுமுடைய பலா மரத்தின் இனிய கனியான பயனைக் கொள்வதற்கு அமைத்த குடிசையின் கூரை மறையுமாறு வேங்கை மலர்கள் உதிர்ந்து பரவியுள்ளது. அத் தோற்றத்தைக் கண்டு புலி என்று எண்ணி அஞ்சியது. புள்ளிகளை யுடைய யானை அஞ்சிய தால் முகில்கள் தங்கும் மலைச்சாரலில் மூங்கில்கள் முரிந்து விழும்படி ஓடுகின்றன. இத்தகைய வளம் வாய்ந்த மலை நாட்டையுடைய பெருமானே! கேள். எம் தாய் தன் கண்ணை விட இவளைப் பேரன்புடன் பாதுகாப்பவள். எம் தந்தையும் எம் தலைவியான இவளின் அடிகள் நிலத்தில் படுவதைப் பொறுக்கார்தவனாய், "ஏடி! நீ என்ன செய்தற்கு இவ்வாறு சிறிய அடிகள் சிவக்குமாறு திரிகின்றாய்' என்று உரைப்பான். இனி யாங்களோ ஒரு பொழுதும் பிரிதல் இல்லாது கூடிய வெறுத்தல் இல்லாத நட்பினால் இரண்டு தலைகளையுடைய ஒரு பறவையின் உடம்பில் உள்ள ஓர் உயிர் போல் உள்*

*ளோம். இங்ஙனம் இடையூறு மிக்க இரவில் வருவாயானால் நினக்குத் துன்பம் உண்டாகுமே என எண்ணுகின்ற மென்மைத் தன்மையுடைய எம் தலைவி உயிர் வாழ்ந்திருக்க மாட்டாள்." என்று இரவுக்குறி வந்த தலைமகனுக்குத் தோழி மணம் கொள்ளக் கூறினாள்.*

## 381. பகலில் தலைவியைப் பெறுவாய்

நீர் நிறம் கரப்ப, ஊழுறுபு உதிர்ந்து,
பூமலர் கஞலிய கடு வரற் கான் யாற்று,
கராஅம் துஞ்சும் கல் உயர் மறி சுழி,
மராஅ யானை மதம் தப ஒற்றி,
உராஅ ஈர்க்கும் உட்குவரு நீத்தம் —
கடுங்கண் பன்றியின் நடுங்காது துணிந்து
நாம அருந் துறைப் பேர்தந்து, யாமத்து
ஈங்கும் வருபவோ? — ஓங்கல் வெற்ப!—
ஒரு நாள் விழுமம் உறினும், வழி நாள்,
வாழ்குவள் அல்லள், என் தோழி; யாவதும்
ஊறு இல் வழிகளும் பயில வழங்குநர்
நீடு இன்று ஆக இழுக்குவர் அதனால்
உலமரல் வருத்தம் உறுதும்; எம் படப்பைக்
கொடுந் தேன் இழைத்த கோடு உயர் நெடு வரை,
பழம் தூங்கு நளிப்பின் காந்தள்அம் பொதும்பில்,
பகல் நீ வரினும் புணர்குவை — அகல் மலை
வாங்கு அமைக் கண் இடை கடுப்ப, யாய்
ஓம்பினள் எடுத்த, தட மென் தோளே. — *கபிலர் அக 18*

*உயர்ந்த மலையை யுடைய தலைவனே! அழகிய மலர்கள் நீரின் நிறமானது மறையுமாறு மலர்ந்து உதிர விரைந்து ஓடும் காட்டாற்று முதலைகள் கிடந்து உறங்குதற்கு இடமான கற்பாறைகளில் மோதி உயர்ந்து மடங்குதலால் உண்டாகும் சுழிகளை உடையது. தன் பெண் யானையுடன் கூடாத ஆண் யானையின் மதவெறி கெடும்படி மோதித் தன் வலிமையால் இழுத்துச் செல்லுகின்ற காண்பவர்க்கு அச்சத்தை ஏற் படுத்தும் வெள்ளம். அதை, அச்சமற்ற பன்றியைப் போன்று அஞ்சாது நீந்திச் சென்று, அச்சம் தரும் ஏறுவதற்கரிய*

*துறையில் கரையேறி, நள்ளிரவிலே இத்தகைய இடத்துக்கும் மக்கள் வருவாரோ! ஒருநாள் நீ துன்பம் அடையினும் என் தோழி மறுநாள் உயிர்வாழ மாட்டாள். சிறிதும் துன்பம் - இடையூறு இல்லாத நல்ல வழிகளிலும் அங்குப் பலகாலும் போய் வருபவர் நீடுதல் இல்லாது தவறிவிடுதல் உண்டு. இவ்வாறு நின் வருகை எமக்கு எப்போதும் அச்சமே தரும் ஒன்றாக இருப்பதால், யாங்கள் மனம் சுழலும் வருத்தத்தை அடைவோம். அகன்ற மலையில் உள்ள வளைந்த மூங்கிலின் கணுக்களுக்கு உடையேயான இடத்தைப் போல யாம் போற்றி வளர்த்த தலைவியின் பெரிய மென்மையுடைய தோளை, எம் தோட்டத்தை அடுத்துள்ள வளைந்த தேன் கூடுகள் கட்டப் பட்டுள்ள குவடுகளுடன் உயர்ந்துள்ள பெரிய மலைச்சாரலில், பொருந்திய பழங்கன் பழுத்துத் தொங்கும் மரச் செறிவினுள், காந்தள் புதரில் பகற்காலத்தில் வரினும் நீ தலைவியைக் கூடுவாய்; எனவே துன்பம் மிக்க இரவில் வருதல் வேண்டா." என்று இரவு வந்தானை பகலில் வருக எனத் தோழி இயம்பினாள்.*

## 382. அறியாமையை எண்ணி நகைத்தேன்

அணங்குடை நெடு வரை உச்சியின் இழிதரும்
கணம் கொள் அருவிக் கான் கெழு நாடன்
மணம் கமழ் வியல் மார்பு அணங்கிய செல்லல்
இது என அறியா மறுவரற் பொழுதில்
'படியோர்த் தேய்த்த பல் புகழ்த் தடக் கை
நெடு வேட் பேணத் தணிகுவள் இவள்' என
முது வாய்ப் பெண்டிர் அது வாய் கூற,
களம் நன்கு இழைத்து, கண்ணி சூட்டி,
வள நகர் சிலம்பப் பாடி, பலி கொடுத்து,
உருவச் செந்தினை குருதியொடு தூஉய்,
முருகு ஆற்றுப்படுத்த உரு கெழு நடு நாள்,
ஆரம் நாற, அரு விடர்த் ததைந்த
சாரற் பல் பூ வண்டு படச் சூடி,
களிற்று – இரை தெரீஇய பார்வல் ஒதுக்கின்
ஒளித்து இயங்கும் மரபின் வயப் புலி போல,

நல் மனை நெடு நகர்க் காவலர் அறியாமை—
தன் நசை உள்ளத்து நம் நசை வாய்ப்ப,
இன் உயிர் குழைய முயங்குதொறும் மெய்ம் மலிந்து,
நக்கனென் அல்லெனோ யானே – எய்த்த
நோய் தணி காதலர் வர, ஈண்டு
ஏதில் வேலற்கு உலந்தமை கண்டே?

*– வெறிபாடிய காமக் கண்ணியார் அக 22*

தோழி! "தெய்வம் பொருந்தியுள்ள மலை உச்சியினின்று விழும் அருவிக்கூட்டம் விளங்கும் காடு பொருந்திய நாட்டை யுடைய நம் தலைவனின் நறுமணம் கமழும் அகன்ற மார்பு, வருத்திய வருத்தத்தை இதனால் ஏற்பட்டது என்று அறியாது கலக்கம் அடைந்த காலத்தில், தன்னை வணங்காத 'சூரபன் மன்' முதலான பகைவரைக் கொன்று அழித்த பல்வகைப் புகழை உடைய பெரிய கைகளையுடைய முருகனை வழிபாடு செய்தால், இவள் துன்பம் தணியும் என்று அறிவு வாய்க்கப் பெற்ற பெண்டிர் 'இது தெய்வத்தால் உண்டான துன்பமே!' என்று மெய் போலக் கூறினர். கூறத், தலைவி, 'தோழியே நம் தலைவனைப் பழி கூறாதே; தெய்வத்தால் உண்டான குற்றம் என்று பெண்டிர் சொன்ன அன்றைய இரவே, நம்தாய் வேலனை அழைத்தாள்; அவன் வந்து முருகனுக்கு வழிபாடு நடத்தற்குரிய களத்தைத் தூய்மை செய்தான் அலங்கரித்தான் வேல் நட்டுக் கடப்ப மாலையைச் சூட்டினான்; நம் வளம் வாய்ந்த இல்லம் ஒலியுண்டாகப் பாடிப் பலியைத் தந்தான் செந்தினையைக் குருதியுடன் கலந்து தூவி முருகனை வர வழைத்தான் அத்தகைய அச்சம் பொருந்திய அந்த நள்ளிர வில், நம் தலைவன் மார்பில் அணிந்த சந்தனம் நறுமணம் கமழப் பக்க மலையில் உள்ள அரிய குகைகளில் செறிந்த பல பூக்களை வண்டுகள் மொய்க்குமாறு ஆடியும், ஆண் யானையான இரையை அறிவதற்கு ஒதுங்கிய பார்வையுடன் மறைந்து இயங்கும் இயல்பு கொண்ட வலியுடைய ஆண் புலியைப் போல், நம் நல்ல இல்லங்களையுடைய நம்மூர்க் காவலர் தம்மை அறிந்து கொள்ளாத வகையில் தம்மை விரும்பும் நம் விருப்பம் நிறைவுற நம்மிடம் வந்தார். வந்து இனிய எனது உயிர் தளிர்க்கும்படித் தழுவும் போதெல்லாம்

*அன்னை முதலியவர் என் நோய்க்குச் சிறிதும் தொடர் பில்லாத முருகனுக்கு வெறியாட்டெடுத்து அழிந்த அவரின் அறியாமையை நினைந்து யான் உடல் பூரித்துச் சிரித்தேன் அல்லேனோ!" எனக் கூறினாள் தோழி.*

## 383. மார்வை எய்துதல் அரிதாகும்

மெய்யின் தீரா மேவரு காமமொடு
எய்யாய்ஆயினும், உரைப்பல் – தோழி!
கொய்யா முன்னும், குரல் வார்பு, தினையே
அருவி ஆன்ற பைங் கால் தோறும்
இருவி தோன்றின பலவே. நீயே
முருகு முரண்கொள்ளும் தேம்பாய் கண்ணி
பரியல் நாயொடு பல் மலைப் படரும்
வேட்டுவற் பெறலொடு அமைந்தன; யாழ நின்
பூக் கெழு தொடலை நுடங்க, எழுந்து எழுந்து
கிள்ளைத் தெள் விளி இடைஇடை பயிற்றி,
ஆங்கு ஆங்கு ஒழுகாய்ஆயின், அன்னை
'சிறு கிளி கடிதல் தேற்றாள், இவள்' எனப்
பிறர்த் தந்து நிறுக்குவள் ஆயின்,
உறற்கு அரிது ஆகும், அவன் மலர்ந்த மார்பே.

*– பாண்டியன் அறிவுடைநம்பி அக 28*

*"தோழியே! ஒருவர் உடலினின்றும் ஒருவர் உடம்பு அகலாமைக்குக் காரணமாய் மேம்பட்டு வரும் காமப் பெருக்கினால் உனக்குறுதியை நீ அறிய மாட்டாய் அங்ஙன மாயினும் உனக்கு இப்போது உறுதியானதை யான் கூறு வேன், கேட்பாயாக: நீர் பாய்ச்சுதல் இல்லாமையால் அருவி நீர் ஓடாமல் விளங்கும், பசிய கால்வாய் இடந்தோறும் கதிர்கள் வளம் கொண்டவையாய் நீண்ட தினைப் பயிர்கள் கிளிகள் கொய்வதற்கு முன்பே உதிர்ந்தன; ஆதலால் ஆங் காங்குப் பற்பல தட்டைகள் தோன்றின. நீயோ வேறுபட்ட பல மணங்களும் வீசும் தேன் ஒழுகும் கண்ணியுடையவனான விரைந்து ஓடும் நாய்களுடன் பல மலைகளையும் கடந்து செல்லும் வேடுவனை எய்தும் அளவில் அமைந்தாய். நின் மலர்கள் பொருந்திய மாலை அசைய அடிக்கடி எழுந்து*

*சென்று கிளிகளை ஓட்டும் தெளிந்த ஓசையை இடை இடையே எழுப்பி அங்கங்கே போய் வாராமல் இருப்பின் நம் அன்னை 'சிறிய கிளியை இவள் ஓட்டுவதை அறிய மாட்டாள்' என நினைத்துத் தினை காத்தற்குப் பிறரைக் கொணர்ந்து நிறுத்துவாள் அப்படியாயின், தலைவனின் பரந்த மார்பு பின்பு நீ அடைவதற்கு அரிதாகி விடும்" என்றாள் தோழி*

## 384. எள்ளி நகுவோம் தலைவனை

நெருநல் எல்லை ஏனல் தோன்றி,
திரு மணி ஒளிர்வரும் பூணன் வந்து,
புரவலன் போலும் தோற்றம் உறழ்கொள,
இரவல் மாக்களின் பணிமொழி பயிற்றி,
சிறு தினைப் படு கிளி கடீஇயர், பல் மாண்
குளிர் கொள் தட்டை மதன் இல புடையா,
'சூரர மகளிரின் நின்ற நீ மற்று
யாரையோ? எம் அணங்கியோய்! உண்கு' எனச்
சிறுபுறம் கவையினனாக, அதற்கொண்டு
இகு பெயல் மண்ணின் ஞெகிழ்பு, அஞர் உற்ற என்
உள் அவன் அறிதல் அஞ்சி, உள் இல்
கடிய கூறி, கை பிணி விடாஅ,
வெரூஉம் மான் பிணையின் ஒரீஇ, நின்ற
என் உரத் தகைமையின் பெயர்த்து, பிறிது என்வயின்
சொல்ல வல்லிற்றும்இலனே; அல்லாந்து
இனம் தீர் களிற்றின் பெயர்ந்தோன் இன்றும்
தோலாவாறு இல்லை – தோழி! நாம் சென்மோ.
சாய் இறைப் பணைத் தோட் கிழமை தனக்கே
மாசு இன்றாதலும் அறியான், ஏசற்று
என் குறைப் புறனிலை முயலும்
அண்கணாளனை நகுகம் யாமே.

*– நல்வெள்ளியார் அக 32*

*"நேற்றைய பகலில் அழகிய மணி விளங்கும் அணியை அணிந்த ஒருவன் தினைப்புனத்தில் வந்து தோன்றினான் அவன் மன்னன் மகன் போன்ற தனது தோற்றத்துக்கு மாறு*

பட இரந்து உண்ணும் வறியவர் போல் பணிவுடைய சொற்களைப் பலகால் பேசினான் 'சிறிய தினையில் வந்து பொருந்தும் கிளிகளை ஓட்டிய, குளிர் என்ற கருவியுடன் தட்டை என்ற கிளியோட்டும் கருவி ஆகியவற்றைக் கையிலே கொண்டு சூரரமகளிர் என்ற தெய்வப் பெண் போன்று எம்மைப் பார்வையால் தீண்டி வருத்தும் நீவிர் யார்? என்னை வருத்தியவளே! என்று சொல்லி, என் பிடரியினைத் தன் கையால் அணைத்துக் கொண்டான் அவ்வாறு அவன் சொன்ன சொல்லின் கருத்தை உள்ளத்துள் கொண்டு மழை பெய்யப் பெற்ற மண் போல் நெகிழ்ந்து வருந்தியது என் மனம் இந் நிலையை அவன் அறிந்து கொள்வதை யான் அஞ்சினேன் என் மனத்துடன் பொருந்தாத கொடுஞ் சொற்களைக் கூறி அவனுடைய கைகளை அகற்றினேன் அச்சம் கொண்ட பெண் மானைப் போல் விலகி நின்றேன் அவன் தனக்கு அடங்காத என் வன்செயலைக் கண்டமையால் மீண்டும் என்னிடம் கூறும் வலியுடைய சொல் ஒன்றையும் காணாதவன் ஆனான் அவ்வாறாகி, தான் எண்ணிய எண்ணம் நிறைவேறாது போனதால் மனம் வருந்தித் தன் காதல் பெண் யானையை நீங்கிச் செல்லும் ஆண் யானை போன்று சென்றான் அப் புதியவன் அவன் இன்று வந்து நமக்குத் தோற்காதிருத்தல் இல்லை நுட்பமான நல்ல இலக்கணமுடைய வரிகளையுடைய முன் கையை உடைய மூங்கில் போன்ற தோள் இன்பத்தை நுகரும் உரிமை தனக்கே உரியது என்பதை அறியாதவளாய், வருந்தி, என்னால் அடையக்கூடிய காரியத்துக்கு என்னை இரந்து நிற்பதற்கு முயலும் நம் முன் வரும் அவனைப் பழித்து மகிழ்வோம்! தோழி நாம் செல்வோம்! வா!" என்று தோழி தலைவிக்குக் கூறினாள்

## 385. நம் ஊரைக் கூறாது போனேன்

விரி இணர் வேங்கை வண்டு படு கண்ணியன்,
தெரி இதழ்க் குவளைத் தேம் பாய் தாரன்,
அம் சிலை இடவது ஆக, வெஞ் செலல்
கணை வலம் தெரிந்து, துணை படர்ந்து உள்ளி,

வருதல் வாய்வது, வான் தோய் வெற்பன்.
வந்தனன்ஆயின், அம் தளிர்ச் செயலைத்
தாழ்வு இல் ஓங்கு சினைத் தொடுத்த வீழ் கயிற்று
ஊசல் மாறிய மருங்கும், பாய்பு உடன்
ஆடாமையின் கலுழ்பு இல தேறி,
நீடு இதழ் தலைஇய கவின் பெறு நீலம்
கண் என மலர்ந்த சுனையும், வண் பறை
மடக் கிளி எடுத்தல்செல்லாத் தடக் குரல்
குலவுப் பொறை இறுத்த கோல் தலை இருவி
கொய்து ஒழி புனமும், நோக்கி; நெடிது நினைந்து;
பைதலன் பெயரலன்கொல்லோ? ஐ தேய்கு –
'அய வெள் அருவி சூடிய உயர் வரைக்
கூஉம் கணஃது எம் ஊர்' என
ஆங்கு அதை அறிவுறல் மறந்திசின் யானே.

*– வடம வண்ணக்கண் பேரிசாத்தனார் அக 38*

*"வானைத் தீண்டும் மலைகளையுடைய நம் தலைவன் விரிந்த கொத்துகளையுடைய வேங்கை மலரால் ஆன வண்டு கள் மொய்க்கும் தலை மாலை அணிந்தவனாய், ஆராய்ந்து எடுக்கப்பட்ட குவளை மலரால் ஆன தேன் துளிக்கும் மாலை அணிந்த மார்பினனாய், அழகிய வில் இடப் பக்கத்து இருப்பக் கடிய விரைவை யுடைய வலியமைந்த அம்புகளை ஆராய்ந்து எடுத்துக் கொண்டு' தலைவியைக் காணக் கூடுமோ' என்று வருந்தி இன்று வருதலும் மெய்ம்மை அவ் வாறு அத் தலைவன் வரின் அழகிய தளிர்களை உடைய அசோகின் தாழ்தல் இல்லாது ஓங்கிய கிளையில் தொடுத்த தொங்கும் கயிற்றால் ஆன ஊசல் இல்லாத இடம் யானும் தலைவியும் ஒருங்கே பாய்ந்து விளையாடாததால் கலங்கா தனவாய்த் தெளிந்து நீண்ட இதழ்கள் பொருந்தியதால் அழகு பெற்றுள்ள நீல மலர்கள் கண்போல் மலர்ந்த சுனை, அழகிய சிறகையுடைய இளங்கிளி, கொய்து சுமந்து செல்ல இயலாத பெரிய கதிர்களான வளைந்த சுமையை முறித்த கோலான தலையையுடைய தட்டைகள் பொருந்திய, கொய்து விட்ட தினைப்புனம் ஆகியவற்றையும் பார்த்து, அவ் இடங் களில் தலைவியைக் காண மாட்டாது நீள நினைந்து வருந்தித்*

*திரும்பிச் செல்லமாட்டாது வருந்துவன் அல்லனோ! அடியவ ளான யான் எம் தலைவனுக்குச் செய்யக்கூடிய ஒன்றைச் செய்யவில்லை அஃது என்னவென்றால், சுனையினின்றும் வரும் வெண்மையான அருவிகளை உச்சியில் கொண்ட உயர்ந்த மலையில் கூப்பிடு தொலைவில் உள்ளதே எம் ஊர் என, அத் தலைவனைப் பிரிந்த இடத்து, அதனை அறிவுறுத் தலை நான் மறந்து விட்டேன் அதனால் என் அழகு கெடுவ தாகுக" எனத் தோழி தலைமகன் குறை கூறினாள்*

## 386. யான் பெற்ற மகிழ்ச்சி

**மலி பெயல் கலித்த மாரிப் பித்திகத்துக்**
**கொயல் அரு நிலைஇய பெயல் ஏர் மண முகைச்**
**செவ் வெரிந் உறழும் கொழுங் கடை மழைக் கண்,**
**தளிர் ஏர் மேனி, மாஅயோயே!**
**நாடு வறம் கூர, நாஞ்சில் துஞ்ச,**
**கோடை நீடிய பைது அறு காலை,**
**குன்று கண்டன்ன கோட்ட, யாவையும்**
**சென்று சேக்கல்லாப் புள்ள, உள் இல்**
**என்றூழ் வியன்குளம் நிறைய வீசி,**
**பெரும் பெயல் பொழிந்த ஏம வைகறை,**
**பல்லோர் உவந்த உவகை எல்லாம்**
**என்னுள் பெய்தந்தற்றே – சேண் இடை**
**ஓங்கித் தோன்றும் உயர் வரை**
**வான் தோய் வெற்பன் வந்தமாறே!** *– கபிலர் அக 42*

*"மிகுந்த மழையால் தழைத்த மாரிக் காலத்தில் மலர்கின்ற பித்திகத்தின் கொய்யப்படாத தன்மையுடைய மழைக்கு எழுச்சிபெற்ற மணம் பொருந்திய அரும்பின் சிவந்த பின் பக்கத்தைப் போன்று விளங்கும் வளமான கடையையுடைய கண்ணையும் தளிரைப் போன்ற மேனியையும் கொண்ட மாமை நிறத்தையுடையவளே! நெடுந்தொலைவில் உயர்ந்து தோன்றும் உயர்ந்த பக்க மலைகளையுடைய வானத்தை அளாவிய பெரியமலையை உடைய தலைவன் நாம் விரும்பிய படி மணந்து கொள்ள வந்தான் ஆதலால் நான் கொண்ட மகிழ்ச்சி பெரிது அது எத்தகையது என்றால், மழை பெய்யா*

ததால் வறுமை உண்டாகக் கலப்பை முதலிய கருவிகள் செயல் அற்றிடக் கோடை உண்டான பசுமையில்லாத காலத்தில், பெரிய நீர்நிலைகள், குன்றங்களைப் பார்த்தால் போன்ற பெரிய கரையையுடையன; பறவைகள் வந்து தங்காதவை; நீர் இல்லாதவை; வெப்பம் மிக்கவை. இத் தகைய நீர்நிலைகள் யாவும் நிறையுமாறு பெரிய மழை பெய்த, இன்பம் மிக்க விடியற்காலையில், அம் மழை கண்ட பலரும் மகிழ்ந்த மகிழ்ச்சியை எல்லாம் ஒரு சேர எனக்குள் செய்து வைத்தது போன்ற மகிழ்ச்சியை அடைந்தேன்" என்று தலைமகன் பொருள் கடைக் கூட்டிய நெஞ்சிற்குச் சொன்னான்

## 387. தலைவியின் துன்பம் நான் அறியேன்

'அன்னாய்! வாழி! வேண்டு அன்னை, நின் மகள்
பாலும் உண்ணாள், பழங்கண் கொண்டு
நனி பசந்தனள்' என வினவுதி. அதன் திறம்
யானும் தெற்றென உணரேன், மேல் நாள்,
மலி பூஞ் சாரல், என் தோழிமாரோடு
ஒலி சினை வேங்கை கொய்குவம் சென்றுழி
'புலி புலி!' என்னும் பூசல் தோன்ற –
ஒண் செங்கழுநீர்க் கண் போல் ஆய் இதழ்
ஊசி போகிய சூழ் செய் மாலையன்,
பக்கம் சேர்த்திய செச்சைக் கண்ணியன்,
குயம் மண்டு ஆகம் செஞ் சாந்து நீவி,
வரிபுனை வில்லன், ஒருகணை தெரிந்துகொண்டு
'யாதோ, மற்று அம் மா திறம் படர்?' என
வினவி நிற்றந்தோனே, அவற் கண்டு,
எம்முள் எம்முள் மெய்ம் மறைபு ஒடுங்கி
நாணி நின்றனெமாக, பேணி,
'ஐவகை வகுத்த கூந்தல் ஆய் நுதல்
மை ஈர் ஓதி மடவீர்! நும் வாய்ப்
பொய்யும் உளவோ?' என்றனன், பையெனப்
பரி முடுகு தவிர்த்த தேரன், எதிர்மறுத்த
நின் மகள் உண்கண் பல் மாண் நோக்கிச்

சென்றோன்மன்ற, அக் குன்று கிழவோனே.
பகல் மாய் அந்திப் படுசுடர் அமையத்து
அவன் மறை தேஎம் நோக்கி, 'மற்று இவன்
மகனே, தோழி!' என்றனள்
அதன் அளவு உண்டு கோள், மதிவல்லோர்க்கே.

*– தங்கால் முடக்கொற்றனார் அக 48*

*"தாயே, வாழ்க! யான் உரைப்பதை விரும்பிக் கேட்பாயாக: உன் மகள் ஆவின் பாலையும் உண்ணாது துன்பம் கொண்டாள்; மிகவும் பசந்துள்ளாள் இதற்குக் காரணம் யாது? என என்னை வினவுகின்றாய் அதற்குரிய காரணம் முன்னம் ஒரு நாள் மலர்கள் நிறைந்த மலைச் சாரலில் தோழியருடன் தழைத்த கிளையையுடைய வேங்கை மரத்தின் மலர்களைக் கொய்யச் சென்றோம் அப்போது 'புலிபுலி' என்ற ஆரவாரம் எழுந்தது மகளிரின் கண்ணைப் போன்ற ஒளியுடைய அழகிய செங்கழுநீர் மலர்களைக் கோத்துச் சுற்றிக் கட்டிய மாலை அணிந்தவன், தலையின் ஒரு பக்கத்தே கொண்ட வெட்சிப் பூவால் ஆன கண்ணியை உடையவன், மகளிரின் மார்பில் பாய்வதற்குரிய மார்பில் சிவந்த சந்தனம் பூசியவன், வரிந்து கட்டிய வில்லை உடையவன், ஒப்பில்லாத அம்பை ஆராய்ந்து கைக் கொண்டவன் இத்தகைய ஒரு தலைவன் தோன்றினான் தோன்றி 'அப் புலி சென்ற வழி யாதோ?' என்று வினவியபடி நின்றான் நாங்கள் அவனைக் கண்டு ஒருவருக்குள் ஒருவராய் எங்கள் உடம்பு மறையும் படி உள்ளம் ஒடுங்கி நாணம் கொண்டு நின்றோம் விரும்பி மூவகையாக வகுக்கப்பட்ட கூந்தலையும் 'அழகிய நெற்றியையும் உடைய கரிய கூந்தலை உடைய மடவீர்! உம் வாயில் பொய்யும் உள்ளதோ' எனக் கூறினான் மலை நாட்டுக்குரிய அவன் குதிரைகளின் விரைவினை அடக்கி மெல்லெனச் செலுத்தும் தேரில் அமர்ந்து உன் மகளின் மையுண்ட கண்கள் அவனை நோக்குங்கால் தான் நோக்காது இருந்தும், அவள் நோக்காமல் நிலத்தை நோக்குங்கால் தான் நோக்கியும் இங்ஙனம் ஒருவரை ஒருவர் மாறிப் பல முறையும் நோக்கிய பின் செல்லவில்லை பகற் பொழுது மாயும் - கதிரவன் மறையும் மாலைநேரத்தில் அவன் மறைந்திடும் திசையை நோக்கி,*

*'தோழியே இவன் ஓர் ஆடவனே' என்றாள் உன் போன்று ஆராய்ந்து உணரும் அறிவு வன்மை உடையவர்க்கு அதன் அளவாக ஒரு கோட்பாடு உண்டு இதனையன்றி வேறு ஏதும் காரணம் அறியேன்" என்று செவிலித்தாய்க்கு தோழி அறத்தோடு நின்று கூறினாள்*

## 388. காதலை வெளிப்படையாகக் கூறேல்

'வலந்த வள்ளி மரன் ஓங்கு சாரல்,
கிளர்ந்த வேங்கைச் சேண் நெடும் பொங்கர்ப்
பொன் நேர் புது மலர் வேண்டிய குறமகள்
இன்னா இசைய பூசல் பயிற்றலின்,
"ஏ கல் அடுக்கத்து இருள் அளைச் சிலம்பின்
ஆ கொள் வயப் புலி ஆகும் அஃது" எனத் தம்
மலை கெழு சீறூர் புலம்ப, கல்லெனச்
சிலையுடை இடத்தர் போதரும் நாடன்
நெஞ்சு அமர் வியல் மார்பு உடைத்து என அன்னைக்கு
அறிவிப்பேம்கொல்? அறியலெம்கொல்?' என
இருபாற் பட்ட சூழ்ச்சி ஒருபால்
சேர்ந்தன்று – வாழி, தோழி! – 'யாக்கை
இன் உயிர் கழிவதுஆயினும் நின் மகள்
ஆய்மலர் உண்கண் பசலை
காம நோய்' எனச் செப்பாதீமே.

*– நொச்சி நியமங்கிழார் அக 52*

*"தோழி வாழி! நம் தாய்க்கு, மரங்கள் ஓங்கியுயர்ந்துள்ள பக்க மலையிடத்துச் சுற்றிய கொடிகள், சுற்றிச் செழித்த வேங்கை மரம் அம் மரத்தினது மிகவும் உயர்ந்துள்ள கிளை யிலே உள்ள பொன் போன்ற புது மலர்களைப் பறிக்க விரும்பிய குறமகள், துன்பத்தைத் தரும் ஒலியையுடைய 'புலி, புலி' என்னும் ஆரவாரத்தை அடுத்து எழுப்பினாள், அதனால் உயர்ந்த பாறைகளின் அடுக்கையுடைய இருண்ட குகையைப் பெற்ற பக்க மலையில் பசுவைக் கவர்கின்ற வலிய புலிய வந்த தால் எழுந்த ஒலியாகும் என்று எண்ணி வில்லை இடக்கை யில் கொண்ட வேடர், தம் மலையை அடுத்துள்ள ஊர் தனிப்பக் 'கல்' என்ற ஓசையுடன் அந்தப் புலியைக் கொல்வ*

*தற்குக் கூடி வரும் மலை நாடன் நம் தலைவன் அவன் தன் நெஞ்சைப் பெரிதும் விரும்பும் அகன்ற மார்புதான் என் பசலை நோய்க்குக் காரணம் என்று மறையை வெளிப்படுத்தி நம் தாய்க்கு அறிவிப்போமா? அறிவிக்காது விட்டுவிடுவோமா? என்று இதுவரை என் மனத்தில் இருவகையாய்க் கிடந்த என் ஆராய்ச்சி இப்போது தாய்க்கு அறிவித்து விடுவோம் என்ற முடிவுக்கு வந்து விட்டது' ஆகவே என் உயிர் நீங்குவதாயினும் நீ அறத்தோடு நின்று மறையை வெளிப்படுத்தும் போது என் உயிர் என் உடலை விட்டுப் போவதானாலும் போகட்டும், அழகிய நெய்தல் மலரைப் போன்ற நின் மகளின் மை பூசப் பெற்ற கண்ணில் உள்ள பசலைக்குக் காரணம், அவள் மலை நாடனிடம் கொண்ட காம நோயே யாம் என்று உரைக்காதே!" என்று தலைவி வேறுபட்டமை அறிந்த செவிலித் தாய்க்குத் தோழி சொன்னாள்*

## 389. இந்நிலை இனிது

இன் இசை உருமொடு கனை துளி தலைஇ,
மன் உயிர் மடிந்த பானாட் கங்குல்,
காடு தேர் வேட்டத்து விளிவு இடம் பெறாஅது,
வரி அதள் படுத்த சேக்கை, தெரி இழைத்
தேன் நாறு கதுப்பின் கொடிச்சியர் தந்தை,
கூதிர், இல் செறியும் குன்ற நாட!
வனைந்து வரல் இள முலை ஞெமுங்க, பல் ஊழ்
விளங்கு தொடி முன்கை வளைந்து புறம் சுற்ற
நின் மார்பு அடைதலின் இனிது ஆகின்றே –
நும் இல் புலம்பின் நும் உள்ளுதொறும் நலியும்
தண்வரல் அசைஇய பண்பு இல் வாடை
பதம் பெறுகல்லாது இடம் பார்த்து நீடி –
மனைமரம் ஒசிய ஒற்றிப்
பலர் மடி கங்குல், நெடும் புறநிலையே.

*– மதுரைப் பண்ட வாணிகன் இளந்தேவனார் அக 58*

*"கூதிர்ப்பருவத்தில் இனிய ஒசையுடைய இடியோடு மிக்க மழை பெய்ய உயிர்கள் யாவும் உறங்கும் நள்ளிரவு; ஆராய்ந்*

தெடுத்த அணிகளையும் தேன் மணக்கும் கூந்தலையும் உடைய குறத்தியரின் தந்தையர் காட்டில் விலங்குகளை ஆராய்ந்து செய்யும் வேட்டையில், உறங்கும் இடம் பெறா மல் புலித்தோல் விரித்துள்ள படுக்கையில் வீட்டில் வந்து தங்கியுள்ளனர் இத்தகைய இயல்புடைய மலை நாடனே! உம்மைக் கூடப்பெறாது தனித்திருக்கும் பொழுதில் உம்மை எண்ணுந்தோறும் யான் வருந்துவதற்கு இடமான குளிர்ச்சி யுடன் அசைந்து வரும் இனியதல்லாத வாடைக் காற்றுக்குக், குறித்த காலத்தில் உம் வருகையைப் பெறாது, நீவிர் வருங் காலத்தை நோக்கி நீண்ட நேரம் தாழ்த்தி மனையில் உள்ள மரம் முறியுமாறு வளைத்துப் பிடித்தபடி, பலரும் உறங்கும் இரவில் நீண்ட நேரம் வெளியே நின்று கொண்டிருப்பேன் இந் நிலையானது, பண்ணப்பட்டது போல் எழுகின்ற என் முலைகள் அழுந்தப் பல முறை வளையல் அணிந்த முன்கை வளைந்து நின் முதுகைச் சுற்றிக் கொள்ள, உன் மார்பைத் தழுவுதலை விட இனிதாய் உள்ளது" என்று தொலைவிலி ருந்து திரும்பிய தலைவனிடம் தலைவி தன் மெய்மலி உவ்கையைச் சொன்னாள்

## 390. அவள் வரவில்லையே

அயத்து வளர் பைஞ்சாய் முருந்தின் அன்ன
நகைப் பொலிந்து இலங்கும் எயிறு கெழு துவர் வாய்,
ஆகத்து அரும்பிய முலையள், பணைத் தோள்,
மாத் தாட் குவளை மலர் பிணைத்தன்ன
மா இதழ் மழைக் கண், மாஅயோளொடு
பேயும் அறியா மறை அமை புணர்ச்சி
பூசல் துடியின் புணர்பு பிரிந்து இசைப்ப,
கரந்த கரப்பொடு நாம் செலற்கு அருமையின்
கடும் புனல் மலிந்த காவிரிப் பேரியாற்று
நெடுஞ் சுழி நீத்தம் மண்ணுநள் போல,
நடுங்கு அஞர் தீர முயங்கி, நெருநல்
ஆகம் அடைதந்தோளே – வென் வேற்
களிறு கெழு தானைப் பொறையன் கொல்லி
ஒளிறு நீர் அடுக்கத்து வியல்அகம் பொற்பக்

கடவுள் எழுதிய பாவையின்
மடவது மாண்ட அயோளே. — *பரணர் அக 62*

*"வெற்றியுடைய வேலையும் யானைகள் மிக்க படையையும் உடைய சேர மன்னனின் கொல்லி மலையில் விளங்கும் அருவி நீரையுடைய பக்கமலையின் இடம் அழகு பெறக் கடவுள் தன்மை பெறுமாறு வரையப்பட்டுள்ள பாவை போன்ற மடப்பத்தால் சிறந்த மாமை நிறமுடையவள் நம் காதலி நீர்நிலையில் வளர்ந்த பஞ்சாய்க் கோரையின் அடிக் குருத்தைப் போன்ற புன்முறுவலால் பொலிவுற்ற பற்களை உடைய சிவந்த வாயினைப் பெற்றவள்; மார்பிடத்தில் பொருந்திய கொங்கைகளை உடையவள்; மூங்கில் போன்ற தோளையும் கரிய தண்டையும் உற்ற குவளையின் இரண்டு மலர்களை இணைத்து வைத்தாற் போன்ற கருமையான, இமையைப் பெற்ற விழிகளை உடையவள் இத்தகையவளுடன் யாம் இதுவரை நிகழ்த்திய பேயும் அறிய இயலாத மறைவை உடையது களவுப் புணர்ச்சி அது இன்று ஆரவாரமுடைய துடியினைப் போல், இவ்வூர்ப் பெண்டிர் தமக்குள் கூடியும் பிரிந்தும் போர்க் களத்தில் முழக்கும் துடி ஒலியைப் போல அலர் தூற்றுதலால் முன்பு போல மறைந்த மறைப்புடன் நாம் செல்வதற்கு அருமை மிக்க காவிரிப் பேர் ஆற்றில் நெடிது சுழலும் சுழிகளைக் கொண்ட வெள்ளத்தில் படிந்து குளிப்பவள் போல நேற்று மனம் நடுங்கும் துன்பம் போகத் தழுவி என் மார்பில் பொருந்திக் கிடந்தாள் அத்தகையவள் இன்று வரவில்லையே! என்ன செய்வோம்?" என்று அல்ல குறிபட்டவேளை தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறினான்*

## 391. காண்போம் தலைவரை

அன்னாய்! வாழி, வேண்டு அன்னை! நம் படப்பைத்
தண் அயத்து அமன்ற கூதளம் குழைய,
இன் இசை அருவிப் பாடும் என்னதூஉம்
கேட்டியோ? வாழி, வேண்டு அன்னை! நம் படப்பை
ஊட்டியன்ன ஒண் தளிர்ச் செயலை
ஓங்கு சினை தொடுத்த ஊசல், பாம்பு என,
முழு முதல் துமிய உரும் எறிந்தன்றே;

பின்னும் கேட்டியோ' எனவும் அஃது அறியாள்,
அன்னையும் கனை துயில் மடிந்தனள். அதன்தலை
மன் உயிர் மடிந்தன்றால் பொழுதே; காதலர்
வருவர்ஆயின், 'பருவம் இது' எனச்
சுடர்ந்து இலங்கு எல் வளை நெகிழ்ந்த நம்வயின்
படர்ந்த உள்ளம் பழுது அன்றாக
வந்தனர் – வாழி, தோழி! – அந்தரத்து
இமிழ் பெயல் தலைஇய இனப் பல கொண்மூத்
தவிர்வு இல் வெள்ளம் தலைத்தலை சிறப்பு,
கன்று கால் ஒய்யும் கடுஞ் சுழி நீத்தம்
புன் தலை மடப் பிடி பூசல் பல உடன்
வெண் கோட்டு யானை விளி படத் துழவும்
அகல் வாய்ப் பாந்தட் படாஅர்ப்
பகலும் அஞ்சும் பனிக் கடுஞ் சுரனே. – *ஊட்டியார் அக 68*

*"தோழி வாழி; துயிலெழுவாயாக, நம் தாயும் பெருந் தூக்கத்தில் ஆழ்ந்துள்ளாள் அதை, நான் எவ்வாறு அறிந் தேன் என்றால், அவளது பக்கத்தில் சென்றேன் 'தாயே, கேட்பாயாக!' என்றேன் நம் புழைக்கடைத் தோட்டத்தில் குளத்தில் செறிந்து வளர்ந்த கூதளம் செடி குழைந்து போகுமாறு அருவிநீர் இனிய நல்லிசை பாடுகின்றது அந்த ஓசையைச் சிறிதேனும் கேட்டாயோ, தாயே, வாழி! நான் கூறுவதை விரும்பிக் கேட்பாயாக: நம் புழைக்கடைத் தோட்டத்தில் செம்மை ஊட்டப்பட்டது போன்று சிவந்த ஒண்மையான தளிரையுடைய அசோக மரத்தின் கிளையில் கட்டப்பட்டிருந்த ஊசல் கயிற்றைப் பாம்பு என எண்ணி அந்த அசோக மரம் முற்றும் அழியுமாறு இடியை முகில் வீழ்த்தியதே, அதன் ஒலியைக் கேட்டாயோ என்று கேட்க வும் அன்னை அறியாது கிடக்கின்றாள் அவள் துயிலில் ஆழ்ந்துள்ளாள் என அறிந்து கொண்டேன் அதன் மேலும் மற்ற உயிர்களும் உறங்கும் நள்ளிரவுப் பொழுதாக உள்ளது நம்மிடம் பெரும் காதல் கொண்ட தலைவர் நமக்கு அருள் செய்ய வருவாரானால் அதற்குரிய அமையம் இதுவாகும் என, விட்டு விளங்கும் ஒளியுடைய வளை கழன்றிடும் நம் மிடத்து அன்பால் பொருந்தியுள்ள அவரது நெஞ்சம் குற்ற*

## 393. நினைத்தது உண்டோ எம்மை?

'நனந்தலைக் கானத்து ஆளி அஞ்சி,
இனம் தலைத்தரூஉம் எறுழ் கிளர் முன்பின்,
வரி ஞிமிறு ஆர்க்கும், வாய் புகு, கடாத்து
பொறி நுதற் பொலிந்த வயக் களிற்று ஒருத்தல்
இரும் பிணர்த் தடக் கையின், ஏமுறத் தழுவ,
கடுஞ்சூல் மடப் பிடி நடுங்கும் சாரல்
தேம் பிழி நறவின் குறவர் முன்றில்
முந்தூழ் ஆய் மலர் உதிர, காந்தள்
நீடு இதழ் நெடுந் துடுப்பு ஒசிய, தண்ணென
வாடை தூக்கும் வருபனி அற்சிரம்,
நம் இல் புலம்பின், தம் ஊர்த் தமியர்
என் ஆகுவர்கொல் அளியர்தாம்?' என,
எம் விட்டு அகன்ற சில் நாள், சிறிதும்
உள்ளியும் அறிதிரோ – ஓங்குமலை நாட!
உலகுடன் திரிதரும் பலர் புகழ் நல் இசை
வாய்மொழிக் கபிலன் சூழ, சேய் நின்று
செழுஞ் செய்ந் நெல்லின் விளைகதிர் கொண்டு
தடந் தாள் ஆம்பல் மலரொடு கூட்டி,
யாண்டு பல கழிய, வேண்டுவயிற் பிழையாது,
தாள் இடூஉக் கடந்து, வாள் அமர் உழக்கி,
ஏந்துகோட்டு யானை வேந்தர் ஒட்டிய,
கடும் பரிப் புரவிக் கை வண் பாரி
தீம் பெரும் பைஞ் சுனைப் பூத்த
தேம் கமழ் புது மலர் நாறும் – இவள் நுதலே?

*– மதுரை நக்கீரனார் அக 78*

*"உயர்ந்த மலை நாட்டையுடைய பெருமானே! தன் இனமான யானைகளைக் காத்தற் பொருட்டுத் தன்னிடத்தில் சூழ்ந்து கொள்ளுமாறு செய்யும் விளங்கும் பேராற்றலையும் வரிகளையுமுடைய வண்டுகள் ஒலிக்கும் வாயிற் புகும் மத நீரையும் உடைய புள்ளிகள் பொருந்திய நெற்றியால் பொலிவுற்ற ஆண் யானைகளின் தலைவன் தன் கரிய கரடு முரடான கையால் காவல் அமையுமாறு தழுவும் அதன்*

காதலியான முதல் கருப்பத்தை உடைய இளம் பிடி யானை யானது அகன்ற இடத்தையுடைய காட்டில் வாழ்கின்ற யாளிக்கு மிகவும் அஞ்சி நடுங்கும் மலைச் சாரல் அதனி டத்தே, தேனில் பிழிந்தெடுத்த கள்ளை உடைய குறவரின் முற்றத்தில் மூங்கிலின் அழகிய பூக்கள் உதிரும், நீண்ட இதழ்களை உடைய காந்தள் பூவின் தாள்கள் நீண்டு முறியும், தண் என்று வாடைக்காற்று வீசிடும் முன் பனிக் காலத்தில் எம்மை விட்டு அகன்று இருந்த சில நாள்களுள், நம்மைப் பிரிந்திருக்கும் தனிமையாலே தம் ஊரில் தனித்திருக்கும் இரக்கத்துக்கு உரியவர் இவர் என்ன ஆவாரோ என்று எண்ணிப் பார்த்ததும் உண்டோ? சொல்லுங்கள்! உலகு உள்ள வரையும் பலரும் புகழும் நல்ல புகழினையும் வாய்மை மொழியையும் உடைய கபிலன் என்ற புலவர் பெருமான் ஆய்ந்து வினையாற்ற, கிளிகள், தொலைவான வளம் வாய்ந்த வயல்கள் உள்ள இடத்தினின்றும் விளைந்த நெற்கதிர்களைக் கொய்து வருதலால் அவற்றைக் கொண்டு அரிசியாக்கி அப் பறம்பு மலையில் உள்ள பெரிய தண்டுகளை உடைய ஆம் பல் பூவுடன் சமைத்து உண்டு வாழ்ந்து பல ஆண்டுகள் கழிந்தன கழியவும், தக்க காலத்தைக் கருதியிருந்து, போர் செய்யத் தக்க நேரம் வாய்த்தபோது அதனைத் தப்பவிடாமல் பகைவர் வாட்போரினைக் கலக்கி முயற்சியால் வென்று நிமிர்ந்த கொம்புகளையுடைய ஆண் யானைகளை உடைய மூவேந்தரையும் தோற்றோடும்படிச் செய்த மிக்க விரைவை யும் வள்ளன்மையும் உடையவன் பாரி அவனுடைய 'இனிய பெரிய பசுமையான சுனையில் பூத்த தேன் மணம் வீசும் புதிய மலர் போன்ற இவளின் நெற்றியினைச் சிறிதளவேனும் நினைத்துப் பார்த்ததுண்டோ! சொல்லுங்கள்!" என்று களவுக் காலத்துப் பிரிந்து சென்ற தலைவனுக்குத் தோழி வினவினாள்

## 394. நான் ஒருத்தி துன்புறல் ஏன்?

ஆடு அமைக் குயின்ற அவிர் துளை மருங்கின்
கோடை அவ் வளி குழலிசை ஆக,
பாடு இன் அருவிப் பனி நீர் இன் இசை
தோடு அமை முழவின் துதை குரல் ஆக,

மில்லையாகுமாறு, வானில் இடித்ததுடன் பெய்தலைச் செய்த கூட்டமான பல முகில்கள் ஓயாமல் பெய்த மழையால் உண்டாகிய வெள்ளம் இடந்தோறும் மிகுகின்றது அதனால் யானைக் கன்றின் காலை இழுத்துச் செல்லும் கடிய சுழியை உற்ற வெள்ளத்தில் மென்மையான தலையைப் பெற்ற இளைய பெண் யானைகளின் ஆரவாரங்கள் பலவுடன் வெண்ணிறக் கொம்புகளையுடைய ஆண் யானைகளும் ஆரவாரம் ஏற்படக் கன்றுகளைப் பற்றுதற்கு நீரைத் துழாவும் இடம் அகன்ற பரந்த பாம்புச் செடிகளை உடையது இத் தகைய இயல்புடைய பகற்காலத்தில் இயங்குவதற்கும் மக்கள் அஞ்சும், நடுக்கம் தரும் கடிய நெறில் நம் தலைவர் வந்துள்ளார் அவரை நாம் எதிர்கொள்வோம்" எனத் தலைவன் இரவுக்குறி வந்த காலத்து தோழி தலைவிக்குக் கூறினாள்

## 392. தவறுடையேன் யானே

இருள் கிழிப்பது போல் மின்னி, வானம்
துளி தலைக்கொண்ட நளிபெயல் நடுநாள்,
மின்மினி மொய்த்த முரவு வாய்ப் புற்றம்
பொன் எறி பிதிரின் சுடர வாங்கி,
குரும்பி கெண்டும் பெருங்கை ஏற்றை
இரும்பு செய் கொல் எனத் தோன்றும் ஆங்கண்,
ஆறே அரு மரபினவே, யாறே
கட்டுநர்ப் பனிக்கும் சூருடை முதலைய;
கழை மாய் நீத்தம் கல் பொருது இரங்க,
'அஞ்சுவம் தமியம்' என்னாது, மஞ்சு சுமந்து
ஆடுகழை நரலும் அணங்குடைக் கவாஅன்
ஈர் உயிர்ப் பிணவின் வயவுப் பசி களைஇய,
இருங் களிறு அட்ட பெருஞ் சின உழுவை
நாம நல்லராக் கதிர்பட உமிழ்ந்த
மேய் மணி விளக்கின் புலர ஈர்க்கும்
வாள் நடந்தன்ன வழக்கு அருங் கவலை,
உள்ளுநர் உட்கும் கல் அடர்ச் சிறு நெறி,
அருள் புரி நெஞ்சமொடு எஃகு துணையாக

வந்தோன் கொடியனும் அல்லன்; தந்த
நீ தவறு உடையையும் அல்லை; நின்வயின்
ஆனா அரும் படர் செய்த
யானே, தோழி! தவறு உடையேனே.

*– எருமை வெளியனார் மகனார் கடலனார் அக 72*

*"தலைவர் வரும் வழிகள் முகில் இருளைக் கிழிப்பதைப் போன்று மின்னித் துளிகளைத் தன்னிடத்தே உடைய மிக்க மழையையுடைய நள்ளிரவில் மின்மினிப் பூச்சிகள் மொய்த்துள்ள சிதைந்த வாயையுடைய புற்றினை இரும்பினைக் காய்ச்சி அடிக்கும்போது சிதறுகின்ற பிதிர்போல் அம் மின்மினிகள் ஒளிவிடப் பெயர்த்துப் புற்றாஞ் சோற்றைத் தோண்டி எடுக்கும் பெரிய கையையுடைய ஆண் கரடி இரும்பு வேலை செய்யும் கொல்லனைப் போன்று தோன்றும் அவ் இடத்துச் சொல்வதற்கு அரிய இயல்புடையவை ஆறு ஓடத்தின் கோல் மறையும் வெள்ளம் கல்லில் மோதி ஒலிக்க கடக்க எண்ணுபவரையும் நடுங்கச் செய்யும் அச்சம் கொண்ட முதலைகளை உடையன யாம் தமியம் இத்தகைய நெறிகளில் போவதற்கு அஞ்சுவோம் என நினைக்காது, கொண்டலை உச்சியில் கொண்டசையும் மூங்கில் ஒலிக்கின்ற தெய்வங்களை உடைய பக்க மலையில் கருக் கொண்டிருக்கும் பெண் புலியின் வேட்கை மிகுந்த பசியைப் போக்க, பெரிய ஆண் பன்றியினைக் கொன்ற மிக்க சினம் கொண்ட ஆண் புலி அச்சம் அளிக்கும் நல்ல பாம்பு மேய்வதற்குச் செல்ல ஒளி ஏற்படுத்த இழுத்துக்கொண்டு செல்லும் அவை கூரிய கற்களை உடைமையால் வாளில் நடப்பதைப் போன்று விளங்கும் செல்வதற்கு அரிய வழி கடந்து போக எண்ணுபவர் அஞ்சும் கற்செறிப்பை உடைய சிறிய நெறி நம்மீது அருள் கொண்ட நெஞ்சமொடு வேலைத் துணையாகக் கொண்டு வந்த தலைவனும் கொடியன் அல்லன் அவனைக் குறியின் கண் வரச்செய்த நீயும் தவறு உடையை அல்லை உன்னிடம் நீங்காத அரிய துன்பத்தை உண்டாக்கிய யானே தவறுடையேன்!" என்று தலைவன் ஒருபுறம் நிற்கையில் அவள் கேட்பத் தலைவி தோழியிடம் கூறினாள்*

கணக் கலை இருக்கும் கடுங் குரற் தூம்பொடு,
மலைப் பூஞ் சாரல் வண்டு யாழ் ஆக,
இன் பல இமிழ் இசை கேட்டு, கலி சிறந்து,
மந்தி நல் அவை மருள்வன நோக்க
கழை வளர் அடுக்கத்து, இயலி ஆடு மயில்
நனவுப் புகு விறலியின் தோன்றும் நாடன்
உருவ வல் விற் பற்றி, அம்பு தெரிந்து
செருச் செய் யானை செல் நெறி வினாஅய்
புலர் குரல் ஏனற் புழையுடைய ஒரு சிறை
மலர் தார் மார்பன், நின்றோற் கண்டோர்
பலர்தில், வாழி – தோழி! – அவருள்,
ஆர் இருட் கங்குல் அணையொடு பொருந்தி
ஓர் யான் ஆகுவது எவன்கொல்
நீர் வார் கண்ணொடு, நெகிழ் தோளேனே? *– கபிலர் அக 82*

*"என் தோழியே, வாழ்க' அசையும் மூங்கில் துளைக்கப் பெற்று விளங்கும் துளையில் அழகிய மேல் காற்றினால் எழும் ஒலி குழலிசையாகவும், தோற்றிய இனிய அருவியின் குளிர்ந்த நீரின் இனிய ஓசை கூட்டமான தண்ணுமைகளின் நெருங்கிய இசையாகவும், கூட்டமான கலைமான்களின் தாழ ஒலிக்கும் கடிய குரல் பெருவங்கியத்தின் இசையாகவும், அதனுடன் மலைச்சாரலில் உள்ள மலர்களினிடையே உள்ள வண்டின் ஒலி இனிய யாழிசையாகவும் விளங்கும், ஒத்திசைய வண்ணம் ஒலிக்கும், இசைகளைக் கேட்டு ஆரவாரம் மிகுந்து குரங்குகளாகிய நல்ல அவையினர் வியப்புற்றுப் பார்க்க, மூங்கில்கள் வளர்வதற்கு இடமான பக்க மலைகளில் அங்கு மிங்கும் கூத்தாடும் மயில்கள்; விழாக்காலத்தில் கூத்தாடும் அவையில் புகுந்து ஆடும் கூத்தியர் போலத் தோன்றும் இத்தகைய இயல்பு கொண்ட மலை நாட்டையுடைய மலரால் ஆன மாலையை அணிந்த மார்பை உடைய தலைவன் அழகிய வில்லைக் கையில் பற்றிச் சிறந்த கணையை ஆராய்ந் தெடுத்துத் தன்னால் அம்பு எய்யப்பெற்ற யானை சென்ற வழியை வினவிக் கொண்டு முதிர்ந்த கதிரையுடைய தினைப் புனத்தின் வாயிலில் ஒரு பக்கத்தே நின்றான் அவனைக் கண்ட மகளிர் பலர்; அங்ஙனம் கண்டவர்களுள் நான் ஒருத்தி*

*மட்டுமே கரிய இருள் மிக்க இரவில் படுக்கையில் கிடந்து நீர் வடியும் கண்ணுடன் மெலிந்த தோள்களையும் உடைய வள் ஆனேன் நான் ஒருத்தி மட்டும் இங்ஙனம் ஆவதற்குக் காரணம் யாதோ! அறியேன்!" என்று தலைவி தோழியிடம் கூறினாள்*

## 395. அரிய நெறியில் தலைவன்

முந்தைச் சுவற் கலித்த மூரிச் செந்தினை
ஓங்கு வணப் பெருங் குரல் உணீஇய, பாங்கர்ப்
பகுவாய்ப் பல்லிப் பாடு ஓர்த்து, குறுகும்
புருவைப் பன்றி வரு திறம் நோக்கி,
கடுங் கைக் கானவன் கழுதுமிசைக் கொளீஇய
நெடுஞ் சுடர் விளக்கம் நோக்கி, வந்து, நம்
நடுங்கு துயர் களைந்த நன்னாராளன்
சென்றனன்கொல்லோ தானே – குன்றத்து
இரும் புலி தொலைத்த பெருங் கை யானைக்
கவுள் மலிபு இழிதரும் காமர் கடாஅம்
இருஞ் சிறைத் தொழுதி ஆர்ப்ப, யாழ் செத்து
இருங் கல் விடர் அளை அசுணம் ஓர்க்கும்
காம்பு அமல் இறும்பில் பாம்பு படத் துவன்றி
கொடு விரல் உளியம் கெண்டும்
வடு ஆழ் புற்றின வழக்கு அரு நெறியே?

*– ஈழத்துப் பூதன் தேவனார் அக 88*

*"முதிய கொல்லையான மேட்டு நிலத்தில் தழைத்த வளமான செந்தினையின் உயர்ந்து வளைந்த பெரிய கதிரை உண்ண, பிளவுபட்ட வாயையுடைய பல்லியானது ஒலித் தலை ஆராய்ந்து அதைக் கேட்டவுடன் இளம் பன்றி வரு கிறது. அதனைப் பார்த்து வலிய கையையுடைய குறவன் வந்து பரண்மீது ஒளிமிக்க விளக்கைக் கொளுத்தி வைத்தனன் அவ் விளக்கை அடையாளமாகக் கொண்டு வந்து நமது நடுக்கத்தைத் தரும் துன்பத்தை ஒழித்தனன், நம் நன்மை யுடையவனான தலைவன்*

*மலையில் உள்ள பெரிய புலியைக் கொல்லும் பெரிய கையையுடைய யானையின் கன்னத்தினின்றும் பெருகி இழியும்*

*அழகிய மத நீரில் கரிய சிறகை யுடைய வண்டின் கூட்டம் ஒலிக்க, அந்த ஓசையை யாழின் இசையாகும் என நினைத்துப் பெரிய மலையின் பிளப்பான குகையில் உள் அசுணங்கள் உற்றுக் கேட்கும் அங்கு மூங்கில் நிறைந்து விளங்கும் அத் தகைய சிறிய காட்டில் பாம்பு இறந்து போகுமாறு நெருங்கி வளைந்த விரலையுடைய கரடி புற்றுகளைத் தோண்டும் அத்தகைய புற்றுகளை உடைய செல்வதற்கு அரிய நெறியில் நம் தலைவன் சென்றானோ!" என்று இரவுக் குறி வந்த தலைவன் ஒரு பக்கம் இருக்கையில் தலைவி சொன்னாள்*

## 396. வருக பகலில்

நெடு மலை அடுக்கம் கண் கெட மின்னி,
படு மழை பொழிந்த பானாட் கங்குல்,
குஞ்சரம் நடுங்கத் தாக்கி, கொடு வரிச்
செங் கண் இரும் புலி குழுமும் சாரல்
வாரல் – வாழியர், ஐய! – நேர் இறை
நெடு மென் பணைத் தோள் இவளும் யானும்
காவல் கண்ணினம் தினையே; நாளை
மந்தியும் அறியா மரம் பயில் இறும்பின்
ஒண் செங் காந்தள் அவிழ்ந்த ஆங்கண்
தண் பல் அருவித் தாழ்நீர் ஒரு சிறை
உருமுச் சிவந்து எறிந்த உரன் அழி பாம்பின்
திருமணி விளக்கின் பெறுகுவை –
இருள் மென் கூந்தல் ஏமுறு துயிலே.

*– மதுரைப் பாலாசிரியர் நற்றாமனார் அக 92*

*"ஐயனே நீ வாழ்க! உயர்வான மலையின் பக்கங்களில் கண்ணின் ஒளி கெடுமாறு மின்னி, மிகுந்த மழை பொழிந்த பாதி இரவான இருளில் யானையும் நடுங்கும்படித் தாக்கி வளைந்த கோடுகளையும் சிவந்த கண்ணையும் உடைய பெரிய புலி முழங்குகின்ற மலைச் சாரலில் நீ வாராது இருப் பாயாக மென்மைசார் முன்கையையும் நீண்ட மெல்லிய மூங்கிலைப் போன்ற தோளையும் உடைய இவளும் யானும் தினைப்புனம் காத்தற்கு எண்ணியுள்ளோம். எனவே, நாளைப் பகற் பொழுதில் மந்திகளும் ஏறி அறியாத மரங்கள் மிக்க*

*காட்டில் ஒளியுடைய செங்காந்தள் மலர்ந்திருக்கும் அவ் இடத்தில் குளிர்ந்த பல அருவிகள் பாயும் சுனையின் ஒரு பக்கத்தில் இடியேறு சினந்து தாக்கியதால் வலிமை அழிந்த பாம்பினது அழகிய தலை மணியான விளக்கின் ஒளியில் தலைவியின் இருண்ட மெல்லிய கூந்தலின் இன்பம் அடையும் உறக்கத்தை நீ அடைவாயாக!" என்று இரவில் தலைவியிடம் வந்து செல்லும் தலைவனுக்குத் தோழி மணம் வேண்டினாள்*

## 397. தாய் வெறியாட்டு நிகழ்த்துகிறாள்

பனி வரை நிவந்த பயம் கெழு கவாஅன்,
துனி இல் கொள்கையொடு அவர் நமக்கு உவந்த
இனிய உள்ளம் இன்னாஆக,
முனிதக நிறுத்த நல்கல் எவ்வம்
சூர் உறை வெற்பன் மார்பு உறத் தணிதல்
அறிந்தனள் அல்லள், அன்னை வார்கோல்
செறிந்து இலங்கு எல் வளை நெகிழ்ந்தமை நோக்கி,
கையறு நெஞ்சினள் வினவலின், முதுவாய்ப்
பொய் வல் பெண்டிர் பிரப்பு உளர்பு இரீஇ,
'முருகன் ஆர் அணங்கு' என்றலின், அது செத்து
ஓவத்தன்ன வினை புனை நல் இல்
'பாவை அன்ன பலர் ஆய் மாண் கவின்
பண்டையின் சிறக்க, என் மகட்கு' எனப் பரைஇ
கூடு கொள் இன் இயம் கறங்க, களன் இழைத்து
ஆடு அணி அயர்ந்த அகன் பெரும் பந்தர்,
வெண் போழ் கடம்பொடு சூடி, இன் சீர்
ஐது அமை பாணி இரீஇ, கைபெயரா,
செல்வன் பெரும் பெயர் ஏத்தி, வேலன்
வெறி அயர் வியன் களம் பொற்ப, வல்லோன்
பொறி அமை பாவையின் தூங்கல் வேண்டின்
என் ஆம்கொல்லோ? – தோழி! – மயங்கிய
மையற் பெண்டிர்க்கு நொவ்வல் ஆக
ஆடிய பின்னும் வாடிய மேனி
பண்டையின் சிறவாதுஆயின், இம் மறை
அலர் ஆகாமையோ அரிதே, அஃதான்று

அறிவர் உறுவிய அல்லல் கண்டருளி
வெறி கமழ் நெடு வேள் நல்குவன் எனினே
'செறிதொடி உற்ற செல்லலும் பிறிது' எனக்
கான் கெழு நாடன் கேட்பின்,
யான் உயிர்வாழ்தல் அதனினும் அரிதே.

*- வெறி பாடிய காமக்கண்ணியார் அக 98*

*"தோழி' குளிர்ந்த மலையின் உயர்ந்த வளம் பொருந்திய பக்க மலையில் வெறுப்பில்லாத கொள்கையுடன் நமக்கு மகிழ்ந்து அளித்த இனிய உள்ளம், பின்னர் இன்னா வாயினமையால் வெறுக்கும்படி நிலை பெறுத்திய நமக்குத் தந்த வருத்தமானது, தெய்வம் உறையும் மலையை உடையவனான அத் தலைவன் மார்பை மீண்டும் நாம் பொருந்துவதாலே தணியும் என்ற உண்மையை நம் தாயானவள் இன்னும் அறியவில்லையே*

*நீண்ட கோல் தொழில் அமைந்து நெருங்கி விளங்கும் ஒளி பொருந்திய என் கை வளையல் நெகிழ்ந்த நிலையைப் பார்த்துச் செயலற்ற உள்ளத்தை உடையவளாய்க் கட்டு விச்சியை வினவுதலால், பொய் கூறுதலில் கூர்மையான அறிவுடைய அம் மகளிரும் பிரம்பு அரிசியைப் பரப்பி வைத்து, இது முருகனின் செயலால் நிகழ்ந்தது என்று கூறுதலால், அதை உண்மை என நம்பி, ஓவியம் போன்ற தொழிலால் அழகு செய்யப்பட்ட வீட்டில் பாவையைப் போன்ற பலராலும் ஆராய்ந்து கண்டு மகிழத் தகுந்த மாட்சிமையுடைய அழகானது என் மகளுக்கு முன்பு போலவே சிறப்புறுக என்று முருகப்பெருமானை வேண்டுதல் செய்தாள். பின்பு, தம்முள் இசை முதலியவற்றால் இயைகின்ற இசைக் கருவிகள் பலவும் ஒலிக்க வெறியாடற்குரிய களத்தை இழைத்து, அதற்கேற்ற அழகுகளும் செய்யப்பட்ட அகன்ற பெரிய பந்தலில் வெண்மையான பனந்தோட்டைக் கடப்ப மலருடன், சூடி, கேட்டற்கு இனிய பாடலை மெலிதாக அமைந்த தாளத்துடன் கூட்டி முருகப் பெருமானின் புகழை எடுத்துக் கூறிப் புகழ்ந்து வேலன் வெறியாடுகின்றான். அகன்ற அக் களமானது அழகு பெற வல்லவன் ஆட்டும் பொறிப் பாவையைப் போல ஆடுதலை விரும்பினால் என்ன ஆகுமோ?*

*அறிவு மயங்கிய செவிலி முதலிய மகளிர்க்குப் பின்னரும் துன்பம் உண்டாகுமாறு வேலன் வெறியாடிய பின்பும் நம் மேனி அவர் வேண்டியபடி முன் போலச் சிறப்படையாது போனால் இந்தக் களவொழுக்கம் பலரும் தூற்றுமாறு வெளிப்படாதிருத்தல் அரிதேயாகும் நம் தலைவர் உறுவித்த இந்த அல்லலைத் தெரிந்தருளுதலால் மணம் கமழும் நம் முன்னைய அழகைத் தந்தருளுவான் என்றால், நெருங்கிய வளையலை அணிந்த நம் தலைவி அடைந்த துன்பமும் வேறொன்றால் உண்டாயது எனக் காடு பொருந்திய நம் தலைவர் கேட்டறிந்தால் பின்பு யான் உயிர் வாழ்ந்திருத்தல் அதைவிட அரியதே ஆகும்" என்று தோழிக்குத் தலைவி கூறினாள்*

## 398. இந் நிலையில் எவ்வாறு வாழ்வோம்?

**உளைமான் துப்பின், ஓங்கு திணைப் பெரும் புனத்துக்**
**கழுதில், கானவன் பிழி மகிழ்ந்து வதிந்தென;**
**உரைத்த சந்தின் ஊரல் இருங் கதுப்பு**
**ஐது வரல் அசைவளி ஆற்ற, கை பெயரா,**
**ஒலியல் வார் மயிர் உளரினள், கொடிச்சி**
**பெரு வரை மருங்கில் குறிஞ்சி பாட;**
**குரலும் கொள்ளாது, நிலையினும் பெயராது**
**படாஅப் பைங் கண் பாடு பெற்று, ஒய்யென**
**மறம் புகல் மழ களிறு உறங்கும் நாடன்;**
**ஆர மார்பின் அரி ஞிமிறு ஆர்ப்ப,**
**தாரன், கண்ணியன், எஃகுடை வலத்தன்**
**காவலர் அறிதல் ஓம்பி, பையென**
**வீழாக் கதவம் அசையினன் புகுதந்து**
**உயங்கு படர் அகலம் முயங்கி, தோள் மணந்து,**
**இன் சொல் அளைஇ, பெயர்ந்தனன் – தோழி!–**
**இன்று எவன்கொல்லோ கண்டிகும் – மற்று அவன்**
**நல்காமையின் அம்பல் ஆகி,**
**ஒருங்கு வந்து உவக்கும் பண்பின்**
**இருஞ் சூழ் ஓதி ஒண் நுதற் பசப்பே?**

*– மதுரை இளம்பாலாசிரியன் சேந்தங்கூத்தன் அக 102*

"தோழியே, கேட்பாய் பிடரி மயிரையுடைய அரிமா போன்ற வலிமையுடன் பெரிய திணைப்புனத்தில் ஓங்கிய பரணில் கானவன் கள்ளுண்டு களித்திருந்தான் அப்போது பூசிய மயிர்ச்சாந்தைக் கொண்ட பரந்த கரிய கூந்தலை மெல்ல அசைத்து வரும் காற்று உலர்த்த அவனுடைய மனைவியான குறப்பெண் தழைத்து நீண்ட கூந்தலைத் தன் கையால் கோதிக்கொண்டு, அப் பெரிய மலையிடத்தில் குறிஞ்சிப் பண்ணைப் பாடினாள் அச் சமயத்தே வீரமுடைய இளைய ஆண் யானை ஒன்று தான் கொண்ட தினைக் கதிரையும் தின்னாது, நின்ற நிலையினின்று போகாமலும் துயிலாத தன் கண்களும் துயில் வரப்பெற்று விரைந்து உறங்கும் அத்தகைய நாட்டையுடையவன் நம் தலைவன் அவன், சந்தனம் பூசப் பெற்ற தன் மார்பிலே அழகிய வண்டு கள் ஆரவாரம் செய்தற்கு இடமான மாலையையும் கண்ணி யையும் உடையவனாய் வேல் பொருந்திய வலக்கையையும் உடையவனாய்க் காவலர் தன்னை அறியாதபடி வந்து தாழ் இடப்படாத கதவின் அருகில் தங்கி, மெல்லப் புகுந்து, என் துன்பம் நீங்குமாறு அணைத்துத் தோளினைக் கூடி இனிய சொற்களைப் பேசிச் சென்றனன். அங்ஙனமாகவும் அவன் இன்று ஒரு நாள் வந்து அருள் செய்யாமையால் ஒருங்கே கூடி வந்து அலர் தூற்றி அயலார் மகிழ்வதற்குக் காரண மாகக் கரியவாய்ச் சூழ்ந்த ஒளியுடைய நெற்றியில் யாம் ஏனோ இந்தப் பசலையைக் காண்கின்றோமோ! இதே நிலை நீடித்தால் யாம் எப்படி உய்வோம்?" என்று இரவுக் குறிக் கண் சிறைப்புறமாகத் தலைவன் கேட்பத் தோழிக்குத் தலைவி சொன்னாள்

## 399. தலைவன் நன்மை செய்திலன்

புணர்ந்தோர் புன்கண் அருளலும் உணர்ந்தோர்க்கு
ஒத்தன்றுமன்னால்! எவன்கொல்? முத்தம்
வரைமுதல் சிதறியவைபோல், யானைப்
புகர் முகம் பொருத புது நீர் ஆலி
பளிங்கு சொரிவது போல் பாறை வரிப்ப,
கார் கதம்பட்ட கண் அகன் விசும்பின்

விடுபொறி ஞெகிழியின் கொடி பட மின்னி,
படு மழை பொழிந்த பானாட் கங்குல்,
ஆர் உயிர்த் துப்பின் கோள் மா வழங்கும்
இருளிடைத் தமியன் வருதல் யாவதும்
அருளான் – வாழி, தோழி! – அல்கல்
விரவுப் பொறி மஞ்ஞை வெரீஇ, அரவின்
அணங்குடை அருந் தலை பை விரிப்பவைபோல்,
காயா மென் சினை தோய நீடிப்
பல் துடுப்பு எடுத்த அலங்கு குலைக் காந்தள்
அணி மலர் நறுந் தாது ஊதும் தும்பி
கை ஆடு வட்டின் தோன்றும்
மை ஆடு சென்னிய மலைகிழவோனே.

*– தங்காற் பொற்கொல்லனார் அக 108*

*"தோழி வாழ்க! புள்ளிகள் கொண்ட மயிலைக் கண்டு அஞ்சிப் பாம்பின் வருத்தத்தைத் தரும் அரிய நஞ்சையுடைய தலைகள் படத்தை விரித்தவை போல், காயாவின் மென்மை யான கொம்புகளைத் தீண்டுமாறு நீண்டு அரும்பிய பல மலர்களுடன் அசையும் காந்தள் அக் காந்தளின் அழகிய மலர்களில் தாவி நறிய தாதினை நுகர்கின்றன வண்டுகள் அவை மகளிர் கையால் ஆடும் வட்டுகளைப் போல் தோன் றும், அத்தகைய இடமான முகில்கள் தவழ்கின்ற உச்சிகளை யுடைய மலைநாட்டுத் தலைவன் நம் தலைவன். அவன், இரவிடை வருகின்றான் அதனால் நமக்கு என்ன பயன்? அன்பினால் நட்புக் கொண்டவரின் துன்பத்தைப் போக்கிப் பாதுகாத்தல் அறிவுடையார்க்குப் பொருந்தியதாகும் அதனை நம் தலைவன் செய்யவில்லை மலையில் முத்துக்கள் சிதறி யவைபோல் விளங்கும், யானையின் புள்ளிகளையுடைய முகத்தில் விழுந்த புதிய ஆலங்கட்டி பளிங்கினைச் சொரி வதைப் போல் பாறையில் விழுந்து அழகு செய்யும் முகில் கள் சினந்த எழுந்தாற்போன்ற இடம் அகன்ற வானத்தில் பொறிகளையுடைய கொள்ளிக் கட்டைகளைப் போல ஒழுங்குபட மின்னி மிக்க மழை பெய்யும் அத்தகைய நள்ளிர வின் இருளில், அரிய உயிர்களையே உணவாக உடைய, கொல்லும் தொழிலை யுடைய விலங்குகள் உலவும். இத்*

*தகைய நிலையில் நாள்தோறும் வருவதால் என்ன பயன்? அவன் நம்மைத் துன்புறுத்தலே அன்றிச் சிறிதும் அருள் செய்யவில்லை" என்ற தலைவன் ஒரு பக்கம் இருக்க அவன் கேட்கத் தலைவிக்குத் கூறுவதுபோலத் தோழி கூறினாள்*

## 400. இவள் மணக் கோலம் காண்போம்

**கூனல் எண்கின் குறு நடைத் தொழுதி**
**சிதலை செய்த செந் நிலைப் புற்றின்**
**மண் புனை நெடுங் கோடு உடைய வாங்கி,**
**இரை நசைஇப் பரிக்கும் அரைநாட் கங்குல்**
**ஈன்று அணி வயவுப் பிணப் பசித்தென, மறப் புலி**
**ஒளிறு ஏந்து மருப்பின் களிறு அட்டுக் குழுமும்**
**பனி இருஞ் சோலை, 'எமியம்' என்னாய்,**
**தீங்கு செய்தனையே, ஈங்கு வந்தோயே;**
**நாள் இடைப்படின் என் தோழி வாழாள்;**
**தோளிடை முயக்கம் நீயும் வெய்யை;**
**கழியக் காதலர்ஆயினும், சான்றோர்**
**பழியொடு வரூஉம் இன்பம் வெஃகார்**
**வரையின் எவனோ? — வான் தோய் வெற்ப!—**
**கணக் கலை இகுக்கும் கறி இவர் சிலம்பின்**
**மணப்பு அருங் காமம் புணர்ந்தமை அறியார்,**
**தொன்று இயல் மரபின் மன்றல் அயர,**
**பெண் கோள் ஒழுக்கம் கண் கொள நோக்கி**
**நொதுமல் விருந்தினம் போல, இவள்**
**புது நாண் ஒடுக்கமும் காண்குவம், யாமே.**

— *நெய்தற்சாய்த்துய்த்த ஆவூர்கிழார் அக 112*

*"வானை அளாவும் மலையையுடைய தலைவனே! கூனிய முதுகையும் குறுகிய நடையையும் உடைய கரடிக் கூட்டம், கறையானால் கட்டப் பட்ட சிவந்த நிலையை யுடைய புற்றின் மண்ணால் ஆன நெடிய உச்சிகள் உடைந்து போகுமாறு அகழ்ந்து எடுத்து, புற்றாஞ் சோறான ஈசலை விரும்பித் தின்னச் செல்வதற்குரிய இரவின் இருளில், குட்டியை ஈன்ற அணிமையையுடைய வயா வருத்தத்துடன் இருக்கின்ற பெண் புலியானது பசித்ததாகத் தறுகண்மை*

யுடைய ஆண்புலி ஒளி வீசும் ஏந்திய கொம்பையுடைய ஆண் யானையைக் கொன்று முழங்கும் குளிர்ந்த பெரிய சோலையில் யாம் தமியம் என்று எண்ணாமல் இங்கு வந்தாய் இங்ஙனம் வந்த நீ எமக்கு அருள் செய்யவே வந்தாயேனும், அதைச் செய்யவில்லை அதற்கு மாறாகத் துன்பத்தையே செய்தாய்! நீ ஒரு நாள் வாராமல் இடைப்பட்டாலும் தலைவி உயிர் வாழாதவள் போல் உள்ளாள் அப்படியே நாள்தோறும் என் தோழியின் தோளில் தழுவுதலை நீயும் விரும்புகின்றனை சான்றோர் மிக்க காதல் கொண்டாராயினும் பழியோடு கூடிவரும் இன்பத்தை விரும்பமாட்டார் ஆதலால், நீ எம் தலைவியை எம் சுற்றத்தவரிடம் மகட் பேசித் திருமணம் செய்து கொண்டால் நினக்கு வரும் துன்பம் யாது?

கலைமான்கள் கூடித் தாழ ஒலிக்கும் மிளகுக் கொடி படர்ந்த மலைச் சாரலில் எய்துதற்கு அரிய காமத்தால் நீர் கூடிய களவொழுக்கத்தை அறியாத எம்மவர் தொன்று தொட்டு வரும் முறைப்படி மணம் நிகழ்ந்திட, நீ இவளை மணந்து கொள்ளும் அந்த ஒழுக்கத்தைக் கண்ணாரப் பார்த்து யாம் அயலார் ஆகிய புதியவர் போன்று இவளுடைய புதிய நாணத்தால் ஆன ஒடுக்கத்தையும் காண்போம் அல்லேமோ?" என்று இரவுக்குறி வந்த தலைவனைத் தோழி மணக்கக் கூறினாள்

## 401. பகல் இரவுக்குறி தக்கவையல்ல

கறங்கு வெள் அருவி பிறங்கு மலைக் கவாஅன்,
தேம் கமழ் இணர வேங்கை சூடி,
தொண்டகப் பறைச் சீர் பெண்டிரொடு விரைஇ
மறுகில் தூங்கும் சிறுகுடிப் பாக்கத்து
இயல் முருகு ஒப்பினை, வய நாய் பிற்பட,
பகல் வரின், கவ்வை அஞ்சுதும், இகல் கொள
இரும் பிடி கன்றொடு விரைஇய கய வாய்ப்
பெருங் கை யானைக் கோள் பிழைத்து, இரீஇய
அடு புலி வழங்கும் ஆர் இருள் நடு நாள்
தனியை வருதல் அதனினும் அஞ்சுதும்.

என் ஆகுவள்கொல்தானே? பல் நாள்
புணர் குறி செய்த புலர்குரல் எனல்
கிளி கடி பாடலும் ஒழிந்தனள்;
அளியள்தான், நின் அளி இலது இலளே! *– கபிலர் அக 118*

*“ஒலிக்கும் வெண்மையான அருவிகள் விளங்கும் மலையின் சாரலில், தேன் மணக்கும் கொத்துகளையுடைய வேங்கை மலர்களைச் சூடித், தொண்டகப் பறையின் தாளத்துக்கு எற்றபடி, ஆடவர் பெண்களுடன் கலந்து தெருக்களில் ஆடும் எம் சிறுகுடிப்பாக்கத்தில், எம் கண்காண வடிவம் கொண்டு வரும் முருகவேளைப் போன்ற அழகுடையவனே! வலிய நாய் பின்னே வர நீ பகற் போதில் வரின் இவ் ஊரவர் சொல்லும் அலர்க்கு அஞ்சுகிறோம் கொல்லும் புலிகள் இரை தேடித் திரியும் நிறைந்த இருளில் அவற்றுடன் பகைமை கொள்ள அஞ்சி, கரிய பெண் யானையுடனும் கன்றோடும் கூடிய பெரிய வாயையும் பெரிய கையையும் உடைய ஆண் யானை தான் அந்தப் புலி பிடித்துக் கொள்வதனின்று தப்பிப் பிடி முதலியவற்றை மறைத்து வைத்துக் கொள்ளும் அதற்குக் காரணமான நள்ளிரவில் நீ தனியாக வருவதை அதைக் காட்டிலும் அஞ்சுகிறோம் தலைவ! பல நாளும் புணரும் பகற்குறியாகக் கொண்ட முற்றிய கதிரையுடைய தினைப் புனத்தில் கிளியை ஓட்டுதற்குப் பாடும் பாடலும் நீங்கி இல் செறிக்கப்பட்டாள் இனி என் ஆவாளோ! இரங்கத்தக்க என் தோழி உன் அருளையேயன்றி வேறொரு துணையிலள் ஆயினாள், அதனால் தலைவியை விரைந்து மணக்க” என வேண்டினாள் தோழி*

## 402. தித்தன் புறங்காட்டைப் போல களவு

இரும்பிழி மகாஅர் இவ் அழுங்கல் மூதூர்
விழவு இன்றுஆயினும் துஞ்சாது ஆகும்;
மல்லல் ஆவண மறுகுஉடன் மடியின்,
வல்உரைக் கடுஞ்சொல் அன்னை துஞ்சாள்;
பிணிகோள் அருஞ்சிறை அன்னை துஞ்சின்,
துஞ்சாக் கண்ணர் காவலர் கடுகுவர்;
இலங்குவேல் இளையர் துஞ்சின், வைஎயிற்று

வலம்சுரித் தோகை ஞாளி மகிழும்;
அரவாய் ஞமலி மகிழாது மடியின்,
பகல்உருஉறழ நிலவுக் கான்று விசும்பின்,
அகல்வாய் மண்டிலம் நின்று விரியும்மே;
திங்கள் கல்சேர்பு கனைஇருள் மடியின்,
இல்எலி வல்சி வல் வாய்க் கூகை
கழுது வழங்கு யாமத்து அழிதகக் குழறும்;
வளைக்கண் சேவல் வாளாது மடியின்,
மனைச் செறி கோழி மாண்குரல் இயம்பும்,
எல்லாம் மடிந்த காலை, ஒருநாள்
நில்லா நெஞ்சத்து அவர் வாரலரே; அதனால்
அரி பெய் புட்டில் ஆர்ப்பப் பரி சிறந்து
ஆதி போகிய பாய்பரி நன் மா
நொச்சி வேலித் தித்தன் உறந்தைக்
கல்முதிர் புறங்காட்டு அன்ன
பல்முட்டின்றால் தோழி! நம் களவே. — *பரணர் அக 122*

*"தோழி! கேட்பாயாக: மழையைப் போன்ற மிக்க கள்ளையும் ஆரவாரத்தையும் உடைய இந்தப் பழைய ஊர் விழா இல்லை என்றாலும் உறங்காமல் இருக்கின்றது வளமை உடைய கடைத்தெருவும் மற்றத் தெருக்களும் உறங்கி அடங்கினாலும் வலிய ஒலியுடன் கூடிய கடிய சொல்லைப் பேசும் தாய் உறங்கமாட்டாள் நம்மை வெளியே போகாமல் பிணித்து வைத்துள்ள சிறையைப் போன்ற தாய் என்றேனும் ஒரு நாள் உறங்கினும் உறங்காத கண்களை யுடைய ஊர்க் காவலர் விரைந்து சுற்றி வருவர். விளங்கும் வேலையுடைய அக் காவலர் உறங்கினும், கூர்மையான பல்லை யும் வலமாகச் சுருளும் வாலையும் உடைய நாய் குரைக்கும் ஒலிமிக்க பகல்பொழுதைப் போன்று தோன்றும்படி ஒளி செய்யும் நிலவு ஒளியை வீசி அகன்ற வானத்திடத்தே நில வின் ஒளி பரவும் அத் திங்களும் மேற்குத் திசையை அடைந்து மிக்க இருள் உலகத்தில் பரவும் பொழுதும் வீட்டில் உள்ள எலியை இரையாகக் கொண்ட கூகை, பேய்கள் உறங்கும் நள்ளிரவில் அழிவு உண்டாகக் குழறும் பொந்தில் வாழும் அச் சேவலும் சற்றே உறங்கினால் வீட்டில் உள்ள கோழிச்*

சேவல் மாண்புடைய குரலை எழுப்பும் ஒரு நாள் இவை யெல்லாம் ஒழிந்த காலத்தும் நிலையில்லாத உள்ளத்தை உடைய தலைவர் வரமாட்டார் அதனால், நம்முடைய இந்தக் களவொழுக்கம், பரற் கற்கள் இடப்பட்ட சதங்கைகள் ஆர வாரிக்கும்படி வேகத்தால் சிறந்து 'ஆதி' என்னும் கதியிலே பாயும் செலவை உடைய நல்ல குதிரையைப் பெற்ற 'தித்தன்' என்பானின் மதிலான வேலியை யுடைய உறையூரைச் சூழ்ந் துள்ள கற்கள் நிறைந்த காவற்காடு போன்ற பல தடைகளை உடையதாய் உள்ளதே" என்று தோழி சொல் எடுப்பத் தலைவி கூறினாள்

## 403. தலைவரின் அடியைத் தாங்கும் நெஞ்சம்

**மன்றுபாடு அவிந்து மனைமடிந் தன்றே;**
**கொன்றோரன்ன கொடுமையோடு இன்றே**
**யாமம் கொளவரின் கனைஇக், காமம்**
**கடலினும் உரைஇ, கரைபொழி யும்மே.**
**எவன்கொல் – வாழி தோழி! மயங்கி**
**இன்னம் ஆகவும், நன்னர் நெஞ்சம்**
**என்னொடும் நின்னொடும் சூழாது கைம்மிக்கு,**
**இறும்பு பட்டு இருளிய இட்டு அருஞ் சிலம்பில்**
**குறுஞ் சுனைக் குவளை வண்டு படச் சூடி**
**கான நாடன் வரூஉம் யானைக்**
**கயிற்றுப் புறத்தன்ன கல்மிசைச் சிறு நெறி**
**மாரி வானம் தலைஇ நீர் வார்பு**
**இட்டு அருங் கண்ண படுகுழி இயவின்,**
**இருளிடை மிதிப்புழி நோக்கி, அவர்**
**தளர்அடி தாங்கிய சென்றது? இன்றே!** – *கபிலர் அக 128*

*"தோழி, வாழ்க! நம் ஊர் அம்பலங்களில் ஆரவாரம் அடங்கி இல்லங்களிலே உள்ளவரும் உறங்கலாயினர் கொல் வதைப் போன்ற கொடுமையுடன் இன்று நள்ளிரவு பொருந்த வரின் காமம் மிக்குக் கரை கடந்து செல்லும் நாம் இவ் வாறாகவும், நம் நல்ல நெஞ்சம் மயக்கம் அடைந்து நம்மைக் கைவிட்டு என்னுடனும் உன்னுடனும் உசாவி உணராது கை கடந்து சென்று, சிறு காடாக இருண்ட செல்வதற்கரிய பக்க*

*மலையில் உள்ள சிறிய சுனையில் பூத்த குவளை மலரை வண்டுகள் மொய்க்கச் சூடிக் குறிஞ்சி நிலத் தலைவனான நம் பெருமான் வருவார். அவ் வழி யானையின் முதுகில் உள்ள கயிற்றுத் தழும்பைப் போன்ற மலை மீதுள்ளது சிறிய வழி அதில், முகில் மழை பெய்தலால் நீர் ஓட, செல்வற்கு அரிய சிறிய இடங்களில் உள்ள குழிகளை யுடைய வழியில் இருளில் மிதிக்கும் இடத்தைப் பார்த்து அவரது தளர்கின்ற அடியைத் தாங்குவதற்குச் சென்று விட்டது," என்று தலைவி, தலைவனுக்குச் சொல்லுவளாய்த் தோழியிடம் சொன்னாள்*

## 404. மணந்து போவாய்

**ஏனலும் இறங்கு குரல் இறுத்தன; நோய்மலிந்து,**
**ஆய்கவின் தொலைந்த, இவள் நுதலும்; நோக்கி**
**ஏதில மொழியும் இவ் ஊரும்; ஆகலின்,**
**களிற்று முகம் திறந்த கவுளுடைப் பகழி,**
**வால்நிணப் புகவின், கானவர் தங்கை**
**அம் பணை மென் தோள் ஆய் இதழ் மழைக் கண்**
**ஒல்கு இயற் கொடிச்சியை நல்கினைஆயின்,**
**கொண்டனை சென்மோ – நுண்பூண் மார்ப!**
**துளிதலைத் தலைஇய சாரல் நளி சுனைக்**
**கூம்பு முகை அவிழ்த்த குறுஞ் சிறைப் பறவை**
**வேங்கை விரி இணர் ஊதி காந்தள்**
**தேனுடைக் குவிகுலைத் துஞ்சி, யானை**
**இருங் கவுட் கடாஅம் கனவும்,**
**பெருங் கல் வேலி நும் உறைவு இன் ஊர்க்கே,**

*– தாயங்கண்ணனார் அக 132*

*"நுண்மையான தொழில் அமைந்த அணியைப் பூண்ட மார்பை உடையவனே, கேட்பாயாக: எங்களால் காக்கப் பட்டு வந்த தினையும் முதிர்ந்து கதிர் அறுக்கப் பெற்றன இவளது நெற்றியும் காம நோய் மிக்கமையால் ஒள்ளிய அழகு தொலைந்து விட்டது இந்த ஊரில் உள்ளவரும் அதைப் பார்த்து இவளுக்குத் தொடர்பில்லாத பழிச் சொற்களைக் கூறுகின்றனர் ஆகையால், ஆண் யானையின் மதம் பொருந்திய கன்னத்தையுடைய முகத்தைக் கிழித்த அம்பை*

யும், வெண்மையான நிணத்துடன் கூடிய உணவையும் உடையவர் வேடர்கள் அத்தகையவரின் தங்கையும், அழகிய மூங்கிலைப் போன்ற மென்மையான தோளையும் அழகிய இமையுடன் கூடிய குளிர்ந்த கண்ணையும், அசையும் இயல்பையும் உடைய குறிஞ்சி நிலப் பெண்ணான இவளுக்கு நீ அருளுவாயானாய் இக் கார்ப்பருவத்தில் மழையானது பெய்த மலைப்பக்கத்தில் உள்ள, சுனையிடத்துக் குவிந்த அரும்பைச் சிறிய சிறகால் விரித்த வண்டுகள், வேங்கையின் பூங்கொத்துகளில் தாதினை ஊதி, காந்தளின் தேன் பொருந்திய குவிந்த குலையில் உறங்கி யானையின் பெரிய கன்னத்தினின்று ஒழுகும் மதநீரைக் குடிப்பதாகக் கனாக் காணும் இவ் இயல்பு வாய்ந்த பெரிய மலையைச் சுற்றிலும் கொண்ட வாழ்வதற்கு ஏற்ற உன் ஊருக்கு, மணந்து கொண்டு போவாயாக! என்று தோழி தலைவனைப் பார்த்துக் கூறினாள்.

## 405. தாயின் வெறியாட்டு

இகுளை! கேட்டிசின், காதல்அம் தோழி!
குவளை உண்கண் தெண்பனி மல்க,
வறிது யான் வருந்திய செல்லற்கு அன்னை
பிறிது ஒன்று கடுத்தனள் ஆகி வேம்பின்
வெறிகொள் பாசிலை நீலமொடு சூடி,
உடலுநர்க் கடந்த கடல்அம் தானை,
திருந்துஇலை நெடுவேற் தென்னவன் – பொதியில்,
அருஞ்சிமை இழிதரும் ஆர்த்து வரல் அருவியின்
ததும்பு சீர் இன் இயம் கறங்க, கைதொழுது,
உரு கெழு சிறப்பின் முருகு மனைத் தரீஇக்,
கடம்பும் களிறும் பாடி, நுடங்குபு
தோடும் தொடலையும் கைக்கொண்டு, அல்கலும்
ஆடினர் ஆதல் நன்றோ? நீடு
நின்னொடு தெளித்த நல்மலை நாடன்
குறி வரல் அரைநாட் குன்றத்து உச்சி,
நெறி கெட வீழ்ந்த துன் அருங் கூர் இருள்
திரு மணி உமிழ்ந்த நாகம் காந்தட்
கொழு மடற் புதுப் பூ ஊதும் தும்பி

நல் நிறம் மருளும் அரு விடர்
இன்னா நீள் இடை நினையும் என் நெஞ்சே.

*– எழூஉப்பன்றி நாகன் குமரனார் அக 138*

*இளைவளே, காதலையுடைய தோழியே! 'உன்னை விரைவில் மணந்து கொள்வேன்' என்று நீண்ட நாளாகத் தெளிவித்து வந்தவன் நம் மலைநாடன் அவன் இரவுக்குறி வரும் நடு இரவில் உள்ள குன்றின் உச்சியில் வழி தவறுமாறு உள்ள மிக்க இருளில், தனது மணியைப் பாம்பு உமிழும் அவ்வாறு உமிழ்ந்த நாகம், காந்தள் மலரின் புதிய பூவை மொய்க்கும் வண்டின் நல்ல நிறத்தைக் கண்டு தன் மணி என மயங்கும் அவ் வழியில் அரிய பிளப்புகள் பல உள்ளன அத்தகைய நீண்ட வழியை எண்ணி என் நெஞ்சம் கவலை கொள்ளும் அதனால் குவளை மலரைப் போன்ற என் மையுண்ட கண்களில் தெளிவான நீர் ததும்ப, யான் வருந்திய துன்பத்தை அன்னை கண்டாள் இது தெய்வத்தால் ஆகியதோ என்று வேறோர் ஐயம் கொண்டாள் வெறியாடும் கட்டுவிச்சியும் வேலனும் வேம்பினது பசிய இலையுடன் நீலப் பூக்களைச் சூடிக் கொண்டனர் பகைவரை வென்ற கடல் போன்ற படைகளையும், திருந்திய இலையை யுடைய நீண்ட வேலையும் கொண்ட பாண்டிய மன்னனின் மலையில் உச்சியினின்று இழியும் ஆரவாரம் செய்யும் அருவியைப் போல் இனிய இன்னியங்கள் ஒலிக்கக் கையால் வணங்கி, அச்சம் தோன்றும் மனையில் முருகனை வருவித்தனர் அப் பெருமானின் கடம்ப மாலையையும் களிற்றையும் பாடினர் பனந் தோட்டையும் கடப்ப மாலையையும் கையில் அணிந்து கொண்டனர் அசைந்து அசைந்து இரவெல்லாம் ஆடினர் இது நன்றாகுமோ? என்று தலைவி தன் தோழிக்குச் சொல்வதைப் போல் தலைவன் கேட்கக் கூறினாள்*

## 406. தலைவி இன்பத்தை நினைந்து மகிழ்

இலமலர் அன்ன அம் செந் நாவின்
புலம் மீக்கூறும் புரையோர் ஏத்தப்
பலர் மேந் தோன்றிய கவி கை வள்ளல்
நிறைஅருந் தானை வெல்போர் மாந்தரம் –

பொறையன் கடுங்கோப் பாடிச் சென்ற
குறையோர் கொள்கலம் போல நன்றும்
உவ இனி வாழிய, நெஞ்சே! காதலி
முறையின் வழாஅது ஆற்றிப் பெற்ற
கறை அடி யானை நன்னன் பாழி
ஊட்டு அரு மரபின் அஞ்சு வரு பேஎய்க்
கூட்டு எதிர்கொண்ட வாய் மொழி மிஞிலி
புள்ளிற்கு ஏமம் ஆகிய பெரும் பெயர்
வெள்ளத் தானை அதிகற் கொன்று உவந்து
ஒள் வாள் அமலை ஆடிய ஞாட்பின்
பலர் அறிவுறுதல் அஞ்சிப், பைப்பய
நீர்த் திரள் கடுக்கும் மாசு இல் வெள்ளிச்
சூர்ப்புறு கோல் வளை செறித்த முன்கைக்
குறை அறல் அன்ன இரும் பல் கூந்தல்,
இடன் இல் சிறுபுறத்து இழையொடு துயல்வரத்
கடல் மீன் துஞ்சும் நள்ளென் யாமத்து
உருவு கிளர் ஓவினைப் பொலிந்த பாவை
இயல் கற்றன்ன ஒதுக்கினள் வந்து
பெயல் அலைக் கலங்கிய மலைப் பூங் கோதை
இயல் எறி பொன்னின் கொங்கு;சோர்பு உறைப்ப
தொடிக்கண் வடுக்கொள – முயங்கினள்;
வடிப்பு உறு நரம்பின் தீவிய மொழிந்தே. *– பரணர் அக 142*

*“நெஞ்சே, வாழ்க! நம் காதலியானவள், நெறி முறையினின்று வழுவாமல் நின்று போரிட்டுப் பெற்ற, உரல் போலும் அடியையுடைய யானையைப் பெற்றவன், ‘நன்னன்’ என்ற மன்னன். அவனுக்குரிய ‘பாழி’ என்ற ஊரில் பலியூட்டுவதற்கு அரிய இயல்புடைய அஞ்சத் தக்க பேய்க்குப் பகைவரை வென்று அவருடைய குருதியை ஊட்டும் இயல்புடையவன் ‘மிஞிலி’ என்பவன் பறவைகளுக்குக் காவலான பெரும்புகழ் கொண்ட வெள்ளம் போன்ற படையையுடைய அதிகன் என்பவனைக் கொன்று மகிழ்ந்தான். வாகை சூடினான் அப்போது ‘ஒள்வாள் அமலை’ என்னும் வெற்றிக் கூத்து ஆடப்பட்டது அப் போர்க்களத்து அச் சமயத்தில் எழுந்த ஆரவாரம் போன்று பலரும் அறிந்து கூறும் அல*

ருக்கு அஞ்சி மெல்ல மெல்ல நீரைத் திரட்டிய திரட்சியைப் போன்ற குற்றமற்ற வெள்ளியால் ஆன வளையல்கள் அணியப்பட்ட முன் கையை உடையவளாய்க் கருமணலைப் போன்ற கரிய கூந்தல் பிடரியில் அசையக் கடல்மீன்கள் உறங்கும் நள்ளென்று ஒலிக்கும் இடையாமத்தில் அழகு மிகும் பொலிவை யுடைய செய்தொழிலால் சிறந்த பாவை நடை கற்றாற் போன்ற நடையுடையவளாய் மெல்ல மெல்ல வந்தாள் மழையுால் அலைக்கப்பட்ட கலங்கிய மலைப் பூக்களால் ஆகிய மாலையினின்று கொல்லன் உலைக்களத் தில் அடிக்கும் போது தெறித்து விழும் பொன்தூளைப் போல் தேன்துளி சிந்த, யாழ் நரம்பின் இசைபோல் இனிய மொழியைப் பேசித் தன் வட்டமான முலைகளின் வடு என உடம்பில் ஏற்பட என்னைத் தழுவினாள் இலவ மலர் போன்ற அழகிய சிவந்த நாவால் புலமையால் உயர்த்திக் கூறும் மேலோர் புகழக், கொடுத்தலால் கவிந்த கையையுடைய வள்ளலான நிறுத்தற்கரிய படையைப் பெற்று போரை வெல்லும் 'மாந்தரம் பொறையன் கடுங்கோ' என்னும் சேர மன்னனைப் பாடிச் சென்ற வறியோரின் பிச்சைக் கலகம் போல என் நெஞ்சே, இனி மிகவும் நிறைவுற்று மகிழ் வாயாக!" என்று இரவுக்குறி வந்து மீண்ட தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறினான்

## 407. இரவில் வருக

பனைத் திரள் அன்ன பரு ஏர் எறுழ்த் தடக் கை
கொலைச் சினம் தவிரா மதனுடை முன்பின்
வண்டு படு கடாஅத்து, உயர் மருப்பு, யானை
தண் கமழ் சிலம்பின் மரம் படத் தொலைச்சி;
உறு புலி உரறக் குத்தி; விறல் கடிந்து
சிறு தினைப் பெரும் புனம் வவ்வும் நாட!
கடும் பரிக் குதிரை ஆஅய் எயினன்
நெடுந் தேர் ஞிமிலியொடு பொருது, களம் பட்டென
காணிய செல்லாக் கூகை நாணிக்
கடும் பகல் வழங்காதாஅங்கு, இடும்பை
பெரிதால் அம்ம இவட்கே; அதனால்

மாலை வருதல் வேண்டும் — சோலை
முளை மேய் பெருங் களிறு வழங்கும்
மலை முதல் அடுக்கத்த சிறு கல் ஆறே. — *பரணர் அக 148*

*"யானை, பனைமரத்தைப் போன்று பருத்த கையை உடையது கொல்லும் சினம் நீங்காத செருக்குப் பொருந்திய வலிமை கொண்டது வண்டுகள் மொய்க்கும் மதம் உடையது உயர்ந்த கொம்பையுடையது அது குளிர்ந்த மணமுடைய பக்க மலையில் உள்ள மரம் விழ ஒடித்துத் தள்ளும் புலி யைக் கதறுமாறு குத்தி அதன் வெற்றியைத் தொலைக்கும் பின் தினை விளைந்த பெரிய புனத்தைக் கவர்ந்து கொள்ளும் இத்தகைய இயல்பையுடைய நாடனே! விரைந்த செலவு மிக்க குதிரை யுடையவன் 'ஆய் எயினன்' அவன் பெரிய தேரையுடைய 'மிஞிலி' என்பானுடன் போர் செய்து போர்க் களத்தில் இறந்தான் பறவைகளின் பாதுகாவலன் அவன் அத் தகையவனை மற்ற பறவைகளைப் போல் காண இயலாத பகற் குருடான கூகைப் பறவை நாணிக் கடும் பகலில் இயங்காமல் துன்பம் அடைந்தது. அதுபோல் இத் தலை விக்குப் பகற்குறியில் செல்லாத துன்பம் பெரிதாக உள்ளது. அதனால் சோலையில் உள்ள மூங்கில் குருத்தினைத் தின்னும் பெரிய களிறு திரியும் மலைச்சாரலில் உள்ள சிறிய பாறை கள் செறிந்த வழியில் நீ மாலையில் வருதல் வேண்டும்" என்றாள் தோழி.*

## 408. கூந்தலும் தோளும் துன்பம் தருகின்றன

நெஞ்சு நடுங்கு அரும் படர் தீர வந்து
குன்றுழை நண்ணிய சீறூர் ஆங்கண்
செலீஇய பெயர்வோள் வணர் சுரி ஐம்பால் —
நுண் கோல் அகவுநர்ப் புரந்த பேர் இசைச்
சினம் கெழு தானை தித்தன் வெளியன்
இரங்குநீர்ப் பரப்பின் கானல்அம் பெருந் துறை
தனம் தரு நன் கலம் சிதையத் தாக்கும்
சிறு வெள் இறவின் குப்பை அன்ன
உறு பகை தரூஉம் மொய்ம் மூசு பிண்டன்
முனை முரண் உடையக் கடந்த வென் வேல்

இசை நல் ஈகைக் களிறு வீசு வண் மகிழ்ப்
பாரத்துத் தலைவன் ஆர நன்னன்
ஏழில் நெடுவரைப் பாழிச் சிலம்பில்
களி மயிற் கலாவத்தன்ன, தோளே –
வல் வில் இளையர் பெருமகன், நள்ளி
சோலை அடுக்கத்துச் சுரும்பு உண விரிந்த
கடவுட் காந்தளுள்ளும், பல உடன்
இறும்பூது கஞலிய ஆய்மலர் நாறி,
வல்லினும், வல்லார் ஆயினும் சென்றோர்க்குச்
சால் அவிழ் நெடுங் குழி நிறைய வீசும்,
மாஅல் யானை ஆஅய் கானத்துத்
தலையாற்று நிலைஇய சேயுயர் பிறங்கல்
வேய் அமைக் கண் இடை புரைஇச்
சேய ஆயினும், நடுங்கு துயர் தருமே. – *பரணர் அக 152*

*"நெஞ்சே! நம் மனம் நடுங்குவதற்குக் காரணமான வேறொன்றால் தீர்வதற்கு அரிய துன்பமானது நீங்க வந்து கூடினாள் தலைவி. பின்பு குன்றில் பொருந்திய தன் சிறிய ஊர்க்குத் திரும்பிச் செல்கின்றாள். அவள் வளைந்து சுருண்ட கூந்தலள் தித்தன் என்பான் பாணரைப் புரந்த பெரிய புகழினன்; சினம் மிக்க படையினன்; அவனது ஒலிக்கும் நீர்ப்பரப்பை உடைய கானலம் பெருந் துறைப்பட்டினத்தில் பொன்னைக் கொண்டு வரும் மரக்கலம் சிதையுமாறு தாக்கும் இறால் மீன் கூட்டம் அந்த இறால் மீன் கூட்டத்தைப் போன்ற மிக்க பகையைத் தரும் பிண்டன் என்பானின் போர் செய்யும் மாறுபாடு அழிய அவன் படையை வென்ற வெற்றியைப் பெற்ற, வேலைக் கொண்டவன் நன்னன், அவன் புகழ் பொருந்திய ஈகையுடையவன்; ஆண் யானை களை எவர்க்கும் கொடையளித்து மகிழ்பவன்; பாரம் என்ற ஊரின் தலைவன்; மாலை சூடியவன் அவனது 'ஏழில்' என்ற மலையின் 'பாழி' என்னும் பக்க மலையில் உள்ள மயில் களின் தோகைகளை தலைவியின் கூந்தல்கள் ஒத்தன.*

*பெரிய வன்மையான வில்லையுடைய வீரர்க்குத் தலைவ னான நள்ளி என்பவனின் சோலைகள் மிகுந்த பக்கமலையில் வண்டுகள் தேன் உள்ள மலர்ந்த கடவுள் சூடுவதற்குரிய*

*காந்தள் மலருள்ளும் வியப்பு மிக்க அழகிய மலர் பூலவும் ஒன்றாய் மணப்பது போல் நறுமணம் கமழும் இவளுடைய தோள்கள்*

*ஆய், பரிசிலை எண்ணி வந்தவர்க்கு அவர் கல்வியில் வல்லவராயினும் வல்லார் அல்லாராயினும் மிடாச் சோற்றை ஏந்தும் ஏனத்தின் குழிவு நிறையும்படியாக அளிப்பவன்; பெரிய யானைகளை உடைய்வன் அவனது காட்டையுடைய தலையாறு என்னும் இடத்தில் நிலைபெற்ற உயர்ந்த மலையில் உள்ள மூங்கில் கணுக்களின் நடுவிடம் போல் அவளுடைய தோள்கள், தொலைவில் 'உள்ளனவாயினும் நாம் நடுங்கத்தக்க துன்பத்தைத் தருகின்றன. என்று தலைவியை இரவில் நுகர்ந்து மீண்ட தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறினான்*

## 409. தாயே இவளை வருத்தாதே

'உரும் உரறு கருவிய பெரு மழை தலைஇப்
பெயல் ஆன்று அவிந்த தூங்குஇருள் நடுநாள்
மின்னு நிமிர்ந்தன்ன கனங்குழை இமைப்பப்
பின்னு விடு நெறியின் கிளைஇய கூந்தலள்,
வரை இழி மயிலின் ஒல்குவனள் ஒதுங்கி,
மிடை ஊர்பு இழிய, கண்டனென், இவள்'என,
அலையல் வாழி! வேண்டு, அன்னை! நம் படப்பைச்
சூருடைச் சிலம்பில், சுடர்ப்பூ வேய்ந்து
தாம் வேண்டு உருவின் அணங்குமார் வருமே;
நனவின் வாயே போலத் துஞ்சுநர்க்
கனவு ஆண்டு மருட்டலும் உண்டே; இவள்தான்
சுடர் இன்று தமியளும் பனிக்கும்; வெருவர
மன்ற மராஅத்த கூகை குழறினும்
நெஞ்சு அழிந்து அரணம் சேரும்; அதன்தலைப்
புலிக் கணத்தன்ன நாய் தொடர்விட்டு,
முருகன் அன்ன சீற்றத்துக் கடுந் திறல்
எந்தையும் இல்லன் ஆக,
அஞ்சுவள் அல்லவோ, இவள் இது செயலே?

*– கபிலர் அக 158*

*"தாயே, வாழ்க! கேட்பாயாக: இடியுடன் கூடிய தொகுதியான பெரு மழை பெய்து விட்டு நீங்கி ஒலியடங்கிய செறித்த இருளையுடைய நள்ளிரவில், இவள் மின்னல் ஒளிர்ந்தாற் போல் காதணிகள் மின்ன, பின்னல் அவிழ்ந்தமையால் பிரிந்த கூந்தலை உடையவளாய், மலையினின்று இறங்கும் மயிலைப் போல் தளர்ந்து நடந்து பரணில் எறி இறங்கி வரப் பார்த்தேன் என்று கூறி இவளை வருத்தாதே தெய்வங்களைக் கொண்ட மலையைச் சார்ந்த நம் தோட்டத்தில் ஒரு தெய்வம் ஒளியுடைய பூவைச் சூடித் தாம் வேண்டிய வடிவத்தைக் கொண்டு அவ்வப் போது வரும் அன்றோ? நீ கண்டது அத் தகைய தெய்வங்களுள் ஒன்று, நாம் நனவிலே நிகழ்ச்சிகளைக் காண்பது போல, உறங்குபவர்க்குக் கனவில் நிகழ்ச்சிகளைத் தோற்றுவிப்பதும் உண்டு ஆதலால் நீ கண்டது அது போல ஒரு கனவாகலாம் இவளோ, விளக்கு இல்லாது தனியாய் இருப்பதற்கும் நடுக்கம் கொள்வாள் அச்சம் தோன்ற மன்றத்தில் உள்ள மா மரத்தில் கூகை குழறினாலும் உள்ளம் நடுங்கிப் பாதுகாவலான இடத்துக்கு வந்து விடுவாள். அதன் மேலும் புலிக் கூட்டத்தைப் போன்ற நாய்கள் தம்மைத் தொடர்தற்குக் காரணமான தொழிலைக் கைவிட்டு முருகனைப் போன்ற சினத்தையும் கடுமையான வலிமையையும் உடைய எம் தந்தை வீட்டிருக்கவும் இத் தலைவி இத் தோட்டத்தில் சென்று வர அஞ்சுவாள் அல்லளோ? எனவே வெளியே செல்லாள் அவளைத் துன்புறுத்தாதே" என்று ஒரு புறம் நிற்கும் தலைவன் கேட்பத் தோழி செவிலித் தாய்க்குச் சொன்னாள்*

## 410. என்னை இடைவிடாது தழுவினளே

கொளக் குறைபடாஅக் கோடு வளர் குட்டத்து
அளப்பு அரிது ஆகிய குவை இருந் தோன்றல,
கடல் கண்டன்ன மாக விசும்பின்
அழற்கொடி அன்ன மின்னு வசிபு நுடங்க,
கடிது இடி உருமொடு கதழ்உறை சிதறி,
விளிவு இடன் அறியா வான் உமிழ் நடு நாள்,
அருங் கடிக் காவலர் இகழ்பதம் நோக்கி

பனி மயங்கு அசைவளி அலைப்ப, தந்தை
நெடு நகர் ஒரு சிறை நின்றனென் ஆக;
அறல் என அவிர்வரும் கூந்தல், மலர் என
வாள் முகத்து அலமரும் மா இதழ் மழைக் கண்
முகை நிரைத்தன்ன மா வீழ் வெண் பல்
நகை மாண்டு இலங்கும் நலம் கெழு துவர் வாய்
கோல் அமை விழுத் தொடி விளங்க வீசி
கால் உறு தளிரின் நடுங்கி, ஆனாது
நோய் அசா வீட முயங்கினள் – வாய்மொழி
நல் இசை தரூஉம் இரவலர்க்கு உள்ளிய
நசை பிழைப்பு அறியாக் கழல்தொடி அதிகன்
கோள் அறவு அறியாப் பயம் கெழு பலவின்
வேங்கை சேர்ந்த வெற்பகம் பொலிய
வில்கெழு தானைப் பசும் பூண் பாண்டியன்
களிறு அணி வெல் கொடி கடுப்ப, காண்வர
ஒளிறுவன இழிதரும் உயர்ந்து தோன்று அருவி
நேர் கொள் நெடுவரைக் கவாஅன்
சூரர மகளிரின் பெறற்கு அரியோளே. *– பரணர் அக 162*

*"நெஞ்சே! கொள்ளக் கொள்ளக் குறைவு படாததும், சங்குகள் வளரும் ஆழத்தை உடைமையால் அளப்பதற்கு அரியதும், கரிய தோற்றத்தைக் கொண்டதும் ஆகிய கடலைக் கண்டது போன்ற தோற்றம் உடைய வானம், அதில் தீக் கொடியைப் போன்ற மின்னல் முகிலைப் பிளந்து அசைந்து செல்லக் கடுமையாய் இடிக்கும் இடியுடன் விரைந்த நீரைச் சிந்தி முடிவிடம் காணாதபடி மேகம் மழை பொழியும் அத் தகைய நள் இரவு அரிய காத்தல் தொழிலைச் செய்யும் காவலர் தம் காவலைப் புறக்கணித்திருந்த சமயத்தைப் பார்த்துக் குளிர் பொருந்திய வாடைக் காற்று வருத்த, அவளது தந்தையின் மாளிகையில் ஒரு பக்கத்தில் நின்று கொண்டிருந்தேன் நிற்க வாய்மைச் சொல்லையும் நல்ல புகழை அடைவிக்கும் இரவலர்க்கு, அவர் விருப்பம் பிழை யாதபடி கொடுக்கும் ஈகையையும் வார்க் கழலையும் வாகு வளையையும் அணிந்த, அதிகன் அவனது காய்க்கும் பயனை யுடைய பலா மரத்துடன் வேங்கை மரமும் பொலிவை*

அடைய, வில்லையுடைய படையுடைய பசும்பூண் பாண்டியனின் களிற்றின் மீது எடுக்கப்பட்ட கொடியைப் போன்று அழகுண்டாக இழியும் அருவிகள் பொருந்திய மலையின் சாரல் அச் சாரலில் உள்ள அச்சம் தரும் தெய்வப் பெண்களைப் போன்று பெறுவதற்கு அரியவள் நம் காதல் தலைவி கரு மணலைப் போன்ற கூந்தலையும் நீலமலர் போன்ற ஒளி பொருந்திய முகத்தில் சுழலும் கண்ணையும், வண்டுகள் விரும்பும் முல்லை அரும்பை வரிசையாய் வைத்தது போன்ற பல்லினையும், புன்னகையால் சிறந்து விளங்கும் நன்மையுடைய பவளம் போன்ற வாயையும் உடையவளாய், வளையல் விளங்கக் கையை வீசி, காற்றில் அசையும் தளிரைப் போன்று நடுங்கி வந்தாள். நம் நோயான வருத்தம் நீங்க இடைவிடாது என்னைத் தழுவிக் கொண்டாள்" என்று இரவு வந்து மீண்ட தலைவன் தன் நெஞ்சிற்குள் மகிழ்ந்து கூறிக் கொண்டான்.

## 411. இரவில் வரவேண்டா

யாமம் நும்மொடு கழிப்பி, நோய் மிக
பனி வார் கண்ணேம் வைகுதும்; இனியே;
ஆன்றல் வேண்டும் – வான் தோய் வெற்ப!
பல் ஆன் குன்றில் படு நிழல் சேர்ந்த
நல் ஆன் பரப்பின் குழுமூர் ஆங்கண்–
கொடைக் கடன் ஏன்ற கோடா நெஞ்சின்
உதியன் அட்டில் போல ஒலி எழுந்து
அருவி ஆர்க்கும் பெரு வரைச் சிலம்பின்
ஈன்றணி இரும் பிடி தழீஇ, களிறு தன்
தூங்குநடைக் குழவி துயில் புறங் காப்ப
ஒடுங்கு அளை புலம்பப் போகி, கடுங்கண்
வாள் வரி வயப் புலி கல் முழை உரற,
கானவர் மடிந்த கங்குல்;
மான் அதர்ச் சிறு நெறி வருதல், நீயே?

*– கோட்டம்பலத்துத் துஞ்சிய சேரமான் அக 168*

"வானைத் தீண்டும்படி உயர்ந்த மலை நாட்டை உற்ற நம் தலைவ! நீ எம்மிடம் வரும் இரவுக்காலத்தை உம்முடன்

பேரின்பம் அடைந்து கழிக்கின்றோம் ஆயினும், 'பல்லான் குன்றம்' என்ற பெயரைப் பெற்ற மலையில் பொருந்தும் நிழலில் உள்ள நல்ல பசுக்கூட்டப் பரப்பைக் கொண்டது கழுமூர். அவ் ஊரில் வள்ளன்மையாகிய கடமை மேற் கொண்ட நடுவுநிலைமை பிறழாத நல்ல நெஞ்சினை யுடைய உதியன் என்பவரின் சமையல்கட்டினைப் போன்று அருவிகள் ஒலி மிக்கெழுந்து ஆரவாரம் செய்யும். இத்தகைய பெரிய மலையின் பக்க மலையில், ஆண் யானை ஈன்றணிமையுடைய பெண் யானையைத் தழுவிக்கொண்டு அசையும் நடையைக் கொண்ட கன்றினது பக்கத்தே இருந்து அதன் உறக்கம் கெடாமல் காவல் செய்யும் அஞ்சாமை உடைய வாள் போன்ற வரிகளை உடைய வலிய புலி தான் தங்கியிருக்கினற முழை தனித்திருக்கப் புறத்தே சென்று குகைவாயினில் போய் முழங்கும் வேட்டுவரும் உறங்குவர் இத்தகைய இயல்புடைய நள்ளிரவில் விலங்குகள் உலவும் சிறிய வழியில் நீ வருவதை இனி ஒழித்திடல் வேண்டும்" என்று இரவுக் குறிவந்த தலை வனைத் திருமண ஏற்பாடு செய்யத் தோழி இயம்பினாள்.

## 412. அன்பற்றவன் நீ என அறிந்திலேன்

வாரணம் உரறும் நீர் திகழ் சிலம்பில்
பிரசமொடு விரைஇய வயங்கு வெள் அருவி
இன் இசை இமிழ் இயம் கடுப்ப, இம்மெனக்
கல் முகை விடர் அகம் சிலம்பு, வீழும்
காம்பு தலைமணந்த ஓங்கு மலைச் சாரல்
இரும்பு வடித்தன்ன கருங் கைக் கானவன்
விரி மலர் மராஅம் பொருந்தி, கோல் தெரிந்து
வரி நுதல் யானை அரு நிறத்து அழுத்தி,
இகல் அடு முன்பின் வெண் கோடு கொண்டு தன்
புல் வேய் குரம்பை புலர ஊன்றி,
முன்றில் நீடிய முழவு உறழ் பலவின்
பிழி மகிழ் உவகையன், கிளையொடு கலி சிறந்து
சாத் ஞெகிழியின் ஊன்புகழுக்கு அயரும்
குன்ற நாட! நீ அன்பிலை ஆகுதல்
அறியேன் யான்; அஃது அறிந்தனென் ஆயின்

அணி இழை, உண்கண், ஆய் இதழ்க் குறுமகள்
மணி ஏர் மாண்நலம் சிதையப்,
பொன்நேர் பசலை பாவின்று மன்னே!

*— மதுரைப் பாலாசிரியர் நப்பாலனார் அக 172*

*"யானைகள் பிளிறும் தன்மை பெற்ற பக்க மலையில் தேனுடன் கலந்து விளங்கும் வெண்மையான அருவிகள், இனிய இசை முழங்கும் இசைக்கருவி போல் 'இழும்' என்ற ஒலியுடன் மலையின் குகைகளும் பிளப்புண்ட இடங்களும் ஒலிக்க விழும் அங்கு மூங்கில் நெருங்கி உள்ளது அத்தகைய உயர்ந்த சாரலில் உள்ள, இரும்பை வார்த்துச் செய்தது போன்ற வலிய கைகளை உடைய வேட்டுவன் விரிந்த மலரை யுடைய வெண்கடம்ப மரத்தைச் சார்ந்து நின்று அம்பை ஆராய்ந்து வரிமிக்க நெற்றியைக் கொண்ட ஆண் யானையின் மார்பில் செலுத்திப் பகையைக் கொல்லும் அதன் வெண்மை யான கொம்பைக் கொணர்ந்து தன் புல் வேய்ந்த குடிசையில் புலால் நாற்றம் வீச ஊன்றுவான் அக் குடிலின் முன் பக்கத் தில் தண்ணுமை போல் விளங்கும் பலாப் பழத்தினின்று எடுத்த மதுவை உண்ட களிப்புக் கொண்டவனாய் உறவின ருடன் ஆரவாரம் மிக்குச் சந்தன விறகால் ஆன தீயில் ஊனுடன் கூடிய சோற்றை உண்பான் இத்தகு இயல்பு வாய்ந்த குன்றம் பொருந்திய நாட்டை உடையவனே தலை வனே! நீ அன்பில்லாதவன் என்பதை முன்பே அறிந்திலேன். அறிந்திருப்பின் அழகிய அணிகளையும் இதழையும் மையுண்ட கண்களையும் உடைய இளையவளான என் தலைவியின் நீலமணி போன்ற மாமை அழகுகெட அவள் மேனியில் பொன்னிறமுடைய பசலை பரப்பது இல்லையாகும்" என்று தோழி தலைவனைத் திருமணத்திற்கு விரைவுபடுத்தினாள்*

## 413. தலைவனை மணந்து வாழ்க

வயிரத்தன்ன வை ஏந்து மருப்பின்,
வெதிர் வேர் அன்ன பரூஉ மயிர்ப் பன்றி
பறைக் கண் அன்ன நிறைச் சுனை பருகி,
நீலத்தன்ன அகல் இலைச் சேம்பின்
பிண்டம் அன்ன கொழுங் கிழங்க மாந்தி,

பிடி மடிந்தன்ன கல்மிசை ஊழ் இழிபு
யாறு சேர்ந்தன்ன ஊறு நீர்ப் படாஅர்ப்
பைம் புதல் நளி சினைக் குருகு இருந்தன்ன
வண் பிணி அவிழ்ந்த வெண் கூதாளத்து
அலங்கு குலை அலரி தீண்டித் தாது உகப்
பொன் உரை கட்டளை கடுப்பக் காண்வரக்
கிளை அமல் சிறு தினை விளை குரல் மேய்ந்து,
கண் இனிது படுக்கும் நல் மலை நாடனொடு
உணர்ந்தன்ன புணர்ந்த நீயும், நின் தோட்
பணைக் கவின் அழியாது துணைப் புணர்ந்து, என்றும்
தவல் இல் உலகத்து உறைஇயரோ – தோழி
'எல்லையும் இரவும் என்னாது, கல்லெனக்
கொண்டல்வான் மழை பொழிந்த வைகறைத்
தண் பனி அற்சிரம் தமியோர்க்கு அரிது' என
கனவினும் பிரிவு அறியலனே; அதன்தலை
முன் தான் கண்ட ஞான்றினும்
பின் பெரிது அளிக்கும் தன் பண்பினானே. – *பரணர் அக 178*

*தோழி! "வயிரம் போன்ற கூர்மையான மேல் நோக்கிய கொம்பையும் மூங்கிலது வேரைப் போன்ற பருத்த மயிரையும் உடைய ஒரு பன்றி அது பறை போன்ற கண்ணை உடைய நீர்ச்சுனையின் நீரைக் குடித்தது; நீலமணி போன்ற நிறம் கொண்ட அகன்ற இலையைப் பெற்ற சேம்புச் செடியின் மாவுப் பிண்டம் போன்ற கொழுமையான கிழங்கைத் தின்றது; பெண் யானை துயின்று கிடந்ததைப் போன்று கல்லின் மேல் வருத்தமின்றி இறங்கி வந்தது; ஆற்றினை அடுத்துள்ள நீர் ஊறும் இடத்தில் உள்ள புதரின் கிளை மீது வெண் நாரைகள் இருந்தாற் போன்று தோன்றுகின்ற வெள்ளிய கூதளஞ் செடியின் அசையும் கொத்தில் உள்ள மலரில் பொருந்தியது; அப்போது அம் மலரின் பொடிமேலே உதிர்த்தலால் பொன் உரைக்கும் கட்டளைக் கல்லைப் போல் அழகுறத் தோன்றி யது; கிளைக்கும் தினையின் கதிரை மேய்ந்தது; பின் இனிதாய் உறங்கியது*

*இத்தகைய இடமான நல்ல மலை நாட்டை யுடைய வனுடன், ஊடிப்பின்பு உணர்ந்திடும் நீயும் உன் தோளின்*

மூங்கில் போன்ற அழகு ஒழியாது உன் தலைவனுடன் சேர்ந்து வாழ்ந்து பின்னர் என்றும் கெடாத மறுமை உலகத்தில் தங்கி வாழ்வீராக! பகல் இரவு என்றில்லாது 'கல்' என்ற ஒலியுடன் முகில் பெருமழையைச் சொரிந்த விடியற்காலத்தே குளிர்ந்த பனியை யுடைய அற்சிரக் காலம், பனிக்காலம் தனித்திருப்பவர்க்குத் தாங்குவதற்கு அரியதாகும் என்று கனவிலும் பிரிவதை அறியான் மேலும் நன் நற்குணத்தால் முதன் முதல் தான் கண்ட நாளினும் பின்பு எந்த நாளிலும் அருள் செய்வான் ஆவன்" என்று வரைவு மலிந்து தோழி சொன்னாள்.

## 414. கார் வந்தது தலைவன் வரவில்லையே

பூங் கண் வேங்கைப் பொன் இணர் மிலைந்து,
வாங்கு அமை நோன் சிலை எருத்தத்து இரீஇத்,
தீம் பழப் பலவின் சுளை விளை தேறல்
வீளை அம்பின் இளையரொடு மாந்தி
ஒட்டு இயல் பிழையா வய நாய் பிற்பட,
வேட்டம் போகிய குறவன் காட்ட
குளவித் தண் புதல் குருதியொடு துயல் வர,
முளவுமாத் தொலைச்சும் குன்ற நாட!
அரவு எறி உருமோடு ஒன்றிக் கால் வீழ்த்து
உரவு மழை பொழிந்த பானாட் கங்குல்
தனியை வந்த ஆறு நினைந்து, அல்கலும்
பனியொடு கலுழும் இவள் கண்ணே; அதனால்,
கடும் பகல் வருதல் வேண்டும் தெய்ய—
அதிர் குரல் முது கலை கறி முறி முனைஇ,
உயர்சிமை நெடுங் கோட்டு உகள, உக்க
கமழ் இதழ் அலரி தாஅய் வேலன்
வெறி அயர் வியன் களம் கடுக்கும்
பெரு வரை நண்ணிய சாரலானே. — *கபிலர் அக 182*

"வேங்கை மரத்தின் பொன் போன்ற பூங்கொத்துகளைச் சூடி, மூங்கிலால் ஆன வில்லைத் தோளில் இட்டு, இனிய பலாப்பழத்தின் சுளையினின்று விளைந்த தேனை இளைய ருடன் நிறையக் குடித்து, விலங்குகளைத் தப்பாமல் பற்றும்

*வலிய நாய் பின்வர, வேட்டைக்குச் சென்ற குறவன், காட்டில் உள்ள மல்லிகையான குளிர்ந்த புதரானது குருதியுடன் விளங்க முள்ளம் பன்றியைக் கொன்று வீழ்த்துவன் இத் தகைய குன்றுகளை யுடைய நாடனே! வலிமை யுடைய முகில் பாம்பைக் கொல்லும் இடியுடன் கூடி இறங்கி நீரைப் பெய்யும் நள்ளிரவில் நீ தன்னந் தனியனாய் வந்த வழியில் உள்ள துன்பத்தை நினைத்து இவள் கண்கள் எப்போதும் நீருடன் அழும். அதனால், அதிரும் குரலை யுடைய முசுக் கலை, மிளகுக் கொடியின் தளிரைத் தின்று வெறுத்து உயர்ந்த உச்சிகளைப் பெற்ற முகடுகளில் தாவும். அங்கு உதிர்ந்த மணம் கமழும் மலர்கள் பரந்து வேலன் வெறியாடும் களம் போன்று விளங்கும் இவ் இயல்புடைய மலையை அடுத் துள்ள சாரலில் நீ பகலில் வருதல் வேண்டும்." என்று இரவில் வருகின்ற தலைவனைப் பகலில் வருக என்றாள் தோழி*

## 415. முகிலே! தினைப்புனத்தில் பெய்வாய்

பெருங்கடல் முகந்த இருங்கிளைக் கொண்மூ!
இருண்டு உயர் விசும்பின் வலன் ஏர்பு வளைஇப்,
போர்ப்பு உறு முரசின் இரங்கி, முறை புரிந்து
அறன் நெறி பிழையாத் திறன் அறி மன்னர்
அருஞ் சமத்து எதிர்ந்த பெருஞ் செய் ஆடவர்
கழித்து எறி வாளின், நளிப்பன விளங்கும்
மின்னுடைக் கருவியை ஆகி, நாளும்
கொன்னே செய்தியோ, அரவம் பொன் என
மலர்ந்த வேங்கை மலி தொடர் அடைச்சி,
பொலிந்த ஆயமொடு காண்தக இயலித்,
தழலை வாங்கியும், தட்டை ஒப்பியும்
அழல் ஏர் செயலை அம் தழை அசைஇயும்
குறமகள் காக்கும் ஏனல்
புறமும் தருதியோ வாழிய, மழையே!

*- வீரை வெளியன் தித்தனார் அக 188*

*"பெருங்கடலின் நீரை முகந்த முகிலே, நீதான், இருண்டு உயர்ந்த வானில் வலமாக வந்து சுற்றித் தோலையுடைய முரசம் போன்று முழங்கி, செங்கோன்மை மேற்கொண்டு அற*

*நெறியினின்று தவறாத திறங்களை எல்லாம் நன்கு அறிந்த மன்னரின் அரிய போரில் பகைவருடன் எதிர்த்துப் போர் செய்யும் பேராற்றல் உடைய வீரர்கள் உறையினின்றும் நீக்கி வீசும் வாளைப்போல் செறிவனவாய் விளங்கும் மின்னல் தொகுதியுடன் நாள்தோறும் ஆரவாரம் மட்டும் செய்து நீங்குவாயோ! அல்லது பொன் போன்ற வேங்கை மலரால் ஆன மாலைகளைச் சூடி, தன் ஆயத்தாருடன் அழகுற நடந்து, தழலைச் சுற்றியும், தட்டையைத் தட்டியும், தீயின் கொழுந்தைப் போன்ற அழகிய தழையால் ஆன உடையை உடுத்தும் கிளி முதலியவற்றால் அழிவு உண்டாகாதபடி காவல் மேற்கொண்ட தலைவியான குறமகள் காக்கும் தினைப் புனத்தில் மழையும் பெய்வாயோ! நீ வாழ்க!" என்று இரவில் சிறைப்புறமாகத் தலைவன் நிற்கையில் தோழி சொன்னாள்*

## 416. தலைவி இரங்கத் தக்காள்

**மதி இருப்பன்ன மாசு அறு சுடர் நுதல்**
**பொன் நேர் வண்ணம் கொண்டன்று; அன்னோ!**
**யாங்கு ஆகுவள்கொல் தானே? விசும்பின்**
**எய்யா வரி வில் அன்ன பைந் தார்ச்**
**செவ்வாய்ச் சிறுகிளி சிதைய வாங்கி,**
**பொறை மெலிந்திட்ட புன் புறப் பெருங் குரல்**
**வளை சிறை வாரணம் கிளையொடு கவர,**
**ஏனலும் இறங்குபொறை உயிர்த்தன; பானாள்**
**நீ வந்து அளிக்குவை எனினே மால் வரை**
**மை படு விடரகம் துழைஇ, ஒய்யென**
**அருவி தந்த, அரவு உமிழ், திருமணி**
**பெரு வரைச் சிறுகுடி மறுகு விளக்குறுத்தலின்**
**இரவும் இழந்தனள் அளியள் – உரவுப்பெயல்**
**உரும் இறை கொண்ட உயர்சிமைப்**
**பெரு மலைநாட நின் மலர்ந்த மார்பே.**

*– பொதும்பில் கிழான் வெண்கண்ணனார் அக 192*

*"வளமையான மழையுடன் இடி தங்கியுள்ள உயர்ந்த உச்சியுற்ற பெரிய மலை நாட்டை உடையவனே! வானத்தில்*

உள்ள எய்யப்படாத அழகிய வில்லைப் போன்ற பசிய மாலையையும் சிவந்த வாயையும் கொண்ட சிறு கிளி அது தினையின் கதிரைச் சிதையுமாறு கொய்தது அத்தகைய பெரிய கதிரை, வளைந்த சிறகையுடைய காட்டுக் கோழி தன் இனத்துடன் கவர்ந்து உண்ணும் இத்தகைய நிலையில் தினைகள் வளைந்த கதிர்களை ஈன்றன. தினை முதிர்ந்தது ஆதலால், எம் தலைவி இனி வீட்டில் இருக்கும்படிச் செய்யப்படுவாள் பாதி இரவில் நீ வந்து அருள் செய்வாய் என்று கூறின், பெரிய மலையின் இருள் உடைய குகை யிடங்களைத் துழாவி விரைவாய் அருவி கொண்டு வருவது பாம்பு உமிழ்ந்த மணியை அம் மணி பெரிய மலையில் உள்ள எம் ஊரின் தெருவில் இருள் அகற்றி விளக்கும் அதனால், உன் அகலமான மார்புக் கூட்டத்தினை, தலைவி இரவிலும் இழந்து விட்டாள் இளம்பிறையைப் போன்ற இவளது குற்றமில்லாத ஒள்ளிய நெற்றியானது பொன்னைப் போன்ற நிறம் கொண்டது அந்தோ! அவள் இனி என்னா வளோ? அவள் இரங்கத் தக்காள்'' என்று தோழி தலைவனை செறிப்பு அறிவுறுத்தி இரவுக்குறி மறுத்தாள்.

## 417. சூர் மகளே அவள்

'கூறுவம் கொல்லோ? கூறவம் கொல்?' எனக்
கரந்த காமம் கைந்நிறுக் கல்லாது
நயத்துநாம் விட்ட நல்மொழி நம்பி
அரைநாள் யாமத்து விழுமழை கரந்து
கார்விரை கமழும் கூந்தல், தூவினை
நுண்நூல் ஆகம் பொருந்தினள், வெற்பின்
இளமழை சூழ்ந்த மடமயில் போல,
வண்டுவழிப் படர, தண்மலர் வேய்ந்து
வில் வகுப்பற்ற நல் வாங்கு குடைச் சூல்
அம் சிலம்பு ஒடுக்கி அஞ்சினள் வந்து
துஞ்சுஊர் யாமத்து முயங்கினள், பெயர்வோள்
ஆன்ற கற்பின் சான்ற பெரியன்
அம்மா அரிவையோ அல்லள்; தெனாஅது
ஆஅய் நல் நாட்டு அணங்குடைச் சிலம்பில்

கவிரம் பெயரிய உருகெழு கவாஅன்
ஏர் மலர் நிறைகனை உறையும்
சூர்மகள் மாதோ என்னும்என் நெஞ்சே! *– பரணர் அக 198*

*"என் நெஞ்சே! நம்முள் மறைந்துள்ள காமத்தை இவளுக்குச் சொல்லலாமா அல்லது சொல்லாமல் விடலாமா என்று இப்படி நினைத்து, முடிவில் காமத்தை அடக்க இயலாது, நாம் வெளியிட்ட இனிய மொழியை விரும்பி, அரை இரவில் பெய்யும் பெரு மழையில் மறைந்து கார் காலத்து மணம் கமழும் கூந்தலுடன், தூய நுட்பமான நூலால் ஆன ஆடையால் உடம்பைப் போர்த்தியவளாய், மலையில் மடப்பத்தை உடைய மயிலைப் போன்று, வண்டு கள் பின் தொடர்ந்து வந்து மொய்க்க மலர்களைச் சூடி; வில்லினைப் போன்ற தொழில் அமைந்த குடச்சூல் ஆகிய சிலம்பு ஒலியாது அடக்கி நடந்து அச்சத்துடன் வருவாள். ஊர் முழுவதும் துயிலும் இரவிலே நம்மைத் தழுவி மீண்டு செல்வாள். அவள் நிறைந்த கற்பால் உயர்ந்த பெருமையுடைய மாமை நிறம் கொண்ட பெண்ணோ அல்லள். தெற்கில் உள்ள ஆய் என்பவனின் நாட்டில் தெய்வம் விளங்கும் மலை யில் 'கவிரம்' என்ற யெரையுடைய அச்சம் உடைய பக்க மலையில், மலர்கள் மலர்ந்த சுனையில் உள்ள சூரர மகளே ஆவாள்" என்று தலைவன் தன் நெஞ்சுக்கு ஆறுதல் கூறினான்.*

## 418. இரவில் வருவதால் துன்பம்

வயங்குவெள் அருவிய குன்றத்துக் கவாஅன்
கயந்தலை மடப்பிடி இனன்ஏ மார்ப்பப்
புலிப்பகை வென்ற புண் கூர்யானை
கல்லகச் சிலம்பில் கைஎடுத்து உயிர்ப்பின்
நல்இணர் வேங்கை நறுவீ கொல்லன்
குருகுஊது மிதிஉலைப் பிதிர்வின் பொங்கிச்
சிறுபல் மின்மினி போலப் பலஉடன்
மணிநிற இரும்புதல் தாவும் நாட!
யாமே அன்றியும் உளர்கொல் பானாள்
உத்தி அரவின் பைத்தலை துமிய
உரஉரும் உரறும் உட்குவரு நனந்தலை

தவிர்வுஇல் உள்ளமொடு எஃகுத் துணையாக
கனைஇருள் பரந்த கல்அதர்ச் சிறுநெறி
தேராது வரூஉம் நின்வயின்
ஆர்அஞர் அரும்படர் நீந்து வோரே.

*— ஆலூர்கிழார் மகனார் கண்ணகனார் அக 202*

*"விளங்கும் வெண்மையான அருவிகளை உடைய மலைப் பக்கம் அங்கு மென்மையான தலையைப் பெற்ற தன் பெண் யானையும் சுற்றமும் இன்பம் அடையும்படி, புலியாகிய தம்மை எதிர்த்த பகையைப் போரிட்டு வென்றதால் உண் டான விழுப்புண் மிக்கது ஆண்யானை. அது கற்கள் பொருந்திய அம் மலைப் பக்கத்தில் கிடந்து புண்ணின் வலியைப் பொறுக்க மாட்டாது தன் கையை உயர்த்திப் பெரு மூச்சு எறியும் அப்போது அம் மூச்சுக் காற்றுப்பட்ட மலர்க் கொத்துகளை உடைய வேங்கையின் மலர்கள் கொல்லனின் உலைக்களத்தில் மிதித்தல் பொருந்திய துருத்தியால் ஊதப் பட்ட உலைத் தீயினின்று எழும் தீப்பொறி போல் சிதறின அவை பல சிறிய மின்மினிப் பூச்சிகள் போல நீலமணி போன்ற நிறம் பொருந்திய பெரிய புதரில் தாவும் இவ் இயல்பு பொருந்திய நாட்டையுடைய எம் பெருமகனே!*

*நள்ளிரவில் பாம்பின் கோடுகளையுடைய படம் பொருந் திய தலை துண்டாகுமாறு இடியானது முழங்கும் அச்சம் தோன்றுதற்குக் காரணமான பரந்த இடத்தில், சோம்பல் இல்லாத உள்ளத்துடன் நின் கையில் வேலே துணையாய்க் கொண்டு செறிந்த இருளையுடைய சிறு வழியில் சிறிதும் ஆராய்ச்சி இல்லாது இவ்வாறு இரவுக் குறியில் வரு கின்றனை! இத்தகைய நின்னிடம் எண்ணத்தைச் செலுத்திப் பொறுத்துக் கொள்ள இயலாததும் கடப்பதற்கு அரியது மான துன்பக் கடலை நீந்தியபடி இருப்பவர் நாங்கள் மட்டுமே என்று எண்ணுகின்றோம் எங்களை அன்றி வேறு எவரேனும் உள்ளாரோ! இருந்தால் கூறுக. என்றாள் தோழி*

## 419. வாழ்க தலைவி

யாம இரவின் நெடுங் கடை நின்று
தேம் முதிர் சிமையக் குன்றம் பாடும்

நுண் கோல் அகவுநர் வேண்டின், வெண் கோட்டு
அண்ணல் யானை ஈயும் வண் மகிழ்
வெளியன் வேண்மான் ஆஅய் எயினன்
அளி இயல் வாழ்க்கைப் பாழிப் பறந்தலை
இழைஅணி யானை இயல் தேர் மிஞிலியொடு
நண்பகல் உற்ற செருவில் புண் கூர்ந்து
ஒள் வாய் மயங்கு அமர் விழ்ந்தென, 'புள் ஒருங்கு
அம் கண் விசும்பின் விளங்கு ஞாயிற்று
ஒண் கதிர் தெறாமை, சிறகரின் கோலி
நிழல் செய்து உழறல் காணேன், யான்' எனப்
படுகளம் காண்டல்செல்லான், சினம் சிறந்து
உரு வினை நன்னன், அருளான், சுரப்ப
பெரு விதுப்புற்ற பல் வேள் மகளிர்
குரூஉப் பூம் பைந் தார் அருக்கிய பூசல்
வசை விடக் கடக்கும் வயங்கு பெருந் தானை
அகுதை களைதந்தாங்கு மிகு பெயல்
உப்புச் சிறை நில்லா வெள்ளம் போல
நாணு வரை நில்லாக் காமம் நண்ணி
நல்கினள், வாழியர், வந்தே – ஓரி
பல் பழப் பலவின் பயம் கெழு கொல்லிக்
கார் மலர் கடுப்ப நாறும்
ஏர் நுண், ஓதி மாஅயோளே! *– பரணர் அக 208*

*"நெஞ்சே! இரவின் இறுதிப் பகுதியில் நீண்ட கடை வாயிலில் நின்று தேன் நிறைந்த உச்சியை உடைய தன் குன்றைப் பாடும் சிறு பிரப்பங்கோலையுடைய பாணர் பரிசிலை விரும்பின் வெளியன் வேண்மான் ஆஅய் எயினன் என்பவன் வெண்மையான கொம்பையும் தலைமையையுமுடைய யானையை வழங்கும் கொடைத் தன்மையாலான மகிழ்ச்சியை உடையவன்; அருள் பொருந்திய வாழ்வினன் அவன் பாழி என்றும் ஊரில் உள்ள போர்க் களத்தில் ஓடையை அணிந்த யானையையும் தேரினையும் உடைய மிஞிலி என்பவனுடன் நண்பகற் போதில் உண்டான போரில் ஒளிபெற்ற வாட்படை மயங்கிய போரிலே புண்பட்டு வீழ்ந்தான்*

*அழகிய இடமுடைய வானத்தில் விளங்கிய கதிரவனின் ஒள்ளிய கதிர் அவ்ன் உடலைக் காயாது பறவைகள் யாவும் ஒன்று கூடித் தம் இறகுகளால் பந்தலிட்டு நிழல் செய்து கொண்டித்தலை நான் காணேன் என்று அவன் இறந்து பட்ட இடத்தைக் காண்பதற்குச் செல்லாமல் சினம் மிகுந்து நன்னன் அருள் இல்லாது மறைந்து கொண்டான்; அங்ஙன மாக - மிக்க விரைவு கொண்டு வந்த பல வேளிர் மகளிர் மலர்களால் ஆன மாலையை அழித்துவிட்டு அழுகை ஆர வாரத்தைச் செய்தனர் அதனைப் பழியின்றிப் பகைவர் படையினை வெல்லும் பெரும் படையையுடைய அகுதை என்பவன் நீக்கினான் அதைப் போல்..*

*ஓரி என்ற வள்ளலின் பல பழங்களைக் கொண்ட பலா மரங்கள் பொருந்திய பயன்மிக்க கொல்லி மலையில் கார் காலத்தில் பூக்கும் மலர் போல், மணம் கமழும் அழகும் மென்மையும் உடைய கூந்தலையுற்ற மாமை நிறத் தலைவி உப்பால் இடப்பட்ட அணையினால் தடைப்பட்டு நில்லாத மழையால் உண்டான வெள்ளம் போல் நாணத்துள் அடங்காத காமத்துடன் வந்து நம் துன்பத்தை நீக்கினாள். அவள் வாழ்வாளாக!" என்று தலைவன் தன் உள்ளத்திற்கு உரைத்தான்*

## 420. நெஞ்சே, நின் மார்பில் வேல் பாய்க

தாஇல் நன்பொன் தைஇய பாவை
விண்தவழ் இளவெயிற் கொண்டுநின் றன்ன
மிருகவின் எய்திய, தொகுகுரல் ஐம்பால்
கிளைஅரில் நாணற் கிழங்குமணற்கு ஈன்ற
முளைஓரன்ன முள்எயிற்றுத் துவர்வாய்
நயவன் தைவரும் செவ்வழி நல்யாழ்
இசைஓர்த் தன்ன இன்தீம் கிளவி
அணங்குசால் அரிவையை நசைஇ, பெருங்களிற்று
இனம்படி நீரின் கலங்கிய பொழுதில்
பெறல்அருங் குரையள் என்னாய் வைகலும்
இன்னா அருஞ்சுரம் நீந்தி நீயே
என்னை இன்னற் படுத்தனை மின்னுவசிபு

உரவுக்கார் கடுப்ப மறலி மைந்துற்று
விரவுமொழிக் கட்டூர் வேண்டுவழிக் கொளீஇப்
படைநிலா இலங்கும் கடல்மருள் தானை
மட்டுஅவிழ் தெரியல் மறப்போர்க் குட்டுவன்
பொருமுரண் பெறாஅது விலங்குசினம் சிறந்து
செருச்செய் முன்பொடு முந்நீர் முற்றி
ஓங்குதிரைப் பௌவம் நீங்க ஒட்டிய
நீர்மாண் எஃகம் நிறத்துச்சென்று அழுத்தக்
கூர்மதன் அழியரோ நெஞ்சே! ஆனாது
எளியள் அல்லோள் கருதி
விளியா எவ்வம் தலைத்தந் தோயே. *– பரணர் அக 212*

*"என் நெஞ்சே! உன்னுடன் வாழ்வது அரிது! வன்மையற்ற மாற்று உயர்ந்த பொன்னால் செய்யப்பெற்ற பாவை, அது வானில் பரவும் இளவெயிலைத் தன்மீது கொண்டு விளங்கு வது போல் மிக்க அழகு பொருந்தியவள்; திரண்ட கொத்தா கிய கூந்தலை உடையவள்; நாணற் கிழங்கு மணலில் ஈன்ற முளை போன்ற வெண்மையான கூரிய பற்களை உடைய சிவந்த வாயினள்; யாழில் வல்லவன் இயக்கும் செவ்வழிப் பண்ணின் இசையைக் கேட்டாற் போன்ற மிக இனிய சொற்களை உடையவள். தெய்வத்தின் இயல்புடையவள் இத் தன்மைகள் வாய்ந்த மங்கையை விரும்பிப் பெரிய ஆண் யானைக் கூட்டம் படிந்து கலக்கிய நீரைப் போன்று, கலக்கம் அடைந்த போது, 'இவள் பெறுவதற்கு அரியவள்!' என்று எண்ணவில்லை! நாள் தோறும் இடுக்கண் பொருந்திய அரிய அறநெறியைக் கடந்து வந்து என்னைத் துன்பத்துக் குள் ஆக்கினை! இடைவிடாமல் காண்பதற்கு எளியவள் அல்லாத ஒருத்தியை எண்ணிக் கெடாத துன்பத்தை என்னிடத்துக் கொணர்ந்து விட்டனை இத்தகைய நீ -*

*செங்குட்டுவன், படைக் கருவிகளை யுடைய ஒளிவீசும் பெரிய கடல் போன்ற படையைக் கொண்டவன்; தேன் ஒழுகும் மலையையுடையவன்; அஞ்சாமையுடன் போர் செய்வதில் வல்லவன்; மின்னலால் வானைப் பிளந்து வன்மை யுடன் எழும் முகில் போல் பகைத்து வலிமையுடன் பல மொழியும் கலந்து பாசறையைத் தான் வேண்டும் இடங்*

*களில் அமைப்பவன்; தன்னுடன் போர் செய்யும் பகையை நில எல்லைக்குள் காணாதவன் ஆனான் அதனால் பெருகி எழும் சினம் மிக்குப் போர் ஆற்றும் வன்மையால் கடலை வளைத்து உயர்ந்த அலைகளையுடைய அக் கடலைப் பிறக்கிடும்படி ஓட்டியது அவனது சிறந்த வேல் அவ் வேலானது உன் மார்பில் தைத்து அழுந்திட உன் மிக்க செருக்கு அழிவ தாகுக!" என்று தனக்குள் கூறிக் கொண்டான் தலைவியின் அருமை அறிந்த தலைவன்*

## 421. பகலிலே வருக

'கிளை பாராட்டும் கடு நடை வயக் களிறு
முளை தருபு ஊட்டி, வேண்டு குளகு அருத்த
வாள் நிற உருவின் ஒளிறுபு மின்னி
பரூஉ உறைப் பல் துளி சிதறி, வான் நவின்று
பெரு வரை நளிர் சிமை அதிர வட்டித்து
புயல் ஏறு உரைஇய வியல் இருள் நடு நாள்
விறல் இழைப் பொலிந்த காண்பு இன் சாயல்
தடைஇத் திரண்ட நின் தோள் சேர்பு அல்லதை
படாஅவாகும், எம் கண்' என, நீயும்
'இருள் மயங்கு யாமத்து இயவுக் கெட விலங்கி
வரி வயங்கு இரும் புல வழங்குநர்ப் பார்க்கும்
பெரு மலை விடரகம் வர அரிது' என்னாய்
வர எளிதாக எண்ணுதி, அதனால்
நுண்ணிதின் கூட்டிய படு மாண் ஆரம்
தண்ணிது கமழும் நின் மார்பு, ஒரு நாள்
அடைய முயங்கேம்ஆயின், யாமும்
விறல் இழை நெகிழச் சாஅய்தும், அதுவே
அன்னை அறியினும் அறிக! அலர் வாய்
அம்பல் மூதூர் கேட்பினும் கேட்க!
வண்டு இறை கொண்ட எரி மருள் தோன்றியொடு
ஒண் பூ வேங்கை கமழும்
தண் பெருஞ் சாரல் பகல் வந்தீமே! — *கபிலர் அக 218*

*"தன் இனத்தைப் போற்றும் கடிய செலவையுடைய வன்மையான ஆண் யானை மூங்கில் முளைகளை ஈந்து பின்*

*தழையையும் தந்து உண்ணும்படிச் செய்யும். வாள் போன்ற நிறத்துடன் ஒளிறுமாறு மின்னிப் பருத்த பல மழைத் துளி களைச் சிதறி வானில் பயின்று பெரிய மலையின் குளிர்ந்த உச்சி அதிரச் சூழ்ந்து முகிலானது இடியுடன் பரந்த மிக்க இருள் கொண்ட நடு இரவு அவ் இரவில் மேம்பட்ட அணி களால் பொலிவுற்ற காண்டற்கு இனிய மென்மையதாய் வளைந்து திரண்ட நின் தோளைச் சேர்ந்தால் அல்லது எம் கண்கள் துயிலா என்று கூறி - நீயும், இருள் மிக்க நடு யாமத் தில் வழி தடுமாறலால் விலகி, வரிகள் விளங்கும் பெரிய புலி வழியில் வருபவரைப் பார்த்திருக்கும் பெருமலையின் பிளப்பையுடைய இடத்தில் வருவது அரிது என்று எண்ணாது வருவதற்கு எளியது என நினைத்தாய்.*

*நுட்பமாய் அறிந்து பல மணங்களைக் கலந்த மாண்பு பொருந்திய சந்தனம் கமழும் உன் மார்பை ஒரு நாளேனும் பொருந்தத் தழுவாது போயின் நாங்களும் எம் அணி நெகிழ்ந்து விழ மெலிவை அடைவோம் அதனால், அதனைத் தாய் அறியினும் அறிக! அலர் கூறும் மங்கையரின் வாயி னின்று வரும் பழிச் சொற்களை முதிய இவ் ஊர் கேட்பினும் கேட்க! வண்டுகள் மொய்க்கும் தீப் போன்ற, தோன்றிப் பூவுடன் வேங்கைப் பூ மணக்கும் குளிர்ந்த பெரிய மலைச் சாரலில் பகலில் வருவீராக!" என்று தோழி தலைவனை நோக்கிச் சொன்னாள்.*

## 422. தேடிச் செல்வோம் தலைவனை

வான்உற நிவந்த நீல்நிறப் பெருமலைக்
கான நாடன் உறீஇய நோய்க்குன்
மேனி ஆய்நலன் தொலைதலின், மொழிவென்
முழவுமுகம் புலராகக் கலிகொள் ஆங்கண்
கழாஅர்ப் பெருந்துறை விழவின் ஆடும்
ஈட்டுஎழில் பொலிந்த ஏந்துகுவவு மொய்ம்பின்
ஆட்டன் அத்தி நலன்நயந்து உரைஇத்
தாழ்இருங் கதுப்பின் காவிரி வவ்வலின்
மாதிரம் துழைஇ, மதிமருண்டு அலந்த
ஆதி மந்தி காதலற் காட்டி

படுகடல் புக்க பாடல்சால் சிறப்பின்
மருதி அன்ன மாண்புகழ் பெறீஇயர்
சென்மோ வாழி, தோழி! பல் நாள்
உரவுஉரும் ஏறொடு மயங்கி
இரவுப்பெயல் பொழிந்த ஈர்ந்தண் ஆறே. *– பரணர் அக 222*

*"தோழியே! வானத்தில் மிகவும் உயர்ந்த நீலநிற மலையின் பக்கத்தில் உள்ள நாட்டை உடைய தலைவன் உண்டாக்கிய நோயால் உன் மேனியின் அழகு அழிந்தது அதனால் யான் இதனைக் கூறுவேன்! கேட்பாயாக: முழவு முட்டுதலின் ஒலி ஆரவாரம் பொருந்திய துறையில் நிகழும் விழாவில் ஆடிய, திரண்ட அழகால் நிமிர்ந்த திரண்ட தோளையுடைய 'ஆட்டன் அத்தி' என்பவனின் அழகினை விரும்பிப் பரந்து வநது தாழ்ந்து தொங்கும் கூந்தலையுடைய காவிரியானவள் அவனைக் கவர்ந்து கொண்டாள் அதனால், அவனுடைய மனைவியான ஆதிமந்தி திசையெல்லாம் தேடி வாடினாள் அவளுக்கு அவளுடைய காதலனைக் காட்டி, ஒலிக்கும் கடலில் புகுந்து மறைந்தாள் பாடுதல் அமைந்த சிறப்பை யுடைய மருதி, அவளைப் போன்ற சிறந்த புகழைப் பெறும் பொருட்டு, பலநாளும் வலிய இடியேற்றுடன் கூடி இரவு முழுவதும் மழை பெய்தலால் ஈரம் உடைய சேற்று வழியில் நம் தலைவனைத் தேடிச் செல்வோம்!" என்றாள் தலைவி தன் தோழியிடம்*

## 423. தலைவர் இரவில் செல்வது நல்லது

பிரசப் பல்கிளை ஆர்ப்ப கல்லென
வரைஇழி அருவி ஆரம் தீண்டித்
தண்என நனைக்கும் நளிர் மலைச்சிலம்பில்
கண்என மலர்ந்த மாஇதழ்க் குவளைக்
கல்முகை நெடுஞ்சனை நம்மொடு ஆடி
பகலே இனிதுஉடன் கழிப்பி, இரவே
செல்வர் ஆயினும் நன்றுமன் தில்ல –
வான்கண் விரிந்த பகல்மருள் நிலவின்
சூரல் மிளைஇய சாரல் ஆர்ஆற்று
ஓங்கல் மிசைய வேங்கை ஒள்வீப்

புலிப்பொறி கடுப்பத் தோன்றலின், கயவாய்
இரும்பிடி இரியும் சோலைப்
பெருங்கல் யாணர்த்தம் சிறுகுடி யானே.

*- அண்டர் மகன் குறுவழுதியார் அக 228*

*"தோழியே! தேனை உண்ணும் பல வண்டுகள் ஆர வாரிக்கக் 'கல்' என்ற ஓசையுடன் மலையினின்றும் இறங்கும் அருவி அது சந்தன மரத்தில் வீழ்ந்து அதனைக் குளிர்ந்த தாக நனைக்கும் இவ் இயல்புடைய செறிந்த பக்க மலையில் உள்ள, விழியைப் போன்று மலர்ந்த, கரிய இதழையுடைய குவைள மலர்களையுடைய மலையில் உள்ள பெரிய சுனை யில் தலைவர் நம்முடன் இருந்து நீர் விளையாடிப் பகற் பொழுதை இனிதே நம்முடன் இருந்து கழிப்பாராக! கழித்து, வானில் உள்ள பகல் போன்ற நிலவொளியில் பிரப்பங் காட்டினையுடைய சாரல் பொருந்திய வழியிலே, மலையின் மேலுள்ள வேங்கை மரத்தின் மலர்கள் புலியின் உடம்பில் உள்ள புள்ளிகளைப் போல் தோன்றுதலால், பெரிய வாயை யுற்ற பெண்யானை அஞ்சியோடும் இத் தன்மையுடைய சோலைகள் பொருந்திய பெரிய மலையிடத்தாகிய சிறிய குடியான ஊர்க்கு இரவில் நம்மைப் பிரிந்து செல்வாரா யினும் இனிதே செல்லுக"*

## 424. தலைவனின் நட்பு வெறியாடலில்

காண்இனி வாழி, தோழி! பானாள்
மழைமுழங்கு அரவம் கேட்ட; கழைதின்
மாஅல் யானை புலிசெத்து வெரீஇ
இருங்கல் விடரகம் சிலம்பப் பெயரும்
பெருங்கல் நாடன் கேண்மை, இனியே
குன்ற வேலிச் சிறுகுடி ஆங்கண்
மன்ற வேங்கை மணநாட் பூத்த
மணிஏர் அரும்பின் பொன்வீ தாஅய்
வியல்அறை வரிக்கும் முன்றில், குறவர்
மனைமுதிர் மகளிரொடு குரவை தூங்கும்
ஆர்கலி விழவுக்களம் கடுப்ப நாளும்
விரவுப்பூம் பலியொடு விரைஇ, அன்னை

கடியுடை வியல்நகர்க் காவல் கண்ணி
'முருகு'என வேலன் தரூஉம்
பருவ மாகப் பயந்தன்றால், நமக்கே.

*– கொடிமங்கலத்து வாதுளி நற்சேந்தனார் அக 232*

"தோழி! நான் கூறுவதைக் கேட்பாயாக: நள்ளிரவில் முகில் முழங்கும் இடியொலியைக் கேட்ட மூங்கிலைத் தின்னும் யானை, அந்த முகிலின் ஒலியைப் புலி எழுப்பும் ஒலி என எண்ணி அஞ்சிப் பெரிய மலையின் குகையிடம் எல்லாம் எதிரொலி உண்டாகக் கதறி ஓடும். இத் தன்மை கொண்ட பெரிய மலை பொருந்திய நாட்டையுடைய தலைவனின் நட்பானது இக் காலத்தில், குன்றுகள் என்ற வேலியை யுடைய சிற்றூரின், மன்றத்தில் உள்ள வேங்கை மரங்கள் மண நாளாகிய காலத்தில் பூத்தன மணியைப் போன்ற அரும்பு மலர்ந்த பொன்போன்ற அப் பூக்கள் பரவி அகலமான பாறைகளை அழகு படுத்தும் வீட்டு முற்றம் அதில் குறவர் இல்லத்தில் உள்ள ஆடலில் வல்ல மகளி ரோடு குரவை ஆடும் ஆரவாரம் மிக்க விழாக் களைத்தைப் போன்றது. தாய், நாள் தோறும் பலவகையான பூக்களுடன் கைக் கொண்டு காவல் பொருந்திய அகலமான மலையில் தெய்வத்தால் தீமை நேராதபடி காப்பதை எண்ணி, நமக் குண்டான வேறுபாடு முருகனால் ஏற்பட்டது என்று வெறி யாட வேலனை அழைக்கும் காலமாக நமக்கு அமைந்தது" என்று தலைவி வருந்தினாள்

## 426. தலைவிக்கு மருந்துண்டேல் போ!

மான்றமை அறியா மரம்பயில் இறும்பின்
ஈன்றுஇளைப் பட்ட வயவுப் பிணப்பசித்தென
மடமான் வல்சி தரீஇய, நடுநாள்
இருள்முகைச் சிலம்பின், இரைவேட்டு எழுந்த
பணைமருள் எருத்தின் பல்வரி இரும்போத்து
மடக்கள் ஆமான் மாதிரத்து அலறத்
தடக்கோட்டு ஆமான் அண்ணல் ஏஎறு
நனந்தலைக் கானத்து வலம்படத் தொலைச்சி
இருங்கல் வியல்அறை சிவப்ப ஈர்க்கும்

**பெருங்கல் நாட! பிரிதி ஆயின்**
**மருந்தும் உடையையோ மற்றே இரப்போர்க்கு**
**இழைஅணி நெடுந்தேர் களிறொடு என்றும்**
**மழைசுரந்தன்ன ஈகை, வண்மகிழ்**
**கழல்தொடித் தடக்கை, கலிமான் நள்ளி**
**நளிமுகை உடைந்த நறுங்கார் அடுக்கத்து**
**போந்தை முழுமுதல் நிலைஇய காந்தள்**
**மென்பிணி முகைஅவிழ்ந்து அலர்ந்த**
**தண்கமழ் புதுமலர் நாறும் நறுநுதற்கே?** – *கபிலர் அக 238*

*“மரங்கள் ஒன்றுடன் ஒன்று பின்னியிருத்தல் அறியப் படாதவாறு நெருங்கியுள்ள காடு அதில் கன்றை ஈன்று காவற்பட்ட வேட்கையுடைய பெண்புலி பசியால் வருந்தியது அதற்குப் பனம் துண்டைப் போன்ற பிடரியையுடைய பெரிய ஆண்புலி, நள்ளிரவில், இளைய மானினை உணவாகக் கொணர்ந்து தருவதற்கு விரும்பிப் புறப்பட்டது அது மடப்பம் பொருந்திய கண்ணைப் பெற்ற காட்டுப் பசு தொலைவில் நின்று அலற, வளைந்த கொம்பையுடைய அக் காட்டுப் பசு வின் ஆணை காட்டில் வலப்பக்கமாக விழும்படி கொன்றது அங்குள்ள பெரிய மலையை அடுத்துள்ள அகன்ற பாறைகள் இரத்தத்தால் செந்நிறம் அடையும்படி செய்து இழுத்துக் கொண்டு போனது இத் தன்மையுடைய பெருமலை பொருந்திய நாட்டை உடையவனே' நீ இவளைப் பிரிந்து செல்வாயானால்,*

*இரந்து வந்த பாணர் முதலியவர்க்கு நள்ளி என்ற வள்ளல் அணிகள் அணியப் பெற்ற உயர்ந்த தேரை ஆண் யானையுடன் என்றும் வானம் மழை பொழிவதைப் போல் அளிக்கும் ஈகையையும் மகிழ்ச்சியையும் உடையவன்; சுழல விடப்பட்ட தொடியை உடைய பெரிய கையினன்; செருக் குடைய குதிரைகளை உடையவன் இத்தகைய அவனது செறிந்த அரும்புகள் மலர்ந்த கரிய பக்க மலைகளில் பனை மரத்தின் அடிப்பக்கத்தில் நிலை பெற்றிருக்கும், காந்தளின் மெல்லிய அரும்புகள் இதழ் விரிந்து மலர்ந்து, மணம் கமழும் புதிய மலர் போல், நறுமணம் கமழும் நெற்றியுடைய தலை வியை இறவாது காப்பதற்கு, மருந்தும் பெற்றுள்ளாயோ!*

பெற்றிராவிட்டால் எம் தலைவியைப் பிரியாதே!" என்று தோழி வற்புறுத்தினாள்

## 427. பலமுறை தலைவனைத் தழுவுதல்

அரும்புமுதிர் வேங்கை அலங்கல் மென்சினைச்
கரும்புவாய் திறந்த பொன்புரை நுண்தாது
மணிமருள் கலவத்து உறைப்ப, அணிமிக்கு
அவிர்பொறி மஞ்ஞை ஆடும் சோலைப்
பைந்தாட் செந்தினைக் கொடுங்குரல் வியன்புனம்
செந்தார்க் கிள்ளை நம்மொடு கடிந்தோன்
பண்புதர வந்தமை அறியாள், 'நுண்கேழ்
முறிபுரை எழில்நலத்து என்மகள் துயர் மருங்கு
அறிதல் வேண்டும்'என, பல்பிரப்பு இரீஇ
அறியா வேலற் தரீஇ, அன்னை
வெறிஅயர் வியன்களம் பொலிய ஏத்தி
மறி உயிர் வழங்கா அளவைச் சென்றுயாம்
செலவரத் துணிந்த, சேண்விளங்கு, எல்வளை
நெகிழ்ந்த முன்கை, நேர் இறைப் பணைத் தோள்
நல்எழில் அழிவின் தொல்கவின் பெறீஇய
முகில்த்துவரல் இளமுலை மூழ்க, பல்ஊழ்
முயங்கல் இயைவது மன்னோ தோழி!
நறைகால் யாத்த நளிர்முகைச் சிலம்பில்
பெருமலை விடரகம் நீடிய சிறியிலைச்
சாந்த மென்சினை தீண்டி, மேலது
பிரசம் தூங்கும் சேண்சிமை
வரையக வெற்பன் மணந்த மார்பே!

*– பேரி சாத்தனார் அக 242*

"தோழியே! அரும்புகள் முதிர்ந்த வேங்கை மரத்தின் மென்மையான கிளைகள் அசையும் அவற்றில் வண்டுகள் வாயைத் திறத்தலால் பொன் போன்ற நுட்பமான பொடிகள் நீல மணியைப் போன்ற தோகையில் உதிரும். ஆதனால் அழகு மிகுந்து புள்ளிகளையுடைய மயில் ஆடிடும் சோலை அதன் பக்கத்தில் பசிய தாளினையுடைய சிவந்த தினையின் வளைந்த கதிர்களை உடைய பெரிய கொல்லை அதில் வரும்

சிவந்த வரிகளையுடைய கிளிகளை நம்முடன் இருந்து ஓட்டிய நம் தலைவன் அவன் நல்லியல்புகள் தருவதால் வந்த வருத்தத்தை அறியாதவளாகி, நம் தாய் நுட்பமான திறம் பொருந்திய தளிர் போன்ற எழுச்சியுடைய தன் மகளின் துன்பம் வந்த இயல்பை அறிய வேண்டும் என்றும் பல வகைப் பொருள்கள் கொண்ட பிரப்பங்கூடையைப் பலியாக வைத்து வெறியாடும் பெரிய களம் பொலியும்படித் துதித்து ஆட்டுக்குட்டியைப் பலி தர உள்ளனள் அதனைச் செய்வதற்கு முன்னம் - ஏறி இறங்கும்படியாகச் சேர்த்த தொலைவினும் சென்று விளங்கும் ஒளிகொண்ட வளை கழன்ற முன் கையும், நேரான சந்தையுடைய பெரிய தோளும், நல்ல அழகு நீங்குவதினின்று நீங்கிப் பழைய அழகைப் பெறுமாறு நாம் செல்வோம் சென்று, - தேன் கூடுகள் நிரம்பிய குளிர்ந்த குகைகளைக் கொண்ட பக்க மலைகள் பொருந்திய பெரிய மலையின் பிளப்புகள் மிக்க நீண்டு வளர்ந்த சிறிய இலைகளையுடைய சந்தன மரத்தின் மென்மையான கிளைகள் தீண்டத் தேன் அடை தொங்கும் உயர்ந்த உச்சியைப் பெற்ற மூங்கிலைத் தன்னகத்தே கொண்ட மலை நாடனின், முன்பு கூடிய மார்பை, அரும்பி வரும் தன்மையுடைய இளைய முலை மூழ்கப் பலமுறை தழுவுவது தக்கது" என்றாள் தலைவி

## 428. நிகழ்ச்சி நகைப்புக்குரியது

நகைநீ கேளாய் தோழி! அல்கல்
வயநாய் எறிந்து, வன்பறழ் தழீஇ
இளையர் எய்துதல் மடக்கிக் கிளையொடு
நால்முலைப் பிணவல் சொலியக் கான்ஒழிந்து
அரும்புழை முடுக்கர் ஆள்குறித்து நின்ற
தறுகட் பன்றி நோக்கி, கானவன்
குறுகினன் தொடுத்த கூர்வாய்ப் பகழி
மடைசெலல் முன்பின்தன் படைசெலச் செல்லாது
'அருவழி விலக்கும்எம் பெருவிறல் போன்'ம் என
எய்யாத பெயரும் குன்ற நாடன்
செறிஅரில் துடக்கலின், பரீஇப் புரிஅவிழ்ந்து
ஏந்து குவவு மொய்ம்பின் பூச்சோர் மாலை

ஏற்றுஇமில் கயிற்றின், எழில்வந்து துயல்வர
இல்வந்து நின்றோற் கண்டனள், அன்னை!
வல்லே என்முகம் நோக்கி
'நல்லை மன்!' என நகூஉப் பெயர்ந்தோளே.

*– கபிலர் அக 248*

*"தோழியே! நேற்று இரவு நிகழ்ந்த சிரிப்புக்கு இடமான ஒரு நிகழ்ச்சியைக் கேள்:*

*ஓர் அஞ்சாமையுடைய ஆண் பன்றி, வேட்டையாடுவதில் வல்ல நாயைக் கடிந்து விலக்கி, வேட்டையாடும் வேடர்கள் நெருங்கி வருவதையும் போக்கி, வன்மைமிக்க குட்டிகளை அணைத்துக் கொண்டு பெண் பன்றி தன் சுற்றத்துடன் அப் புறம் போகச் செய்தது; காட்டினின்று வெளிவந்தது அக் காட்டின் வாயிலாகிய அரிய முடுக்கில் வேட்டையாடுபவரை எதிர் நோக்கி நின்றது அதனை வேடன் ஒருவன் அருகில் போய் நின்று பார்த்தான். அதனைக் கொல்லுதற்குத் தொடுத்த அம்பைத் தொடுக்காமல் நின்றான் 'பகைவர் படையைத் தடுப்பதற்குச் செல்லும் ஆற்றல் வாய்ந்த தன் படை மறவர் புறங்காட்டி ஓடிவிடத் தான் மட்டும் புறங் கொடுத்து ஓடாமல் பகைவர் வரும் வழியில் தடுத்து நிற்கும் எம் வலிய வீரனைப் போல் இப் பன்றி உள்ளது' என எண்ணி வியந்து, அதன் மீது அம்பு எய்யாமல் திரும்பிப் போனான் இத்தகைய இடமான மலை பொருந்திய நாட்டினை உடையவன் நம் தலைவன்.*

*அவன், நெருங்கிய புதர்கள் பற்றி இழுத்தலால் மாலை யின் புரி அறுபட்டு விழுவதால், திரண்ட மலர்கள் உதிரும் மாலையானது காளையின் முதுகில் கிடக்கும் கயிற்றைப் போன்று அழகுடன் அசைய, நம் இல்லத்தில் வந்து நின்றான் அவ்வாறு வந்து நின்றவனை, நம் தாய் கண்டாள் பின் விரைவாக என் முகத்தைப் பார்த்தாள் பார்த்து என்னை நோக்கி, 'நீ மிகவும் நல்லவள்!' என்று கூறினள் தலைவன் சிரித்தபடி அப்பால் சென்றான் என்ன செய்வோம்!" என்று தலைவிக்குத் தோழி கூறினாள்*

## 429. என் செய்வோம் யாம்?

இடம்படுபு அறியா வலம்படு வேட்டத்து,
வாள்வரி நடுங்கப் புகல்வந்து, ஆளி
உயர்நுதல் யானைப் புகர்முகத்து ஒற்றி
வெண்கோடு புய்க்கும் தண்கமழ் சோலைப்
பெருவரை அடுக்கத்து ஒருவேல் ஏந்தி
தனியன் வருதல் அவனும் அஞ்சான்
பனிவார் கண்ணேன் ஆகி, நோய்அட
எமியேன் இருத்தலை யானும் ஆற்றேன்
யாங்குச் செய்வாம்கொல் தோழி! ஈங்கைத்
துய்அவிழ் பனிமலர் உதிர வீசித்
தொழில்மழை பொழிந்த பானாட் கங்குல்
எறிதிரைத் திவலை தூஉம் சிறுகோட்டுப்
பெருங்குளம் காவலன் போல
அருங்கடி அன்னையும் துயில்மறந் தனளே?

*- நக்கண்ணையார் அக 252*

*“தோழியே, கேள்! தன்னால் எய்யப்படும் விலங்குகள் இடப் பக்கத்தில் விழுவதை அறியாத வெற்றி பொருந்திய வேட்டையை யுடைய புலியானது நடுங்கிட ஆளி பாய்ந்து, உயர்ந்த நெற்றியை யுடைய யானையின் புள்ளி பொருந்திய முகத்தைத் தாக்கி, அதன் வெண்மையான கொம்பைப் பறிக்கும் அத் தன்மை வாய்ந்த இடமான குளிர்ந்த மணம் கமழும் சோலை பொருந்திய மலையின் சாரல், அதில்! வேல் ஒன்றை மட்டும் துணையாய்க் கொண்டு வரத் தலைவனும் அஞ்சவில்லை நீர் வடியும் கண்ணை உடையேனாகிப் பிரிவுத் துன்பம் வருத்த யானும் ஆற்றேன். கடுமையான காவலை மேற்கொண்ட நம் அன்னையும், இண்டையின் மலர் உதிரும் படி, பெய்யும் தொழிலையுடைய முகில் நீரினைச் சொரியும் நள்ளிரவில், வீசும் அலைகளின் துளிகள் பரவும் சிறிய கரையைப் பெற்ற குளத்தைக் காவல் செய்பவனைப் போன்று, காவலை மேற்கொண்டு உறங்க மறந்து விட்டாள்! யாம் என்ன செய்வோம்” எனத் தலைவி கூறினாள்.*

## 430. இருளில் ஒளி குன்றும் மணி!

நன்னன் உதியன் அருங்கடிப் பாழி
தொல்முதிர் வேளிர் ஓம்பினர் வைத்த
பொன்னினும் அருமைநற்கு அறிந்தும், அன்னோள்
துன்னலம் மாதோ எனினும் அஃதுஒல்லாய் –
தண்மழை தவழும் தாழ்நீர் நனந்தலைக்
கடுங்காற்று எடுக்கும் நெடும்பெருங் குன்றத்து
மாய இருள்அளை மாய்கல் போல
மாய்கதில் வாழிய, நெஞ்சே! நாளும்
மெல்இயற் குறுமகள் நல்அகம் நசைஇ
அரவு இரைதேரும் அஞ்சுவரு சிறுநெறி
இரவின் எய்தியும் பெறாஅய், அருள்வரப்
புல்லென் கண்ணை புலம்புகொண்டு, உலகத்து
உள்ளோர்க்கு எல்லாம் பெருநகை யாகக்
காமம் கைம்மிக உறுதர
ஆனா அரும்படர் தலைத்தந் தோயே! – *பரணர் அக 258*

"*என் நெஞ்சே! நீ வாழ்க! நன்னன் உதியன் என்பவனின் அருங் காவலைக் கொண்ட பாழிச் சிலம்பில் பழமை மிக்க வேளிர்கள் பாதுகாவல் செய்து தேடி வைத்த பொன்னைவிட அடைவதற்கு அரியவள் தலைவி என்பதை அறிந்திருந்தும் அவளை நாம் நெருங்க மாட்டோம் என்று யான் கூறினும் அங்ஙனம் என் கூற்றிற்கு உடன்படாமல் - மென்மைத் தன்மை பெற்ற உன் நல்ல உள்ளத்தில் விரும்பினாய் விரும்பிப் பாம்புகள் இரையைத் தேடித் திரியும் அச்சம் பொருந்திய சிறிய வழியில் இரவுப் பொழுதில் சென்றும் அவளைப் பெறாதவள் ஆயினாய் ஆனதால் கண்டவர்க்கு அருள் உண்டாகப் புல் என்ற கண்ணை உடையையாய்த் தனிமை மேவி உலகில் உள்ளவர்க்கு எல்லாம் பெரிய இகழ்ச்சி ஏற்படக் காமம் அளவு கடந்து உண்டாதலால் அருந்துன் பத்தை என்னிடம் உண்டாக்கினாய் குளிர்ந்த முகில்கள் தவழ்ந்து பாயும் அருவி நீரையுடைய அகன்ற இடம் பொருந் திய கடிய காற்றுச் சுழலும் நீண்ட பெரிய குன்றில் மயக்கத் தைத் தரும் இருளுடைய குகையில் ஒளியில்லாது மறையும்*

*மணிகள் போன்று நீ ஒளியிழந்து மறைந்தொழிக! இதுவே எம் விருப்பம்" என்று தலைவன் நெஞ்சிற்கு உரைத்தாள்*

## 431. தலைவனின் மகிழ்வு

**முதைபடு பசுங்காட்டு அரில்பவர் மயங்கிப்**
**பகடுபல பூண்ட உழவுறு செஞ்செய்**
**இடுமுறை நிரம்பி, ஆகுவினைக் கலித்து**
**பாசிலை அமன்ற பயறுஆ புக்கென**
**வாய்மொழித் தந்தையைக் கண்களைந்து அருளாது**
**ஊர்முது கோசர் நவைத்த சிறுமையின்**
**கலத்தும் உண்ணாள், வாலிதும் உடாஅள்**
**சினத்தின் கொண்ட படிவம் மாறாள்**
**மறம்கெழு தானைக் கொற்றக் குறும்பியன்**
**செருஇயல் நல்மான் திதியற்கு உரைத்து,அவர்**
**இன்உயிர் செகுப்பக் கண்டுசினம் மாறிய**
**அன்னி மிஞிலி போல, மெய்ம்மலிந்து**
**ஆனா உவகையேம் ஆயினெம் பூமலிந்து**
**அருவி ஆர்க்கும் அயம்திகழ் சிலம்பின்**
**நுண்பல் துவலை புதல்மிசை நனைக்கும்**
**வண்டுபடு நறவின் வண்மகிழ்ப் பேகன்**
**கொண்டல் மாமலை நாறி**
**அம்தீம் கிளவி வந்த மாறே.** *– பரணர் அக 262*

*"பல வகையான பூக்களும் கொட்டும் அருவி நீர் ஆரவாரம் செய்யும் சுனைகளும் விளங்கும் பக்க மலை அதில் அருவி நீரின் நுட்பமான துளிகள் விழுந்து அம் மலை மீது உள்ள புதர்களை நனைக்கும் அம் மலைக் குரியவன் பேகன் அவன் வண்டு பொருந்திய மதுவையும் வள்ளன்மையால் அடையும் மகிழ்ச்சியையும் உடையவன் அவனது முகில் தவழும் அம் மலையைப் போன்ற நறு மணம் உடையவளாய் இனிய சொல்லை யுடைய நம் தலைவி வந்தது புணர்ந்தமையால்*

*பழைமையுடைய பசுமையான காட்டில் பின்னிக் கிடக்கும் கொடிகளை உழக்கி எருதுகள் பூண்ட பல ஏரால் உழவினையுடைய புன்செய் நிலம், அதில் இடம் பெறுவன*

இட்டுப் பொருந்திய செயல் உடைமையால் தழைத்துப் பசிய இலைகள் நிறைந்த பயறு அதில் பசுவானது புகுந்து மேய்ந்தது அதனால் பழமை பொருந்திய ஊரினரான கோசர் உண்மையுடைய தன் அன்னி மிஞிலியின் தந்தையை இரக்க மின்றிக் கண்ணைப் பிடுங்கினர். அக் கொடுமை காரணமாக உணவைக் கலத்தில் இட்டு உண்ணாமலும், தூய உடையை உடுக்காமலும் சினத்தால் மேற்கொண்ட நோன்பினின்றும் மாறாமலும் இருந்தாள் இருந்து அச் செய்தியை, வீரம் பொருந்திய படையை உடையவனான வெற்றி யுடைய குறும்பனான போர்த்திறம் மிக்க குதிரையையுடைய திதியன் என்பவனுக்குச் சொல்லி, சினம் ஒழிந்து மகிழ்ச்சி அடைந் தாள் அன்னி மிஞிலி அவள் அடைந்த மகிழ்ச்சியைப் போல் பூரிக்கப் பெற்ற பெருமகிழ்வு உடையோம் ஆயினோம்" என்று தலையுடன் கலந்து வந்த தலைவன் கூறினான்

## 432. நானே நாணமும் நட்பும் இல்லாதவள்!

அறியாய் வாழி, தோழி! பொறிவரிப்
பூநுதல் யானையொடு புலிபொரக் குழைந்த
குருதிச் செங்களம் புலவுஅற, வேங்கை
உருகெழு நாற்றம் குளவியொடு விலங்கும்
மாமலை நாடனொடு மறுஇன்று ஆகிய
காமம் கலந்த காதல் உண்டுஎனின்
நன்றுமன்; அதுநீ நாடாய் கூறுதி
நாணும் நட்பும் இல்லோர்த் தேரின்
யான்அலது இல்லை, இவ்உலகத் தானே—
இன்உயிர் அன்ன நின்னொடும் சூழாது
முளைஅளி மூங்கிலின், கிளையொடு பொலிந்த
பெரும்பெயர் எந்தை அருங்கடி நீவி
செய்துபின் இரங்கா வினையொடு
மெய்அல் பெரும்பழி எய்தினென் யானே!

*– வடமவண்ணக்கண் பேரிசாத்தனார் அக 268*

"தோழி, வாழ்க! நான் சொல்வதை மனத்தால் ஆராய்ந்து பார், புள்ளிகளையும் வரிகளையும் உடைய பொலிவுடைய நெற்றியை யுடைய யானையோடு புலி போரிட, அதனால்

*குருதியால் குழைந்த சிவந்த களம் புலால் நாற்றம் நீங்க, அதனை வேங்கை மலர்களின் நாற்றம், காட்டு மல்லிகை மலர் நாற்றத்துடன் கூடி மாற்றும் இவ் இயல்பு கொண்ட பெரிய மலை நாட்டையுடைய தலைவனுடன் குற்றம் அறத் தோன்றிய அன்பு கலந்த கூட்டம் இருக்குமானால் அது மிகவும் நன்றாகும் அதனை நீ ஆராயாது கூறுகின்றாய் இனிய உயிரைப் போன்ற உன்னுடன் கலந்து எண்ணாமல், முளைகளால் அழகுபெற்ற மூங்கிலைப் போல் பெருஞ் சுற்றத்தால் சிறப்புற்ற பெரும்புகழ் கொண்ட தந்தையின் அரிய காவலைத் தாண்டி, செய்துபின் இரங்குதற்குக் காரண மாகாத வினையைச் செய்ததால், ஆராய்ந்து பார்க்கின், பெரிய பழிகளை நான் அடைந்துள்ளேன்*

*ஆகவே, இந்த வுலகத்தில் நாணும் நட்பும் இல்லாத வரை ஆராய்ந்தால் என்னை ஒழிய யாரும் இலர்" என்று தலைவியிடம் தோழி இயம்பினாள்.*

## 433. தலைவன் தொடர்பு என்னவாகுமோ?

இரும்புலி தொலைத்த பெருங்கை வேழத்துப்
புலவுநாறு புகர்நுதல் கழுவக் கங்குல்
அருவி தந்த அணங்குடை நெடுங்கோட்டு
அஞ்சுவரு விடர்முகை ஆர்இருள் அகற்றிய
மின்ஒளிர் எஃகம் செல்நெறி விளக்கத்
தனியன் வந்து, பனிஅலை முனியான்
நீர்இழி மருங்கின் ஆர்இடத்து அமன்ற
குளவியொடு மிடைந்த கூதளங் கண்ணி
அசையா நாற்றம் அசைவளி பகர
துறுகல் நண்ணிய கறிஇவர் படப்பைக்
குறிஇறைக் குரம்பைநம் மனைவயின் புகுதரும்
மெய்ம்மலி உவகையன் அந் நிலை கண்டு
'முருகு'என உணர்ந்து, முகமன் கூறி
உருவச் செந்தினை நீரொடு தூஉய்
நெடுவேள் பரவும் அன்னை அன்னோ!
என்ஆவது கொல்தானே பொன்என
மலர்ந்த வேங்கை அலங்குசினை பொலிய

**மணிநிற மஞ்ஞை அகவும்**
**அணிமலை நாடனொடு அமைந்தநம் தொடர்பே?**

*– மதுரை அறுவை வாணிகண் இளவேட்டனார் அக 272*

*"நம் தலைவன், பெரிய புலியை வென்ற பெருங்கையைப் பெற்ற யானையின் புலால் நாற்றம் நாறும் புள்ளியுடைய நெற்றியைக் கழுவுதற்கு இரவில் அருவி நீரை வழங்கிய தெய்வம் வாழும் உச்சியை யுற்ற மலையன் அம் மலையின் அச்சம் தரும் பிளப்பாகிய குகைகளில் உள்ள அரிய இருளைப் போக்கிய மின்னலைப் போல் விளங்கும் வேலானது வழியைக் காட்டத் தனியனாய் வந்து பனி வருத்துவதை வெறுக்காதவனாய் வரலானான் அருவிநீர் ஒழுகும் பக்கத்தைப் பெற்ற அரிய இடத்தில் நெருங்கிய காட்டு மல்லிகை மலருடனே கூதள் மலரையும் சேரக் கட்டிய மாலையின் நறுமணத்தைக் காற்று வெளிப்படுத்தும்*

*பொற்றைக் கல் பொருந்திய மிளகுக்கொடி படர்ந்த தோட்டத்தையுடைய சிறிய இறப்பைக் கொண்ட குடிசையான நம் மனையில் உடல் பூரிக்கும் மகிழ்ச்சி மிக்கவனாய்ப் புகுகின்றான் அந்த நிலையை நோக்கி நம் தாய் அவனை முருகக் கடவுளே எழுந்தருளுகின்றான் என்று நினைத்துப் புகழுரை கூறினாள். நல்ல நிறம் பொருந்திய செந்தினையை நீருடனே தூவி முருகப் பெருமானைத் துதிப்பாள்.*

*ஐயோ! பொன்னைப் போன்று மலர்ந்துள்ள வேங்கை மரத்தின் அசையும் கிளை மேலும் அழகுபெற நீல மணியைப் போன்ற நிறம் உடைய மயில் இருந்து அகவும் இவ் இயல்பு பொருந்திய மலை நாட்டை யுடையவனான நம் தலைவனுடன் பொருந்திய நம் நட்பு இனி என்ன நிலையை அடையுமோ!" என்று தோழி தலைவியை நோக்கிக் கூறினாள்*

## 434. தலைவனின் மலையருவியில் துன்பம் நீங்குவோம்!

**குணகடல் முகந்த கொள்ளை வானம்**
**பணைகெழு வேந்தர் பல்படைத் தானைத்**
**தோல்நிரைத் தனைய ஆகி, வலன்ஏர்பு**

கோல்நிமிர் கொடியின் வசிபட மின்னி
உரும்உரறு அதிர்குரல் தலைஇ, பானாள்
பெருமலை மீமிசை முற்றினஆயின்
வாள்இலங்க அருவி தாஅய் நாளை
இருவெதிர் அம்கழை ஒசியத் தீண்டி
வருவது மாதோ, வண்பரி உந்தி
நனிபெரும் பரப்பின் நம்ஊர் முன்துறை
பனிபொரு மழைக்கண் சிவப்ப, பானாள்
முனிபடர் அகல மூழ்குவம் கொல்லோ –
மணிமருள் மேனி ஆய்நலம் தொலைய
தணிவு அருந்துயரம் செய்தோன்
அணிகிளர் நெடுவரை ஆடிய நீரே! — *கபிலர் அக 278*

*"கீழ்க்கடலில் நீரை முகந்த மிகுதியான முகில்கள், வீர முரசம் முழங்கும் மன்னர் படைக்கலங்கள் ஏந்திய படையில் யானைகளை அணிவகுத்தது போல் தோன்றி, வலமாக எழுந்து ஊன்று கோலில் உயர்ந்து விளங்கும் கொடிகளைப் போல் இருள் விலக, மின்னி, இடித்து, உரறி, மிக்க முழக்கத்தைப் பொருந்தி, நள்ளிரவில் பெரிய மலையின் உச்சியில் சூழ்ந்தன ஆகையால், நாளை, ஒளி விளங்கும் அருவிப் பெருக்கம் பரவிப் பெரிய மூங்கிலின் அழகிய தண்டு முறியும் படித் தாக்கி, அழகிய குதிரை மரங்களைச் சாய்த்து, மிக்க பெரிய பரப்பை யுடைய நம் நீர்த்துறையில் வரும் அவ்வாறு வந்தால், மணியைப் போன்ற மேனியின் நலம் கெடுமாறு நீக்க இயலாத துன்பத்தைச் செய்தவனுடைய அழகு விளங்கும் நீண்ட மலையிலே தோய்ந்து வரும் நீரில் பனியைப் போன்ற கண்கள் சிவக்க நள்ளிரவில் துன்பம் நீங்க மூழ்குவோமா?" என்று தோழி தலைவிக்குக் கூறினாள்.*

## 435. விரைவில் வருக திருமண நாள்

பெருமலைச் சிலம்பின் வேட்டம் போகிய
செறிமடை அம்பின், வல்வில் கானவன்
பொருதுதொலை யானை வெண்கோடு கொண்டு
நீர்திகழ் சிலம்பின் நன்பொன் அகழ்வோன்
கண்பொருது இமைக்கும் திண்மணி கிளர்ப்ப

வைந்நுதி வால்மருப்பு ஒடிய உக்க
தெண்நீர் ஆலி கடுக்கும் முத்தமொடு
மூவேறு தாரமும் ஒருங்குடன் கொண்டு
சாந்தம் பொறைமரம் ஆக நறைநார்
வேங்கைக் கண்ணியன் இழிதரு நாடற்கு
இனிதீம் பலவின் ஏர்கெழு செல்வத்து
எந்தையும் எதிர்ந்தனனன், கொடையே; அலர்வாய்
அம்பல் ஊரும் அவனொடு மொழியும்
சாய்இறைத் திரண்ட தோள் பாராட்டி
யாயும், 'அவனே' என்னும்; யாமும்
'வல்லே வருக, வரைந்த நாள்!' என
நல்இறை மெல்விரல் கூப்பி
இல்உறை கடவுட்கு ஆக்குதும் பலியே!

*– தொல்கபிலர் அக 282*

*தோழி! "நான் சொல்வதைக் கேட்பாயாக: பெரிய மலையின் பக்கத்தில் வேட்டைக்குச் சென்றான், மூட்டுவாய் செறிந்த அம்பையும் வலிய வில்லையும் உடைய வேட்டுவன் அவன் தன்னுடன் போரிட்டு இறந்த யானையின் வெண்மை யான கொம்பால் நீர் விளங்கும் மலையில் சிறந்த பொன்னைத் தோண்டிடப் பொன்னுடனே கண் பார்வையை மழுங்கச் செய்யும் மணிகள் மேலே வெளிப்பட்டு விளங்கும். அவற்றைக் கூர்மையான முனையைப் பெற்ற யானைக் கொம்பு ஒடிவ தால் உதிரும் தெளிந்த ஆலங் கட்டியைப் போன்ற முத்து களுடன் கூட்டி வேவ்வேறான அம் மூன்றையும் ஒருசேர வாரிக் கொண்டு சந்தன மரம் காவடியாக அமைய நறைக் கொடியின் நாரினால் கட்டப்பட்ட மலர் மாலையைத் தலையில் அணிந்து கொண்டவனாய் அம் மலையினின்று இறங்கி வருவான் இத்தன்மை பெற்ற நாட்டிற்குத் தலைவன் நம் பெருமான்*

*அவனுக்கு, இனிமையான பலா மரங்களை கொண்ட அழகு மிக்க செல்வத்தைப் பெற்ற நம் தந்தையும் உன்னைக் கொடுத்தற்கு இசைந்தான் பழியைக் கூறும் சிலரும் பலரும் அறியக் கூறும் வாயை பெற்ற ஊரில் உள்ளவரும் அவ னொடு உன்னைச் சார்த்தியே கூறுவர் நம் தாயும் வளைந்த*

*சந்தினை யுடைய திரண்ட நின் தோள்களைப் பாராட்டி உனக்கு அவனே உரியவன் என்று கூறுவாள் நாமும் நம் மணத்துக்குக் குறிப்பிடப்பட்ட நாள் விரைவாக வருவ தாகுக என மென்மையான விரலைக் குவித்து இல்லத்துத் தெய்வத்துக்குப் பலி செலுத்துவோமாக" எனத் தோழி இயம்பினாள்*

## 436. அவளைக் காண இயலாது

**சென்மதி; சிறக்க,நின் உள்ளம்! நின்மலை**
**ஆரம் நீவிய அம்பகட்டு மார்பினை**
**சாரல் வேங்கைப் படுசினைப் புதுப்பூ**
**முருகுமுரன் கொள்ளும் உருவக் கண்ணியை**
**எரிதின் கொல்லை இறைஞ்சிய ஏனல்**
**எவ்வம் கூரிய, வைகலும் வருவோய்!**
**கனிமுதிர் அடுக்கத்துஎம் தனிமை காண்டலின்**
**எண்மை செய்தனை ஆகுவை நண்ணிக்**
**கொடியோர் குறுகும் நெடிஇருங் குன்றத்து**
**இட்டுஆறு இரங்கும் விட்டுஒளிர் அருவி**
**அருவரை இழிதரும் வெருவரு படாஅர்க்**
**கயந்தலை மந்தி உயங்குபசி களைஇயர்**
**பார்ப்பின் தந்தை பழச்சுளை தொடினும்**
**நனிநோய் ஏய்க்கும் பனிகூர் அடுக்கத்து**
**மகளிர் மாங்காட்டு அற்றே துகள்அறக்**
**கொந்தோடு உதிர்த்த கதுப்பின்**
**அம்தீம் கிளவித் தந்தை காப்பே.**

*– விற்றூற்று மூதெயினனார் அக 288*

"*தலைவ! நின் மலையினது சந்தனம் பூசப்பெற்ற அழகிய விளக்கமுற்ற மார்பை உடையவனாய் வேங்கைமரத்தின் மிக்க கிளைகளில் உள்ள புதிய பூக்களால் ஆன, பிறவற்றின் மணத்துடன் மாறுபடும் அழகிய மாலையைப் பெற்றவனாய், தீயால் எரிக்கப் பெற்ற கொல்லையில் விளைந்து முற்றிய தினைப்புனத்தில் உன் துன்பத்தைச் சொல்வதற்கு நாள் தோறும் வருவோய்!*

*வழிப்பறி செய்பவர் நிறைந்திருக்கும் பெரிய குன்றத்தில் குறுகிய நெறியில் ஒலிக்கும் மலை அருவி வந்து விழும் இடமாகிய அச்சம் உடைய சிறு புதர்களில் இருக்கும் மென்மையான தலையைக் கொண்ட மந்தியின் பசியை நீக்கு தற்காக அதன் குட்டியின் தந்தையான கடுவன் பலாப்பழத் தின் சுளையைத் தோண்டினாலும் பெரிய நோய் போலத் துன்பம் மிகச் செய்கின்ற சூரர மகளிர் வாழ்கின்ற மாங்காடு என்ற ஊரின் காவலை ஒத்தது துகள் தீரும்படி பூக்கொத்து களோடு உதிர்ந்துவிட்ட கூந்தலையும் அழகிய இனிய சொற் களையும் உற்ற இவளின் தந்தையின் காவலிடம் அங்ஙன மாகவும் கனிகள் உதிர்கின்ற இந்தப் பக்க மலையில் நாங்கள் தனிமையாய் இருப்பதைக் காண்பதால் எங்கள் அருமையை உணராது எளியவராய் எண்ணுகின்றாய். நின் உள்ளம் சிறப்பதாகுக! சென்று வருக! தலைவி இன்று வரமாட்டாள்" என்று தலைவனிடம் தோழி கூறினாள்*

## 437. நாம் செய்ய வேண்டியதைச் செப்புக!

**கூறாய், செய்வது தோழி! வேறுஉணர்ந்து**
**அன்னையும் பொருள்உகுத்து அலமரும்; மென்முறிச்**
**சிறுகுளகு அருந்து தாய்முலை பெறாஅ**
**மறிகொல்லைப் படுத்தல் வேண்டி, வெறிபுரி**
**ஏதில் வேலன் கோதை துயல்வரத்**
**தூங்கும் ஆயின், அதூஉம் நாணுவல்**
**இலங்குவளை நெகிழ்ந்த செல்லல்; புலம்படர்ந்து**
**இரவின் மேயல் மரூஉம் யானைக்**
**கால்வல் இயக்கம் ஒற்றி, நடுநாள்**
**வரையிடைக் கழுதின் வன்கைக் கானவன்**
**கடுவிசைக் கவணின் எறிந்த சிறுகல்**
**உடுஉறு கணையின் போகிச் சாரல்**
**வேங்கை விரிஇணர் சிதறி,தேன் சிதையூஉப்**
**பலவின் பழத்துள் தங்கும்**
**மலைகெழு நாடன் மணவாக் காலே!** — ***கபிலர் அக 292***

"*கோமியே! விளங்கும் வளை நெகிழ்வதற்குக் காரண*

*உண்டானது என்று உணர்ந்து பொருளைச் செலவு செய்து மனம் கலங்குவாள் மென்மையான தழையாகிய உணவைத் தின்னும் தாய் முலையைப் பெறாத ஆட்டுக் குட்டியைப் பலிக்காகக் கொல்வதை விரும்பி வெறியாடலைச் செய்வான் வேலன் அவன் யாதும் தொடர்பு இல்லாதவன். தன் மார்பில் மாலை அசைய வெறி ஆட வருவான். வரின் அதையும் கண்டு நாணம் கொள்வேன் தன்னுடைய தினைப் புனத்தில் வந்து இரவில் தினையை மேய்வதில் பொருந்தும் யானையினது காலின் வலிய நடையை அறிந்து மலைமேல் பரணில் உள்ள வலிய கையை யுடைய வேட்டுவன், நள்ளிர வில், கவணில் வைத்து எறியப்படும் கல், இறகையுடைய அம்புபோல் விரைவாய்ப் போய்ப் பக்க மலையில் வேங்கை மரத்தின் பூக்களைச் சிதறும்; தேனை அழிக்கும்; பின் பலாப் பழத்துள் போய்த் தங்கிவிடும் இவ் இயல்புடைய நாடன் நம்மை மணந்து கொள்ளாது போனால். நாம் செய்ய வேண்டியது இன்னது எனக் கூறுவாய்" என்று தலைவி தோழியைப் பார்த்துச் சொன்னாள்*

## 438. தோழி மகிழ்ச்சி

பயம்கெழு திருவின் பல்கதிர் ஞாயிறு
வயங்குதொழில் தரீஇயர், வலன்ஏர்பு விளங்கி
மல்குகடல் தோன்றி யாங்கு, மல்குபட
மணிமருள் மாலை, மலர்ந்த வேங்கை
ஒண்தளிர் அவிர்வரும் ஒலிகெழு பெருஞ்சினைத்
தண்துணி அசைவளி தைவரும் நாட!
கொன்றுசினம் தணியாது, வென்றுமுரண் சாம்பாது
இரும்பிடித் தொழுதியின் இனம்தலை மயங்காது
பெரும்பெயற் கடாஅம் செருக்கி, வளமலை
இருங்களிறு இயல்வரும் பெருங்காட்டு இயவின்
ஆர்இருள் துமிய வெள்வேல் ஏந்தித்
தாழ்பூங் கோதை ஊதுவண்டு இரீஇ
மென்பிணி அவிழ்ந்த அரைநாள் இரவு,இவண்
நீ வந் ததனினும் இனிது ஆகின்றே
தூவல் கள்ளின் துனைதேர் எந்தை

கடியுடை வியல்நகர் ஓம்பினள் உறையும்
யாய்அறிவுறுதல் அஞ்சிப் பானாள்
காவல் நெஞ்சமொடு காமம் செப்பேன்
யான்நின் கொடுமை கூற, நினைவுஆங்கு
இனையல் வாழி, தோழி!நத் துறந்தவர்
நீடலர் ஆகி வருவர், வல்லென
கங்குல் உயவுத் துணை ஆகிய
துஞ்சாது உறைவி இவள்உவந் ததுவே!

*— மதுரைப் பண்ட வாணிகன் இளந்தேவனார் அக 298*

*“உலகத்துக்குப் பயன் மிக்க பல செல்வங்களைத் தரும் ஞாயிறு, விளங்கும் தொழில்களை இந்த உலகத்துக்கு தரு மாறு வலமாய் எழுந்து விளங்கிப் பெரிய கடலில் தோன்றி யதைப் போல், நீலமணி போன்று இருளையுடைய மாலைக் காலத்தில், நிறைவாக மலர்ந்துள்ள வேங்கை மரத்தின் ஒளி பொருந்திய தழைத்த தளிர்களையுடைய பெரிய கிளையில் உள்ள குளிர்ந்த துளிர்களை அசைந்து வரும் காற்று மெல்ல எனத் தடவி உதிர்க்கும் இவ் இயல்புடைய நாட்டை உடையவனே!*

*தன் பகையைக் கொன்று சினத்தைப் போக்கிக் கொள்ளாமலும், அல்லது வென்று ஒட்டி அதன் வலி மையை மெலிவிக்காமலும், பெரிய பெண் யானைகளின் கூட்டமாய் இனத்துடன் கலவாமலும், பெரிய மழை போன்ற மதத்தால் செருக்கை அடைந்து மலையில் பெரிய ஆண் யானை இயங்கும் பெரிய காட்டு வழி அரிய இருள் நீங்க வெண்மையான வேலைக் கையில் கொண்டு மென்மையான அரும்பு மலர்ந்த தாழ்ந்த மலர் மாலையில் மொய்க்கும் வண்டுகளை ஒட்டிப் பாதி நாளான இரவில் நீ இங்கு வருகின்றாய் இவ்வாறு வரும் நின் வருகையை விட - மழை போன்ற கள்ளையும், விரையும் தேரையும் உடைய எம் தந்தையின் காவல் பொருந்திய பெரிய மனையில் எம் தாய் எம்மைப் பாதுகாத்திருப்பாள்; அவளது காவல் அகலாதி ருக்கும் நள்ளிரவில் அவள் அறிந்திடற்கு அஞ்சி, எம் காம நோயை வெளிப்படுத்தாது மெல்ல நீ வரவில்லை என்ற கொடுமையைச் சொல்ல எண்ணியவுடனே தோழி அதைக்*

குறிப்பால் உணர்ந்து மெல்ல 'தோழியே! வருந்தாதே! நம்மைத் துறந்து போன தலைவர் காலம் தாழ்த்தாது இப் போதே விரைந்து வருவார்' என்று சொல்லி எனக்குத் துணை யாகித் துயிலாமல் என்னுடன் கூடியிருந்த என் தோழியாய இவள் மகிழ்ந்தது எனக்கு இனிமையாய் இருந்தது!" என்று இரவு வந்த தலைவனிடம் தலைவி சொன்னாள்

## 439. தாயின் ஐயத்தின் விளைவு

சிலம்பில் போகிய செம் முக வாழை
அலங்கல் அம் தோடு, அசைவளி உறுதொறும்
பள்ளி யானைப் பரூஉப் புறம் தைவரும்
நல் வரை நாடனொடு அருவி ஆடியும்
பல் இதழ் நீலம் படு சுனைக் குற்றறும்.
நறு வீ வேங்கை இன வண்டு ஆர்க்கும்
வெறி கமழ் சோலை நயந்து விளையாடலும்
அரிய போலும் – காதல் அம் தோழி!'
இருங் கல் அடுக்கத்து என்னையர் உழுத
கரும்பு எனக் கவினிய பெருங் குரல் ஏனல்
கிளி பட விளைந்தமை அறிந்தும், 'செல்க' என
நம் அவண் விடுநள் போலாள், கைம்மிகச்
சில் சுணங்கு அணிந்த, செறிந்து வீங்கு, இள முலை
மெல் இயல் ஒலிவரும் கதுப்பொடு
பல் கால் நோக்கும் – அறன் இல் யாயே

*– மதுரை அறுவை வாணிகன் அக 302*

"அன்பு பொருந்திய தோழியே! மழையில் நீண்டு வளர்ந்த செவ்வாழையின் இலைகள் அசைகின்ற காற்று மோதுந் தோறும் உறங்கும் யானையின் பருத்த உடலைத் தழுவும். இத் தன்மையுடைய நல்ல மலை நாட்டினையுடைய நம் தலைவனுடன் இனி நாம் அருவி நீரில் ஆடியும், சுனையில் உள்ள நீலப் பூக்களைப் பறித்தும், நறுமணமுடைய மலர் களைப் பெற்ற வேங்கைமரத்தின் வண்டுகள் ஒலிக்கும் மணம் வீசும் சோலையில் விரும்பி விளையாடியும் செய்பவை அரி யவை போலும்! பெருங்கற்களை கொண்ட பக்க மலையில் என் தமையன்மார் உழுத இடத்தில் கரும்பைப் போன்று

திரண்டு அழகுடைய கதிரையுடைய தினை, கிளிகள் வந்து கொய்து போகும்படி முதிர்ந்து விளைந்தது அதனை அறிந்தும் அறவுணர்ச்சியற்ற தாய், தினைப்பயிரைக் காக்க அங்குச் செல்க என்று போக்குவாள் போல் இல்லை அழகு மிகச் சில சுணங்கையுடைய நெருங்கிப் பருத்த இளமுலைகளை மென்மையான தழைத்த நின் கூந்தலுடன் பலமுறையும் நோக்குகின்றாள்" எனத் தோழி தலைவியை நோக்கிக் கூறினாள்

## 440. வருக பகலில்

உழுவையொடு உழந்த உயங்கு நடை ஒருத்தல்
நெடு வகிர் விழுப் புண் கழாஅ, கங்குல்
ஆலி அழி துளி பொழிந்த வைகறை,
வால் வெள் அருவிப் புனல் மலிந்து ஒழுகலின்
இலங்கு மலை புதைய வெண் மழை கவைஇ
கலம் கடு புகையின் தோன்றும் நாட!
இரவின் வருதல் எவனோ? பகல் வரின்
தொலையா வேலின் வண் மகிழ் எந்தை
களிறு அணந்து எய்தாக் கல் முகை இதணத்து
சிறு தினைப் படு கிளி எம்மொடு ஓப்பி
மல்லல் அறைய மலிர் சுனைக் குவளைத்
தேம் பாய் ஒண் பூ நறும் பல அடைச்சிய
கூந்தல் மெல் அணைத் துஞ்சி, பொழுது பட
காவலர்க் கரந்து, கடி புனம் துழைஇய
பெருங் களிற்று ஒருத்தலின், பெயர்குவை
கருங் கோற் குறிஞ்சி, நும் உறைவு இன், ஊர்க்கே.

*– பிசிராந்தையார் அக 308*

விளங்கும் மலையானது மறையும்படி வெண்மையான முகில் சூழ்ந்து மட்கலம் சுடும் சூளையினின்று எழும் புகை போல் தோன்றும் நாடனே!

புலியுடன் போரிட்டு வருந்திய நடையை யுடைய ஆண் யானையின் பெரிய பிளப்பான மத்தகப் புண்ணைக் கழுவி, இரவில் கொண்டல்கள் ஆலங்கட்டியுடன் கூடிய மழை பெய்ததால், விடியற் காலையில் வெண்மையான அருவி நீர்

*பெருகி வருகிறது இத்தகைய இடர் மிக்க இரவில் நீ வருவது எதற்கு? பகற் காலத்தே நீ வந்தால், தொலையாத வேலை யுடைய வளவிய மகிழ்வுடைய எம் தந்தை அமைத்த, ஆண் யானை நிமிர்ந்தாலும் எட்ட முடியாத மலைக் குகையின் மேல் இருப்பதான பரணில் தினையில் படியும் கிளியினை, எம்முடன் இருந்து ஓட்டலாம் வளமுடைய பாறையின் இடத்திலாய பெருகிய நீரையுடைய சுனையில் உள்ள குவளை யின் தேன் பாயும் நறுமணமுற்ற பல மலர்களைச் சூடிய கூந்தல் என்னும் மென்மையான அணையில் துயிலலாம் இவ்வாறு பகற் பொழுது இனிதாய்க் கழியும் கழிய, கரிய கிளைகளையுடைய குறிஞ்சி மரங்களைக் கொண்ட இருப்ப தற்கு இனிய உம் ஊர்க்குக், காவலர்க்கு மறைந்து, காவல் உடைய தினைப்புனத்தை வளைத்து உண்ட பெரிய ஆண் யானையைப் போலச் செல்வாயாக." என்று இரவு வந் தானைப் பகலில் வருக எனத் தோழி கூறினாள்*

## 441. தலைவன் மார்பே புணை

நெஞ்சு உடம்படுதலின் ஒன்று புரிந்து அடங்கி
இரவின் வரூஉம் இடும்பை நீங்க
வரையக் கருதும்ஆயின், பெரிது உவந்து
ஓங்கு வரை இழிதரும் வீங்கு பெயல் நீத்தம்
காந்தள் அம் சிறுகுடிக் கௌவை பேணாது
அரி மதர் மழைக் கண் சிவப்ப, நாளைப்
பெரு மலை நாடன் மார்பு புணை ஆக
ஆடுகம் வம்மோ – காதல் அம் தோழி!
வேய் பயில் அடுக்கம் புதையக் கால் வீழ்ந்து
இன் இசை முரசின் இரங்கி, ஒன்னார்
ஓடு புறம் கண்ட, தாள் தோய் தடக் கை
வேல் போர் வழுதி செல் சமத்து உயர்ந்த
அடு புகழ் எஃகம் போல
கொடி பட மின்னிப் பாயின்றால், மழையே!

*– மதுரை மருதன் இளநாகனார் அக 312*

*"காதலையுடைய தோழியே! பெரிய மலை நாட்டவ னான நம் தலைவன் இருவர் நெஞ்சும் உடன்படுதலால்,*

*மணந்து கொள்ளும் அதனையே விரும்பி இரவில் வருதலான துன்பம் நீங்க, மணந்து கொள்வதை எண்ணும் ஆதலால், காந்தள் மலரையுடைய இந்தச் சிறிய ஊரின் அலரைப் போற்றாது உயர்வான மலையினின்றும் இறங்கும் மழையால் ஆன அருவி நீரில், நம் தலைவனின் மார்பு தெப்பமாகச் சிவந்த வரி பரந்த குளிர்ந்த கண்கள் சிவந்திட நாம் நாளை மகிழ்ந்து ஆடுவோம் வருவாயாக!*

*மூங்கில் நெருங்கிய பக்கமலை மறையக் கால் இறங்கி, இனிய இசை பொருந்திய முரசினைப் போன்று ஒலித்து, பகைவர் ஓடும் முதுகைக் கண்ட முழந்தாளைப் பொருந்தும் நீண்ட கையையுடைய போர் வெல்லும் பாண்டியன் வென்று, செல்லும் போரில் எடுத்துத் தூக்கிய கொல்லும் வேல் போல ஒழுங்குபட மின்னி, மழை பரவியுள்ளது நீ காண் பாயாக!" என்று தலைவி தோழிக்குக் கூறினாள்*

## 442. வர வேண்டா இரவில்

கான மான் அதர் யானையும் வழங்கும்
வான மீமிசை உருமும் நனி உரறும்
அரவும் புலியும் அஞ்சுதகவு உடைய
இர வழங்கு சிறு நெறி தமியை வருதி
வரை இழி அருவிப் பட்டொடு பிரசம்
முழவு சேர் நரம்பின் இம்மென இமிரும்
பழ விறல் நனந்தலைப் பய மலை நாட!—
மன்றல் வேண்டினும் பெறுகவை; ஒன்றோ
இன்று தலையாக வாரல்; வரினே
எம் உறு துயரமொடு யாம் இவண் ஒழிய
எக் கண்டு பெயருங் காலை, யாழ நின்
கல் கெழு சிறுகுடி எய்திய பின்றை
ஊதல் வேண்டுமால் சிறிதே — வேட்டொடு
வேய் பயில் அழுவத்துப் பிரிந்த நின்
நாய் பயிர் குறி நிலை கொண்ட கோடே! — *கபிலர் அக 318*

*"மலையினின்றும் விழுகின்ற அருவியினது முழக்கத் துடன் வண்டுகள் தண்ணுமையின் ஒலியுடன் கூடிச் சேர்ந்து இசைக்கும் யாழ் நரம்பின் ஒலிபோல ஒலிக்கும் பழைமை*

*யான வெற்றியையும் அகன்ற நிலப்பரப்பையும் பயன் தரும் மலையையும் உடைய நாட்டின் தலைவனே!*

*காட்டில் உள்ள விலங்குகள் செல்லும் நெறியில் யானை களும் இயங்கும் வானத்தின் மிக உயர்ந்த இடத்தில் இடியும் முழங்கும் மேலும் அந்த வழிகள் பாம்பையும் புலியையும் யாவரும் அஞ்சும்படி உடையன இத்தகைய ஒடுங்கிய சிறிய நெறியில் இரவு நேரத்தில் நீ தன்னந் தனியனாய் வருகின்றாய்!*

*நீ தலைவியை மணந்து கொள்வதை விரும்பினும் அவ் வாறே பெறுவாய் ஆகவே, ஒன்று, இன்று முதலாக இங்கு வராதே! அல்லது நீ வருவாயானால் யாங்கள் இங்குத் துயரத் தினின்று நீங்கிடுமாறு, என்னைக் கண்டு நீங்கும் காலத்து, உன் மலைகள் பொருந்திய சிற்றூரை அடைந்த பின்பு, வேட்டை யாடுங் காலத்தில் மூங்கில் காட்டில் பிரிந்த நின் வேட்டுவர் களுடன் நாய்களை அழைக்கும் குறிப்பைக் கொண்டுள்ள ஊது கொம்பைச் சிறிது ஊதுதல் வேண்டும்." என்று இரவுக் குறி வந்த தலைவனை மணம் வேண்டி தோழி கூறினாள்*

## 443. தலைவி பெறற்கரியவள்!

வயங்கு வெயில் ஞெமியப் பாஅய், மின்னு வசிபு
மயங்கு துளி பொழிந்த பானாட் கங்குல்
ஆராக் காமம் அடூஉ நின்று அலைப்ப
இறு வரை வீழ்நரின் நடுங்கி, தெறுவர
பாம்பு எறி கோலின் தமியை வைகி
தேம்புதிகொல்லோ? – நெஞ்சே! –உரும் இசைக்
களிறு கண்கூடிய வாள் மயங்கு ஞாட்பின்
ஒளிறு வேல் தானைக் கடுந் தேர்த் திதியன்
வரு புனல் இழிதரு மரம் பயில் இறும்பில்
பிறை உறழ் மருப்பின், கடுங் கண், பன்றிக்
குறை ஆர் கொடுவரி குழுமும் சாரல்
அறை உறு தீம் தேன் குறவர் அறுப்ப
முயலுநர் முற்றா ஏற்று அரு நெடுஞ் சிமை
புகல் அரும், பொதியில் போலப்
பெறல் அருங்குரையள், எம் அணங்கியோளே!

*– பரணர் அக 322*

*"நெஞ்சே! நம்மை இவ்வாறு வருந்திய நம் காதலி, இடி போன்ற ஒலியையுடைய ஆண் யானைகள் பொருந்திய வாள்கள் பின்னிய போரில், விளங்கும் வேலை யுடைய படையையும் தேரையும் உடையவன், திதியன் என்பவன், அவனது மலையினின்று வரும் அருவி விழும் மரங்கள் நெருங்கிய காட்டில், இளம்பிறை போன்ற கொம்பையும் அஞ்சாமையும் உடைய பன்றியினது ஊனைத் தின்ற புலிகள் கூடி முழங்கும் பக்க மலையையும் உச்சிப் பாறையில் உள்ள இனிய தேனை எடுக்கும் குறவர்களும் ஏறற்கு அரிய பொதிய மலையைப் போல் பெறுவதற்கு அருமையானவள் ஆவாள் அதனை உணராது விளங்கும் கதிரவனின் ஒளி மறைந்திட முகில் வானத்தில் பரவ, மின்னல் பிளந்திட மிக்க மழையைப் பெய்த நள்ளிரவில் காமம் வருத்தி அலைத்திட மலை உச்சி யினின்று கீழே விழுந்து இறப்பவர் போல் அச்சம் ஏற்பட நடுங்கிக் கோலால் அடிக்கப்பட்ட பாம்பைப் போன்று வேறே துணையில்லாமல் வாட்டம் அடைவாயோ!" என்று தன் நெஞ்சை நோக்கிக் கூறினான் தலைவன்*

## 444. அவன் மார்பை நம் மார்பில் அடக்குவோம்

வழை அமல் அடுக்கத்து, வலன் ஏர்பு, வயிரியர்
முழவு அதிர்ந்தன்ன முழக்கத்து ஏறோடு
உரவுப் பெயல் பொழிந்த நள்ளென் யாமத்து
அரவின் பைந் தலை இடறி, பானாள்
இரவின் வந்து, எம் இடைமுலை முயங்கி
துனி கண் அகல அளைஇ, கங்குலின்
இனிதின் இயைந்த நண்பு, அவர் முனிதல்
தெற்று ஆகுதல் நற்கு அறிந்தனம்ஆயின்
இலங்கு வளை நெகிழ, பரந்து படா அலைப்ப, யாம்
முயங்குதொறும் முயங்குதொறும் உயங்க முகந்து கொண்டு
அடக்குவம்மன்னோ – தோழி! – மடப் பிடி
மழைதவழ் சிலம்பில் கடுஞ்சூல் ஈன்று
கழை நின் யாக்கை விழை களிறு தைவர
வாழை அம் சிலம்பில் துஞ்சும்
சாரல் நாடன் சாயல் மார்பே!

*– மதுரைப் பண்ட வாணிகன் இளந்தேவனார் அக 328*

*"தோழியே! சுரபுன்னை மரங்கள் நிறைந்த மலைச் சாரலில் முகில் வலப்பக்கமாக எழுந்து கூத்தரின் முழவு இன்னியம் ஒலித்ததைப் போன்ற ஒலியைக் கொண்ட இடிகளுடன் கூடி மிக்க மழையைப் பெய்த நள்ளிரவு அவ் இரவில் பாம்பின் பசிய தலையை இடறிக் கொண்டு பாதி இரவில் வந்து, எம் கொங்கையில் பொருந்தி, தம் வருத்தம் நீங்கிட, எம் உடலைத் தழுவி, இரவெல்லாம் இங்ஙனம் இனிமையாய் விளங்கிய நண்பினை, வளை நெகிழவும், நம் துன்பம் பரவி வருத்தவும் பின் அவர் வெறுத்தலை நாம் அறிந்தோம் அங்ஙனமாயின், கொண்டல் தவழும் பக்க மலையில் இளம்பெண் யானை தனது முதிர்ந்த முதல் கருவை ஈன்று கரும்பைத் தின்னும் தன் உடலைத் தன்னிடம் விருப்பம் உடைய ஆண் யானை தடவிக் கொண்டிருக்க, வாழைகளை உடைய அழகிய பக்க மலையில் உறங்கும் சாரலைப் பெற்ற அத் தலைவனது மென்மையான மார்பை அவர் முன்பு வந்து எம்மை முயங்குந்தோறும் முயங்குத் தோறும் அவர் வருந்தும்படி இரண்டு கைகளாலும் அள்ளிக் கொண்டு நம் மார்பின் உள்ளே அடக்கியிருப்போம்! ஆனால் அது கழிந்து விட்டது!" என்று தலைவியும் தோழியும் கலந்துரையாடினர்*

## 445. தலைவன் அன்பு முதல்நாள் போன்றதே

முளை வளர் முதல மூங்கில் முருக்கி
கிளையொடு மேய்ந்த கேழ் கிளர் யானை
நீர் நகை மருங்கின் நிறம் பார்த்து ஒடுங்கிய
பொரு முரண் உழுவை தொலைச்சி, கூர் நுனைக்
குருதிச் செங் கோட்டு அழி துளி கழாஅ
கல் முகை அடுக்கத்து மென்மெல இயலி
செறு பகை வாட்டிய செம்மலொடு, அறு கால்
யாழ் இசைப் பறவை இமிர, பிடி புணர்ந்து
வாழை அம் சிலம்பில் துஞ்சும் நாடன்
நின் புரைத் தக்க சாயலன் என, நீ
அன்பு உரைத்து அடங்கக் கூயி இன் சொல்
வாய்த்தன – வாழி, தோழி! – வேட்டோர்க்கு

அமிழ்தத்து அன்ன கமழ் தார் மார்பின்
வண்டு இடைப் படாஅ முயக்கமும்
தண்டாக் காதலும், தலை நாள் போன்மே!

*– கபிலர் அக 332*

*“ஆண் யானையானது முளைகள் வளரும் புதர்களில் உள்ள மூங்கில்களை ஒடித்துத் தன் இனத்துடன் தின்று, நீரை விரும்பி நீர்த் துறையருகே செல்லும் அதனது உருவைப் பார்த்துத் தாக்குவதற்குப் பதுங்கிப் போரிடும் மாறுபாட்டை உடைய புலியைப் போரிட்டுக் கொல்லும் தனது கூர்மை யான குருதி தோய்ந்த சிவந்த கொம்பை மிக்க மழையால் கழுவும். பின் பக்க மலையில் மெல்ல மெல்லச் செல்லும் செற்றம் கொண்ட தன் பகையைத் தொலைத்த செருக்குடன் யாழ் போன்ற இசையையுடைய அறுகால் வண்டுகள் ஒலிக்கும்படி செல்லும் தன் பெண் யானையைச் சேரும் வாழை மரங்களையுடைய அம் மலையில் உறங்கும் இத் தன்மை பொருந்திய நாட்டையுடைய தலைவன்*

*உன் உயர்வுக்கு ஏற்ற மென்மையான தன்மை. உடைய வன் என்று நீ, அன்புடன் என் மனம் அமைதியடையச் சொன்ன இனிய சொற்கள் எல்லாம் உண்மையாய் முடிந்தன. உன்னை விரும்பியவர்க்கு அமிழ்தம் போன்ற இனிய மாலை யையுடைய தன் மார்பில் வண்டு இடையிலே பொருந்த லாகாத தழுவலும் நீங்காத காதலும் முதல்நாள் பார்த்த வாறே இன்றும் சிறந்து விளங்குகின்றன” என்று தலை வனைப் பாராட்டித் தோழிக்குக் கூறுவது போல தலைவி கூறினாள்*

## 446. தூதுகள் பலவாகுக

குன்று ஓங்கு வைப்பின் நாடு மீக்கூறும்
மறம் கெழு தானை அரசருள்ளும்
அறம் கடைப்பிடித்த செங்கோலுடன், அமர்
மறம் சாய்த்து எழுந்த வலன் உயர் திணி தோள்
பலர் புகழ் திருவின், பசும் பூட் பாண்டியன்
அணங்குடை உயர் நிலைப் பொருப்பின் கவாஅன்
சினை ஒண் காந்தள் நாறும் நறு நுதல்

துணை ஈர் ஓதி மாஅயோள்வயின்
நுண் கோல் அவிர் தொடி வண் புறம் சுற்ற
முயங்கல் இயையாதுஆயினும், என்றும்
வயவு உறு நெஞ்சத்து உயவுத் துணையாக
ஒன்னார் தேஎம் பாழ் பட நூறும்
துன் அருந் துப்பின் வென் வேற் பொறையன்
அகல் இருங் கானத்துக் கொல்லி போல
தவாஅலியரோ, நட்பே! அவள் வயின்
அறாஅலியரோ, தூதே – பொறாஅர்
விண் பொரக் கழித்த திண் பிடி ஒள் வாள்
புனிற்று ஆன் தரவின் இளையர் பெருமகன்
தொகு போர்ச் சோழன், பொருள் மலி பாக்கத்து
வழங்கல் ஆனாப் பெருநா துறை
முழங்கு இரு முந்நீர்த் திரையினும் பலவே!

*– மதுரைக் கணக்காயனார் அக 338*

*“நெஞ்சே! பசும் பூண் பாண்டியன் மலைகள் உயர்ந்த இந்த உலகத்தில் சிறப்பித்துச் சொல்லப்படும் நாட்டை உடையவன். வீரம் மிக்க படைகளை உற்றவன்; பேரரசர்களுள் அறத்தை மேற்கொண்ட செங்கோலாட்சியுடன், பகைவரின் போர் செய்யும் அஞ்சாமையைக் கெடுத்து வளர்ந்தவன்; வெற்றி பொருந்திய திண்மையான தேரினையும் பலராலும் புகழப் படும் செல்வத்தையும் உடையவன். அம் மன்னனின் தெய்வம் பொருந்திய பொதிய மலையின் சாரலில் உள்ள கிளைத்த காந்தள் மலரைப்போல் நறுமணம் கமழும் நெற்றியையும் அளவொத்த நீண்ட கூந்தலையும் கொண்ட மாமை நிறம் உடைய தலைவியிடம் அவளது நுட்பமாகத் திரண்ட வளை நம் முதுகை வளைத்துக் கொள்ளும்படி தழுவுதல் நமக்குக் கிட்டாது ஆயினும் பகைவரின் நாடு பாழாகும்படி அழிக்கும் பகைவரால் கிட்டுவதற்கு அரிய வன்மையையுடைய வெற்றி வாய்ந்த வேலையுடைய சேரனின் அகன்ற காட்டில் உள்ள கொல்லி மலையைப் போல், எந் நாளும் வேட்கை கொண்ட நெஞ்சத்துக்கு ஓர் உசாத் துணையாக நட்புக் கெடாது நிலை பெறுக!*

*பகைவர் விண்ணுலகை அடையும்படி உருவப்பட்ட திண்மையான வாளையுடைய, ஈன்ற அணிமையுடைய பசுக் கூட்டத்தைக் கவர்ந்து வரும் வெட்சி வீரர்களுக்குத் தலை வன் போரினை வெல்லும் சோழன், அவனது பண்டங்கள் நிறைந்த பாக்கத்தில் சென்று மீளாத முழங்கும் கடலின் பெரிய துறையிடத்துள்ள அலைகளை விட, அவளிடத்து நாம் விடும் தூதுகள் ஒழியாமல் செல்வனவாகுக" என்று தலைவன் தன் நெஞ்சினை நோக்கிக் கூறினான்*

## 447. நினையாதே தலைவியை

**ஒறுப்ப ஓவலை; நிறுப்ப நில்லலை
புணர்ந்தோர் போலப் போற்றுமதி! நினக்கு யான்
கிளைஞன் அல்லெனோ! – நெஞ்சே! – தெனாஅது
வெல் போர்க் கவுரியர் நல் நாட்டு உள்ளதை
மண் கொள் புற்றத்து அருப்பு உழை திறப்பின்
ஆ கொள் மூதூர்க் கள்வர் பெருமகன்
ஏவல் இளையர் தலைவன் மேவார்
அருங் குறும்பு எறிந்த ஆற்றலொடு, பருந்து படப்
பல் செருக் கடந்த செல் உறழ் தடக் கை
கெடாஅ, நல் இசைத் தென்னன், தொடாஅ
நீர் இழி மருங்கில் கல் அளைக் கரந்த அவ்
வரையரமகளிரின் அரியள்
அவ் வரி அல்குல் அணையாக்காலே!**

*– மதுரைக் கணக்காயனார் அக 342*

*"நெஞ்சே! தெற்குத் திக்கில் உள்ள போர் வெல்லும் பாண்டியரின் நல்ல நாட்டில் உள்ள மண்ணினால் ஆன புற்றுடைய காட்டரணின் இடத்தைத் திறத்தலுடன் பகை வரின் பசுக்களைக் கவர்ந்து கொள்ளும் பழைய ஊரினரான கள்வர்க்கு முதல்வன்; பகைவரின் அரிய ஆண்களை அழித்த வன்மையுடன் பருந்துகள் வந்து கூடப் பல போர்களையும் வென்ற குடியுடன் மாறுபடும் பெரிய கையையும், என்றும் கெடாத நல்ல புகழையும் உடையவன் பாண்டியன். அவனது தோண்டப்படாத அருவி வீழும் பொய்கையையுடைய மலைக் குகையில் மறைந்த வரையர மகளிர் போல் அழகிய வரி*

களையுடைய அல்குலையுடைய தலைவி தானே நம்மை அணையாதவிடத்து காண்பதற்கு அரியவள் ஆவாள் நான் உன்னை இடித்துக் கூறினும் அவளை நினைத்தலைக் கை விடாய் தடுத்தாலும் அவளிடம் செல்லாமல் இருப்பதில்லை யான் உனக்கு உறவினன் அல்லனோ! உள்ளம் ஒன்றிய நண்பரைப் போல யான் சொல்வதைக் கேட்பாயா?" என்று தலைவன் தன் நெஞ்சை நோக்கிக் கூறினான்

## 448. என்ன துன்பம் இனி வருமோ?

என் ஆவதுகொல் தானே – முன்றில்
தேன் தேர் சுவைய, திரள் அரை, மாஅத்து
கோடைக்கு ஊழ்த்த, கமழ் நறுந் தீம் கனி
பயிர்ப்புறப் பலவின் எதிர்ச் சுளை அளைஇ
இறலொடு கலந்த, வண்டு மூசு, அரியல்
நெடுங் கண் ஆடு அமைப் பழுநி, கடுந் திறல்
பாப்புக் கடுப்பு அன்ன தோப்பி வான் கோட்டுக்
கடவுள் ஓங்கு வரைக்கு ஓக்கி, குறவர்
முறித் தழை மகளிர் மடுப்ப, மாந்தி
அடுக்கல் ஏனல் இரும் புனம் மறந்துழி
'யானை வவ்வின தினை' என, நோனாது
இளையரும் முதியரும் கிளையுடன் குழீஇ
சிலை ஆய்ந்து திரிதரும் நாடன்
நிலையா நல் மொழி தேறிய நெஞ்சே?

*– மதுரை இளம்பாலாசிரியன் சேந்தன் கூத்தனார் அக 348*

"வீட்டின் முன் பக்கத்தில் உள்ள தேன்போற் சுவை யுடைய திரண்ட அடியையுடைய மா மரத்தினது கோடைக் காலத்தில் முதிர்ந்த மணம் கமழும் கனிகளுடன் பிசினை யுடைய பலா மரத்தின் சுளைகளையிட்டுத் தேனுடன் கலந்து ஆக்கிய வண்டு மொய்க்கும் அரியலான கள்; அது மூங்கிலின் நீண்ட குழாயில் அடைக்கப்பட, முதிர்தலால் கடிய விரைவு உடைய பாம்பினது சீற்றத்தை ஒத்த வெறிகொண்டது அதனை முதலில் உயர்ந்த உச்சியையுற்ற தெய்வம் உறையும் மலைக்கு வைத்துப் படைத்துப் பின்பு தளிராலாய தழை யுடையை உடுத்த மகளிர் உண்பிக்க அதனை உண்டு குறவர்

புனத்தைக் காக்கும் தம் தொழிலை மறந்து கைவிட்டனர். அப்போது, யானைகள் தினைப்புனத்தைக் கவர்ந்து உண்ண, அதனைப் பொறுக்க மாட்டாமல் இளையவரும் முதியவரும் ஆகிய உறவினரெல்லாம் ஒன்றாய்க் கூடி, வில்லை ஆராய்ந்து கொண்டு திரிவர் இத்தன்மை பொருந்திய நம் தலைவனின் உறுதியற்ற இனிய சொல்லை உண்மை என நம்பித் தெளிந்த நெஞ்சமே' இனி நமக்கு என்ன தீங்கு உண்டாகுமோ!" என்று தோழி தொடங்கிக் கூறியதைத் தலைவி சொல்லி முடித்தாள்.

## 449. நீ நல்லவள் தோழி

'முடவு முதிர் பலவின் குடம் மருள் பெரும் பழம்
பல் கிளைத் தலைவன் கல்லாக் கடுவன்
பாடு இமிழ் அருவிப் பாறை மருங்கின்
ஆடு மயில் முன்னது ஆக, கோடியர்
விழவு கொள் மூதூர் விறலி பின்றை
முழவன் போல அகப்படத் தழீஇ
இன் துணைப் பயிரும் குன்ற நாடன்
குடி நன்கு உடையன்; கூடுநர்ப் பிரியலன்
கெடு நா மொழியலன்; அன்பினன்' என, நீ
வல்ல கூறி, வாய்வதின் புணர்த்தோய்
நல்லை; காண், இனி – காதல் அம் தோழீஇ –
கடும் பரிப் புரவி நெடுந் தேர் அஞ்சி
நல் இசை நிறுத்த நயம் வரு பனுவல்
தொல் இசை நிறீஇய உரை சால் பாண்மகன்
எண்ணு முறை நிறுத்த பண்ணினுள்ளும்
புதுவது புனைந்த திறத்தினும்
வதுவை நாளினும், இனியனால் எமக்கே...

– அஞ்சியத்தை மகள் நாகையார் அக 352

"அன்புமிக்க தோழி! ஆராய்ந்து பார்க்குமிடத்து நீ மிகவும் நல்லவள்! வளைதல் பொருந்திய பலா மரத்தின் குடத்தைப் போன்ற பெரிய பழத்தைப் பல சுற்றத்துக்குத் தலைவனான ஆண் குரங்கு ஒலிக்கும் கற்பாறையிடத்தே, ஆடும் இயல்புடைய மயில் ஒன்று தன் முன் நிற்க, கூத்தர் விழாவைக் கொண்டாடும் முதிய ஊரில் விறலியின் பின்

*நிற்கும் முழவுக் கருவியை இயக்குபவன் போல் தன்னகத்தே தழுவிக் கொண்டு, இனிய துணையான பெண் குரங்கை அழைக்கும் இத்தகைய மலை நாட்டையுடைய நம் தலைவன், உயர்ந்த குடிப்பிறப்பு உடையவன்; தன்னுடன் சேர்ந்தவரைப் பிரியாதவன்; நாவினால் கெடுமொழிகளைக் கூறாதவன்; அன்பு உடையவன்; என்று நீ அவன் சிறப்புகளைச் சொல்லி அவனுடன் என்னைக் கூட்டி வைத்தாய் மிக்க ஓட்டத்தைப் பெற்ற குதிரைகள் பூண்ட பெரிய தேரையுடைய அதியமான் அஞ்சியின் பழம் புகழை நிலை பெறச் செய்த புகழ் உடைய பாணன் நல்ல இசையை வரையறை செய்த இனிய நூலின் எண்ணின் முறைப்படி இயற்றிய பண்ணைக் காட்டிலும் அவன் புதிதாய் இயற்றிய திறத்தைக் காட்டிலும் மணம் செய்துகொண்ட நாளைக் காட்டிலும் எமக்கு இனியனாய் உள்ளான்" என்று தலைவி தலைவனுடன் இல்லறத்தில் சேர்ப்பித்த தோழியிடம் உவந்துரைத்தாள்.*

## 450. மேனிவேறுபாட்டுக்குக் காரணம் கேட்டால்?

நீலத்து அன்ன நிறம் கிளர் எருத்தின்
காமர் பீலி, ஆய் மயில் தோகை
இன் தீம் குரல் துவன்றி, மென் சீர்
ஆடு தகை எழில் நலம் கடுப்பக் கூடி
கண் நேர் இதழ, தண் நறுங் குவளைக்
குறுந் தொடர் அடைச்சிய நறும் பல் கூழை
நீடு நீர் நெடுஞ் சுனை ஆயமொடு ஆடாய்
உயங்கிய மனத்தையாகி, புலம்பு கொண்டு
இன்னை ஆகிய நின் நிறம் நோக்கி
அன்னை வினவினள்ஆயின், அன்னோ!
என் என உரைக்கோ யானே – துன்னிய
பெரு வரை இழிதரும் நெடு வெள் அருவி
ஓடை யானை உயர் மிசை எடுத்த
ஆடு கொடி கடுப்ப, தோன்றும்
கோடு உயர் வெற்பன் உறீஇய நோயே?

*– மதுரை மருதன் இளநாகனார் அக 358*

*தோழி! "நீலமணி போன்ற கழுத்தையும் அழகிய பீலி யாகிய சிறந்த தோகையையுமுடைய மயில்கள் இனிய குரலை உடையனவாய் நெருங்கி, மென்மையான தாளத்துக்கு ஏற்ப ஆடும் தகுதியான அழகின் சிறப்பைப் போன்று நீ தோழி யருடன் கூடி, கண்ணை ஒத்த இதழ்களை உடைய குளிர்ந்த குவளை மலரின் குறிய மாலையைச் செருகிய நின் பலவாய கூந்தல் பரக்க, ஆழமான நீரையுடைய நீண்ட சுனையின் ஆடா மல் வருந்திய மனத்தை உடையவளாய்த் தனிமை கொண்டு உள்ளாய். இத் தன்மையான நின்மேனி வேறுபாட்டைப் பார்த்து நம் அன்னை அதன் காரணம் யாது? என்று வினவு வாள் பொருந்திய மலையினின்றும் வரும் நீரையுடைய அருவி யானது நெற்றிப்பட்டத்தைச் சூடிய யானையின் மீது கட்டப் பட்ட அசையும் வெண்துகில் கொடியை ஒப்பத் தோன்றும் உச்சி உயர்ந்த மலையை உடைய தலைவன், நமக்கு உண்டாக்கிய நோயை, அந்தோ, நான் எதனால் நிகழ்ந்தது எனக் கூறு வேன்?" என்று தோழி தலைவியைப் பார்த்துப் பகர்ந்தாள்.*

## 451. உயிருடன் இறேன்

பாம்புடை விடர பனி நீர் இட்டுத் துறைத்
தேம் கலந்து ஒழுக, யாறு நிறைந்தனவே
வெண் கோட்டு யானை பொருத புண் கூர்ந்து
பைங் கண வல்லியம் கல் அளைச் செறிய
முருக்கு அரும்பு அன்னவள் உகிர் வ்யப் பிணவு
கடி கொள, வழங்கார் ஆறே; ஆயிடை
எல்லிற்று என்னான், வென் வேல் ஏந்தி
நசை தர வந்த நன்னராளன்
நெஞ்சு பழுதாக, வறுவியன் பெயரின்
இன்று இப்பொழுதும் யான் வாழலெனே;
எவன்கொல்? – வாழி, தோழி! – நம் இடை முலைச்
சுணங்கு அணி முற்றத்து ஆம் போலவும்
சிலம்பு நீடு சோலைச் சிதர் தூங்கு நளிப்பின்
இலங்கு வெள் அருவி போலவும்
நிலம் கொண்டனவால், திங்கள் அம் கதிரே!

*– வெள்ளி வீதியார் அக 362*

*பாம்புகள் பொருந்திய விடர்களிலிருந்து வரும் குளிர்ந்த நீர் ஒடுக்கமான துறைகளின் வழியாகத் தேனுடன் கலந்து வருவதால் ஆறுகள் யாவும் நிறைந்தன வெண்மையான கொம்பையுடைய யானை பாய்ந்து குத்திய புண் மிக்கதால் பசுமையான கண்ணையுடைய ஆண் புலி குகைக்குள் ஒடுங்கி இருக்க, செம்முருக்கின் அரும்பைப் போன்ற கூரிய நகத்தை யுடைய பெண் புலி அதனைக் காவல் மேற்கொண்டிருக்கும் ஆதலால் அந்த வழியில் எவரும் செல்லார்*

*அந்த நிலையில் இருள் வந்து விட்டது என்று எண்ணாத வனாய் வெற்றி தரும் வேலைக் கையில் கொண்டு நம்மிடம் காதல் கொண்டு வந்த நன்மையாளனான தலைவன் தன் எண்ணம் பயனில்லாதாக நம்மைக் கூடாது மீண்டால் இன்றைய இவ் இரவும் உயிருடன் இறேன். நம் முலையிடத்த தான சுணங்கு அணிந்த பரப்பில் கிடக்கும் முத்து மாலை யைப் போன்றும் மலையின் நீண்ட சோலையில் துளிகள் சிதறும் குளிர்ந்த வெள்ளருவியைப் போன்றும் திங்களின் அழகிய கதிர்கள் மலையில் பரவின*

## 452. அலராகின்றது உள்ளிவிழிவு போல்

தொடுதோற் கானவன் சூடுறு வியன் புனம்
கரி புறம் கழீஇய பெரும் பாட்டு ஈரத்து
தோடு வளர் பைந் தினை நீடு குரல் காக்கும்
ஒண் தொடி மகளிர்க்கு ஊசலாக
ஆடு சினை ஒழித்த கோடு இணர் கஞலிய
குறும்பொறை அயலது நெடுந் தாள் வேங்கை
மட மயிற் குடுமியின், தோன்றும் நாடன்
உயர் வரை மருங்கின் காந்தள் அம் சோலைக்
குரங்கு அறிவாரா மரம் பயில் இறும்பில்
கடி சுனைத் தெளிந்த மணி மருள் தீம் நீர்
பிடி புணர் களிற்றின் எம்மொடு ஆடி
பல் நாள் உம்பர்ப் பெயர்ந்து, சில் நாள்
கழியாமையே வழிவழிப் பெருகி
அம் பணை விளைந்த தேக் கட் தேறல்
வண்டு படு கண்ணியர் மகிழும் சீறூர்

எவன்கொல் – வாழி, தோழி! – கொங்கர்
மணி அரை யாத்து மறுகின் ஆடும்
உள்ளி விழவின் அன்ன
அலர் ஆகின்று, அது பலர் வாய்ப் பட்டே?

*– மதுரை மருதன் இளநாகனார் அக 368*

*தோழி! "காலில் செருப்பை அணிந்த வேடன் சுட்டெரித்த அகன்ற கொல்லையில் கரிந்த இடங்களைக் கழுவிய மழை ஈரத்தில், இதழ்கள் வளர்ந்த பசிய தினையின் நீண்ட கதிர்களைக் காவலை மேற்கொண்டிருக்கும் ஒளியுடைய வளையலை அணிந்திருக்கும் மகளிர், அம் மங்கையர் ஊசலாட வேண்டிக் கிளைகளை வெட்டிய கொம்பின் மலர்க் கொத்துகள் நிரம்பிய குன்றின் பக்கத்தில் உள்ள நீண்ட அடியையுடைய வேங்கை மரம், இளம் மயிலின் உச்சியில் உள்ள குடுமியைப் போல் தோன்றும் இத் தன்மையுடைய மலை நாட்டையுடைய நம் தலைவர், உயர்வான மலைப் பக்கத்தில் உள்ள காந்தள் செடி பொருந்திய சோலையான குரங்குகளும் ஏறி அறியாத நீண்ட மரங்கள் செரிந்த காடு அதில் விளக்கம் பொருந்திய சுனையில் பளிங்கு போன்ற இனிய நீரில் பெண் யானையுடன் கூடிய ஆண் யானை போல நம்முடன் பல நாள்கள் கூடி நம்மைப் பிரிந்து வேறு இடம் சென்றான் அங்ஙனம் நிகழ்ந்த சில நாள்களுக்கு முன்பே அந் நிகழ்ச்சி முறை முறையாகப் பெருகியது அழகிய மூங்கில் குழாயில் உள்ள முதிர்ந்த தேனான கள் தெளிவை வண்டுகள் மொய்க்கும் மாலையுடையவராக கண்டு மகிழும் சிற்றூரில், பலர் வாயிலும் பேசப்பட்டு, கொங்கு நாட்டினர் மணியை இடையில் கட்டிக் கொண்டு தெருவில் ஆடும் உள்ளி விழாவின் ஆரவாரம் போன்ற அலராக ஆயிற்று! இதற்கு என்ன காரணமோ!" என்று பக்கம் இருக்கும் தலைவன் கேட்ப தோழி கூறினாள்*

## 453. அரியவளாய் தலைவி உள்ளாள்

அருந் தெறல் மரபின் கடவுள் காப்ப
பெருந் தேன் தூங்கும் நாடு காண் நனந்தலை
அணங்குடை வரைப்பின், பாழி ஆங்கண்

**வேள் முது மாக்கள் வியல் நகர்க் கரந்த**
**அருங் கல வெறுக்கையின் அரியோள் பண்பு நினைந்து**
**வருந்தினம்மாமோ எனினும், அஃது ஒல்லாய்**
**இரும் பணைத் தொடுத்த பலர் ஆடு ஊசல்**
**ஊர்ந்து இழி கயிற்றின், செல வர வருந்தி**
**நெடு நெறிக் குதிரைக் கூர் வேல் அஞ்சி**
**கடு முனை அலைத்த கொடு வில் ஆடவர்**
**ஆடு கொள் பூசலின் பாடு சிறந்து எறியும்**
**பெருந் துடி வள்பின் வீங்குபு, நெகிழா**
**மெய் மணி இழந்த பாம்பின், நீ நனி**
**தேம்பினை – வாழி, என் நெஞ்சே! – வேந்தர்**
**கோண் தணி எயிலின் காப்புச் சிறந்து**
**ஈண்டு அருங்குரையள், நம் அணங்கியோளே.**

*– பரணர் அக 372*

*"என் நெஞ்சே, வாழ்க! பாழி மலை மற்றவரால் அழிப்ப தற்கு அரிய முறைமை யுடைய கடவுளால் காக்கப்படுவது, பெரிய தேன் கூடுகள் தொங்குவது, நாட்டின் எல்லையைக் காண்பதற்குரிய உச்சியையும் அகன்ற இடத்தையும் உடை யது. அச்சம் பொருந்திய பக்க மலையைக் கொண்டது. அப் பக்கமலையில் பழைய வேள்விக்குடி மக்கள் தம் அகன்ற ஊரில் அரிய அணிகலமாகிய செல்வம் மறைத்து வைத்தனர் அத்தகைய செல்வத்தைப் போன்று பெறுவதற்கு அரியவளின் இன்பத்தை நினைந்து நாம் வீணே வருந்தியுள்ளோம் என்று நான் கூறினேன் கூறவும் அதனை நீ கைவிடுவதற்குப் பொருந் தாமல், பெரிய கிளையில் கட்டப்பட்ட, பலரும் ஆடும் ஊசலினது ஏறியும் இறங்கியும் ஆடுகின்ற கயிற்றைப் போன்று செல்லுதலாலும் வருவதாலும் வருந்தி நீண்ட வழியை யுடைய குதிரை மலைக்குத் தலைவனான 'அஞ்சி' என்பவனின் கடிய பகைப்புலத்தை வருத்திய வில்லையுடைய வீரர் தம் பகைவர் நிரைகளைக் கவரும் போரில் ஒலி மிகும் படியாய் அடிக்கும் பெரிய உடுக்கையின் வாரைப் போலச் செறிந்தும் நெகிழ்ந்தும் மேய்தற் பொருட்டு உமிழ்ந்து வைத்த மணியை இழந்த பாம்பைப் போல் நீ மிகவும் வாடினாய்*

*நம்மை வருத்திய காதலி பகை மன்னரின், பகையைத் தணிப்பதற்குக் காரணமான மதில் போன்று காவல் மிக்கு அடைவதற்கு அரிய அருமை உடையவள் அல்லளோ!" என்று அல்ல குறிப்பட்டுச் சென்ற தலைவன் தன் நெஞ்சிற்குச் சொன்னான்*

## 454. தலைவர் மலை கண்டு வாழ்கிறேன்

'நிதியம் துஞ்சும் நிவந்து ஓங்கு வரைப்பனி
வதுவை மகளிர் கூந்தல் கமழ் கொள
வங்கூழ் ஆட்டிய அம் குழை வேங்கை
நன் பொன் அன்ன நறுந் தாது உதிர
காமர் பீலி ஆய் மயில் தோகை
வேறு வேறு இனத்த வரை வாழ் வருடைக்
கோடு முற்று இளந் தகர்ப் பாடு விறந்து, அயல
ஆடு கள வயிரின் இனிய ஆலி
பசும் புற மென் சீர் ஒசிய, விசும்பு உகந்து
இருங் கண் ஆடு அமைத் தயங்க இருக்கும்
பெருங் கல் நாடன் பிரிந்த புலம்பும்
உடன்ற அன்னை அமரா நோக்கமும்
வடந்தை தூக்கும் வரு பனி அற்சிரச்
சுடர் கெழு மண்டிலம் அழுங்க, ஞாயிறு
குட கடல் சேரும் படர் கூர் மாலையும்
அனைத்தும், அடூஉ நின்று நலிய, உஞற்றி
யாங்கனம் வாழ்தி?' என்றி – தோழி! –
நீங்கா வஞ்சினம் செய்து; நத் துறந்தோர்
உள்ளார்ஆயினும், உளெனே – அவர் நாட்டு
அள் இலைப் பலவின் கனி கவர் கைய
கல்லா மாந்தி கடுவனோடு உகளும்
கடுந் திறல் அணங்கின் நெடும் பெருங் குன்றத்து
பாடு இன் அருவி சூடி
வான் தோய் சிமையம் தோன்றலானே.

*– காவட்டனார் அக 378*

*தோழி! "மிக்க பொருள் உள்ள உயர்ந்த இல்லத்தில் திருமணம் செய்து கொண்ட மகளிர் கூந்தலைப் போல்*

நறுமணம் பொருந்துமாறு காற்று அசைத்தலால் அழகிய தளிர்களை யுடைய வேங்கை மரத்தின் பொன் போன்ற நறு மணத் தாது உதிர்கிறது அதனால் பீலி பொருந்திய சிறந்த தோகையை உடைய மயில், வெவ்வேறு வகையுடைய மலை யில் வாழும் வருடை என்ற விலங்குகளின் கொம்புகள் பொருந்திய இளைய கடாக்கள் செய்யும் ஒலியைக் கேட்டு அஞ்சியது; கூத்தாடும் களத்தில் ஊதப்படும் கொம்பைப் போன்று நீண்ட கணுக்களையுடைய அசையும் மென்மை யான மூங்கில் இடம் வளையத் தங்கியிருக்கும் இத்தகைய மலை நாட்டையுடைய தலைவன் பிரிந்து சென்றதால் தனிமை யும், மாறுபட்டதாயின் விரும்பாத பார்வையும், வாடைக் காற்றின் இயக்கமும், அதனுடன் வருகின்ற பனியையுடைய பருவமும், ஒளியுடைய, தன் மண்டிலம் மழுங்கிட ஞாயிறு மேலைக் கடலில் மறையும் துன்பம் மிக்க மாலைப் பொழு தும் ஆகி, எல்லாம் ஒன்றாய்க் கூடி நின்று வருத்துகின்றன இவ்வாறாகவும் நீ எங்ஙனம் உயிர் வாழ்கின்றாய் என என்னை வினவுகின்றாய் நம்மை நீங்காதிருத்தற்குரிய சூள் உரைத்துப் பின்பு பிரிந்த தலைவர், நம்மை நினையார், ஆனாலும், அவரது நாட்டில் நெருங்கிய இலைகளையுடைய பலா மரத்தினது பழத்தைக் கவர்ந்து எடுத்த கைகளை உடைய பெண் குரங்கு ஆண் குரங்குடன் துள்ளித் திரியும் மிக்க வலிமை பெற்ற தெய்வத்தையுடைய நீண்ட மலையில் இனிய ஓசையிடும் அருவியைக் கொண்டு உச்சியானது காணப் பெறுவதால் நான் உயிர் வாழ்கின்றேன்" என்று பக்கத்தே மறைந்து நிற்கும் தலைவன் கேட்பத் தலைவி உரைத்தாள்

## 455. எடுப்பர் வெறியாடல்

பிறர் உறு விழுமம் பிறரும் நோப
தம் உறு விழுமம் தமக்கோ தஞ்சம்
கடம்பு கொடி யாத்து, கண்ணி சூட்டி
வேறு பல் குரல ஒரு தூக்கு இன் இயம்
காடு கெடு நெடு வேட் பாடு கொளைக்கு ஏற்ப
அணங்கு அயர் வியன் களம் பொலிய, பையத்

தூங்குதல் புரிந்தனர், நமர் என, ஆங்கு அவற்கு
அறியக் கூறல் வேண்டும் – தோழி!–
அருவி பாய்ந்த கரு விரல் மந்தி
செழுங் கோட் பலவின் பழம் புணையாக
சாரல் பேர் ஊர் முன்துறை இழிதரும்
வறன் உறல் அறியாச் சோலை
விறல் மலை நாடன் சொல் நயந்தோயே! – *கபிலர் அக 382*

*தோழி! "அருவியில் பாய்ந்த கரிய விரல் உடைய பெண் குரங்கு பலாவின் பழத்தைத் தெப்பமாகக் கொண்டு பக்க மலையில் உள்ள ஊரின் துறை முன்பு வந்து இறங்கும் வறட்சியை அடையாத சோலையையுடைய வெற்றி பொருந்திய மலை நாட்டின் தலைவனது சொல்லை நம்பி ஏற்றாய் மற்றவர்க்கு ஏற்படும் துன்பத்தைக் கண்டால் நல்லோர் தாங்கள் பிறரே ஆனாலும் வருந்தி அத்துன்பத்தைப் போக்க முயல்வர் தமக்கு உற்ற துன்பத்தைத் தமக்குப் பெரிதாய்க் கொள்ளாமல் அதனை எளிதாகக் கொள்வர். சான்றோரின் இயல்பு இத்தகையது*

*நம்மவர் கடப்பமரத்தில் கொடியை உயர்த்திக் கட்டி மாலை சூட்டி பல்வேறு ஒலியை எழுப்பும் தாளத்தின் வழிப் படும் ஒரு தூக்கினை உடைய இனிய இசைக் கருவிகளைக் கொண்டு குறிஞ்சிக்குரிய முருகனைப் பாடுகின்ற பாட்டுக்கு ஏற்ப வெறியாட்டுச் செய்யும் பெரிய களம் சிறப்படைய மெல்ல, ஆடுதலை மேற்கொண்டனர் என்று தலைவனைக் காணுமிடத்து நீ அவனுக்குக் கூறுதல் வேண்டும்" என்று தோழி கூறினாள்*

## 456. வெறியாடலை தாய் நிகழ்த்துவாள்

அம்ம! – வாழி, தோழி!– நம் மலை
அமை அறுத்து இயற்றிய வெவ் வாய்த் தட்டையின்
நறு விரை ஆரம் அற எறிந்து உழுத
உளைக் குல் கிறு தினை கவர்தலின், கிளை அமல்
பெரு வரை அடுக்கத்துக் குரீஇ ஓப்பி
ஓங்கு இருஞ் சிலம்பின் ஒள் இணர் நறு வீ
வேங்கை அம் கவட்டிடை நிவந்த இதணத்து

பொன் மருள் நறுந் தாது ஊதும் தும்பி
இன் இசை ஓரா இருந்தனமாக
'மை ஈர் ஓதி மட நல்லீரே!
நொவ்வு இயற் பகழி பாய்ந்தென, புண் கூர்ந்து
எவ்வமொடு வந்த உயர் மருப்பு ஒருத்தல் நும்
புனத்துழிப் போகல் உறுமோ மற்று?' என
சினவுக் கொள் ஞமலி செயிர்த்துப் புடை ஆட
சொல்லிக் கழிந்த வல் விற் காளை
சாந்து ஆர் அகலமும் தகையும் மிக நயந்து
ஈங்கு நாம் உழக்கும் எவ்வம் உணராள்
நன்னர் நெஞ்சமொடு மயங்கி, 'வெறி' என
அன்னை தந்த முது வாய் வேலன்
'எம் இறை அணங்கலின் வந்தன்று, இந் நோய்
தணி மருந்து அறிவல்' என்னும்ஆயின்
வினவின் எவனோ மற்றே – 'கனல் சின
மையல் வேழ மெய் உளம்போக
ஊட்டியன்ன ஊன் புரள் அம்பொடு
காட்டு மான் அடி வழி ஒற்றி
வேட்டம் சொல்லுமோ, நும் இறை?' எனவே?

– *ஊட்டியார் அக 388*

*தோழி, "வாழ்க! நான் கூறுவதைக் கேட்பாயாக! நம் மலையில் வளர்ந்த மூங்கிலை அறுத்துச் செய்த கொடிய ஒலியுடைய தட்டையைக் கைக்கொண்டு நறிய மணம் உடைய சந்தன மரத்தை முழுவதும் வெட்டி உழுது விளைத்த தினை யின் தூய்மை உடைய சிறுகதிர்களைக் கவர்தலால், மூங்கில் கள் நெருங்கிய பெரிய மலைச்சாரலில் கிளிகளை ஓட்டி, பெரிய மலையில் ஒளி பொருந்திய கொத்துகளில் நறுமண மலர்களைக் கொண்ட வேங்கை மரத்தின் கவையில் உயரக் கட்டிய பரணில், பொன் போன்ற பூந்தாதை ஊதும் வண்டின் இனிய இசையைக் கேட்டிருந்தோம் கருமையான நீண்ட கூந்தலை யுடைய மடம் பொருந்திய பெண்டிரே! 'விரையும் அம்பு பாய்ந்ததால் புண்பட்டுத் துன்பத்துடன் வந்த உயர்ந்த கொம்பை உடைய ஆண் யானை உங்கள் புனத்தின் வழியில் போனதோ? என்று, சினம் கொண்ட நாய் கறுவித் தன்*

பக்கத்தே வர, வினவிச் சென்ற வலிய வில்லையுடைய காளை யாய தலைவனது, சாந்து பொருந்திய மார்பையும் அழகையும் மிகவும் விரும்பி, இங்கு நாம் வருந்துகிறோம் இத் தகைய வருந்தும் துன்பத்தை உணராமல், நம் தாய் தன் மனத்தில் தவறாக உணர்ந்து வெறியாடல் வேண்டும் என எண்ணி அழைத்து வரப்பட்ட முதுமையுடன் வேலன் 'எம் கடவுளான முருகப் பெருமான் வருத்துவதால் இந் நோய் ஏற்பட்டது' என்று கூறி இதனைப் போக்கும் மருந்தை நான் அறியேன் என்று வேலன் கூறுவானாயின், நாம் அவனைப் பார்த்து 'உம் கடவுளான முருகப்பெருமான் கொதிக்கும் சினமும் மத மயக்கமும் கொண்ட களிற்றின் உடலுக்குள் செல்லச் செந்நிறம் பூசினாற் போன்ற ஊன் பொருந்திய அன்புடன் காட்டின் விலங்குகள் போன அடிச்சுவட்டைத் தொடர்ந்து வேட்டையாடச் செல்வதும் உண்டோ! என்று நாம் வினவினால் என்ன? என்று தலைவன் விரைந்து மணந்து கொள்ள வேண்டும் என்ற உட்கோளுடன் தோழி உரைத் தாள்.

## 457. மீட்டுத் தருவேன் உன் நலத்தை

தாழ் பெருந் தடக் கை தலைஇய, கானத்து
வீழ் பிடி கொடுத்த, வெண் கோட்டு யானை
உண் குளகு மறுத்த உயக்கத்தன்ன
பண்புடை யாக்கைச் சிதைவு நன்கு அறீஇ
பின்னிலை முனியானாகி, 'நன்றும்
தாது செய் பாவை அன்ன தையல்
மாதர் மெல் இயல், மட நல்லோள்வயின்
தீது இன்றாக, நீ புணை புகுக!' என
என்னும் தண்டும்ஆயின், மற்று அவன்
அழிதகப் பெயர்தல் நனி இன்னாதே —
ஒல் இனி, வாழி, தோழி! — கல்லெனக்
கண மழை பொழிந்த கான் படி இரவில்
தினை மேய் யானை இனன் இரிந்துஓட
கல் உயர் கழுதில் சேணோன்ன எறிந்த
வல் வாய்க் கவணின் கடு வெடி ஒல்லெ

மறப் புலி உரற, வாரணம் கதற
நனவுறு கட்சியின் நல் மயில் ஆல
மலை உடன் வெரூஉம மாக் கல் வெற்பன்
பிரியுநன் ஆகலோ அரிதே; அதாஅன்று
உரிதுஅல் பண்பின் பிரியுநன் ஆயின்
வினை தவப் பெயர்ந்த வென் வேல் வேந்தன்
முனைகொல் தானையொடு முன் வந்து இறுப்ப
தன் வரம்பு ஆகிய மன் எயில் இருக்கை
ஆற்றாமையின் பிடித்த வேல் வலித்
தோற்றம் பிழையாத் தொல் புகழ் பெற்ற
விழை தக ஓங்கிய கழை துஞ்சு மருங்கின்
கான் அமர் நன்னன் போல
யான் ஆகுவல், நின் நலம் தருவேனே.

*– மோசிகீரனார் அக 392*

*“தோழி வாழ்க! இப்போது என் வேண்டுகோளுக்கு இரங்குவாயாக' கல் என்ற ஓசையுடன் முகிற்கூட்டம் மழை பெய்த காட்டில் உள்ள உயிர்கள் யாவும் அடங்கிய இரவு அதில் தினையை மேய்ந்த யானைக் கூட்டம் நிலை கெட்டு ஓடும்படி மலையில் உயர்ந்த பரணில் இருந்து குறவன் வீசிய வலிய விசை வாய்ந்த கவண் கல்லின் கடிய ஓசை ஒல்லென்று ஒலிக்க, அதனைக் கேட்டு அஞ்சாமையுடைய புலி உறுமும் யானை கதறும் அகலமான காட்டில் உள்ள மயில் கொண்டலின் இடியோசை கேட்டு அஞ்சும் இத்தகு பெரிய கற்களையுடைய மலை பொருந்திய நாட்டைக் கொண்ட தலைவன் காட்டில் தன் பெண்யானையை இழந்த தொங்கும் நீண்ட பெரிய கை பொருந்திய வெண்மையான கொம்பையுடைய ஆண்யானை உண்ணும் தழையை உண்ணாத நீக்கியதால் உண்டான வாட்டம் போன்ற அழகுடைய தன் தலைவனின் உடல் மெலிவினை நன்றாக அறிந்திருந்தும் மங்கையரான நம்மிடம் இரந்து நிற்பதை வெறுக்காதவன் ஆனான் ஆகிப் பொன்னால் செய்த பாவையைப் போன்ற அழகையும் விரும்பப்படும் மென்மைத் தன்மையையும் மடப்பமும் பொருந்திய தலைவியிடம் ‘தீங்கு இல்லையாம்படி எனக்கு நீ புணையாய்ச் செல்வாயாக' என்று கூறி வேண்டுகிறான்*

அவன் பின்பு சிறிது நீங்குவானாயின், அங்ஙனம் நாம் வருந்தும்படி அவன் மீண்டு செல்லுதல் மிகவும் துன்ப மானதாகும்.

நாம் அவனுக்கு அருள் செய்யாது போயினும் அவன் நம்மைப் பிரிந்து செல்பவனாக இல்லை தான் மேற்கொண்டு வந்த வினைகெடுதலால் மீண்டு சென்ற வேலையுடைய பகை மன்னன் மீண்டும் போர்க் களத்தில் படைகளுடன் கூடி மதிற்புறத்தில் வந்து தங்கினான். தங்க, நிலை பெற்ற மதிலையுடைய அரண் அந்தப் பகை வேந்தனை எதிர்த்து நிற்றல் முடியாதுபோனது அதனால் காட்டில் வாழ்ந்திருந்த கைக் கொண்ட வேலின் வலியமைந்த தன் தோற்றமானது பிழை யாதபடி தன் பழைய புகழை நிலைபெறச் செய்தவன் நன்னன் அவனைப் போன்று தலைவனை உன்னுடன் சேர்த்து நின் நலத்தை மீண்டும் உன்னுடன் கூட்டி வைப்பேன்" என்று தோழி இயம்பினாள்.

## 458. இங்கு இன்று தங்கிச் செல்க

'இழை நிலை நெகிழ்ந்த எவ்வம் கூர
படர் மலி வருத்தமொடு பல புலந்து அசைஇ
மென் தோள் நெகிழச் சாஅய், கொன்றை
ஊழுறு மலரின் பாழ் பட முற்றிய
பசலை மேனி நோக்கி, நுதல் பசந்து
இன்னேம் ஆகிய எம் இவண் அருளான்
நும்மோன் செய்த கொடுமைக்கு, இம்மென்று
அலமரல் மழைகூ கண் தெண் பனி மல்க
நன்று புறமாறி அகறல், யாழ நின்
குன்று கெழு நாடற்கு என் எனப்படுமோ?
கரை பொரு நீத்தம்! உரை' எனக் கழறி
நின்னொடு புலத்தல் அஞ்சி, அவர் மலைப்
பல் மலர் போர்த்து, நாணு மிக ஒடுங்கி
மறைந்தனை கழியும் நிற் தந்து செலுத்தி
நயன் அறத் துறத்தல் வல்லியோரே
நொதுமலாளர்; அது கண்ணோடாது
அழல் சினை வேங்கை நிழல் தவிர்ந்து அசைஇ

மாரி புறந்தர நந்தி, ஆரியர்
பொன் படு நெடு வரை புரையும் எந்தை
பல் பூங் கானத்து அல்கி, இன்று, இவண்
சேந்தனை செலினே திதைகுவது உண்டோ? –
குய வரி இரும் போத்துப் பொருத புண் கூர்ந்து
உயங்கு பிடி தழீஇய மதன் அழி யானை
வாங்கு அமைக் கழையின் நரலும், அவர்
ஓங்கு மலை நாட்டின் வரூஉவோயே!

*– இம்மென்கீரனார் அக 398*

"*கரைமீது புரண்டு வரும் வெள்ளம் பொருந்திய ஆறே! பெரிய ஆண் புலி தாக்கியதால் புண் மிகுந்து, வருந்தும் பெண் யானையால் தழுவப்படும் வலி குன்றிய ஆண் யானை வளைவான மூங்கிலால் செய்த தூம்பு என்ற ஊது கருவியைப் போன்று ஒலிக்கும் எம் தலைவரின் மலை நாட்டினின்றும் இழிந்து வருவோய்*

*அணிகள், கழல்வதற்குக் காரணமான துன்பம் மிக, நினைவு மிக்க வருத்தத்துடன் பலவற்றையும் வெறுத்துக் கூறித் தங்கி மென்மையான தோல் மெலிய வருந்திக் கொன்றை மரத்தின் மலர்ந்த மலரைப் போலப் பாழாய் படர்ந்த பசலையையுடைய என் மேனியைப் பார்த்து, நெற்றி, பசலை படரப் பெற்ற இத் தன்மை கொண்டவராய் உள்ளோம் இத் தகைய எம்மைப் பார்த்து அருள் செய்யானாய் உன் தலைவன் செய்த வன்மைக்குக் கலங்குகின்ற கண்களினின்றும் நீர் விரைவாகப் பெருகவும், அறத்தைக் கைவிடல், குன்று பொருந்திய நாட்டையுடைய உன் தலைவனுக்கு இச் செயல் என்ன என்று உலகத்தவரால் சொல்லப்படுமோ! உரைப்பாயாக எனச் சொல்லி உன்னுடன் நான் பிணங்குவேன் என்று அஞ்சி மலையில் உள்ள பல பூக்களையும் போர்த்துக் கொண்டு நாணத்தால் மிகவும் ஒடுங்கி மறைந்து நீங்கும் உன்னை மட்டும் எம் ஊர் வழியே அனுப்பிவிட்டு, ஏதிலாராகிய அவர் அறமின்றித் துறத்தற்கு வன்மை வாய்ந்தவர் ஆவர் என்பது தெளிவு*

*அதனை நோக்காது தீயைப் போன்ற மலர்கள் நிறைந்த கிளையையுடைய வேங்கைமரத்தின் நிழலில் நின் ஓட்டத்தைத்*

தவிர்ந்து தங்கிப் பெய்யும் மழை காத்தலால் பெருகி, ஆரியரின் பொன் பொருந்திய நீண்ட இமயமலையை ஒக்கும் எம் தந்தையின் காட்டில் அமர்ந்து இன்று இவ் இடத்தில் தங்கியிருந்து செல்வாயானால், நின் செயல் கெட்டுப் போவது ஏதேனும் உண்டோ?" என்று தலைவனின் மலை யினின்று வரும் ஆற்றை நோக்கித் தலைவி வினாவினாள்

# குறிஞ்சி

## கலித்தொகை

### 459. அழகிய கண்ணன் அவன்

கய மலர் உண்கண்ணாய்! காணாய் ஒருவன்
வய மான் அடித் தேர்வான் போல, தொடை மாண்ட
கண்ணியன் வில்லன், வரும்; என்னை நோக்குபு,
முன்னத்தின் காட்டுதல் அல்லது, தான் உற்ற
நோய் உரைக்கல்லான் பெயரும்மன் பல் நாளும்;
பாயல் பெறேஎன், படர் கூர்ந்து அவன் வயின்
சேயேன்மன் யானும் துயர் உழப்பேன், ஆயிடைக்
கண் நின்ற கூறுதல் ஆற்றான், அவனாயின்,
பெண் அன்று, உரைத்தல், நமக்காயின்; 'இன்னாதூஉம்
காணான் கழிதலும் உண்டு என்று, ஒரு நாள், என்
தோள் நெகிழ்பு உற்ற துயரால் துணிதந்து, ஓர்
நாண் இன்மை செய்தேன்; நறுநுதால்! ஏனல்
இனக் கிளி யாம் கடிந்து ஓம்பும் புனத்து அயல்,
ஊசல் ஊர்ந்து ஆட, ஒரு ஞான்று வந்தானை
ஐய, சிறிது என்னை ஊக்கி எனக் கூற,
தையால்! நன்று என்று அவன் ஊக்க, கை நெகிழ்பு
பொய்யாக வீழ்ந்தேன், அவன் மார்பின்; வாயாச் செத்து,
ஒய்யென ஆங்கே எடுத்தனன் கொண்டான் மேல்
மெய் அறியாதேன் போல் கிடந்தேன்மன், ஆயிடை
மெய் அறிந்து ஏற்று எழுவேனாயின், மற்று ஒய்யென,
ஒண்குழாய்! செல்க எனக் கூறி விடும் பண்பின்
அங்கண் உடையன் அவன்.

*– நல்லந்துவனார் கலி 37*

*நீர் நிலையுள் உள்ள நீல மலர் போன்ற மை பூசப்பெற்ற கண்களை உடையவளே! நான் சொல்வதை மனத்தினால் ஆராய்ந்து பார் தனக்கு நிகரில்லாத தலைவன் ஒருவன் வலிமை வாய்ந்த யானை முதலியவற்றின் அடிச்சுவட்டைத் தேடுபவன் போல் வந்தனன் அவன் கட்டப்படுதலில் மாட்சி மையுடைய மாலையை உடையவன். வில்லை உடையவன் இங்ஙனம் வந்தவன் என்னைப் பார்த்துத் தான் அடைந்த நோயைக் குறிப்பால் யான் உணரக் கூறினான் அங்ஙனமின்றி வாயால் கூறவில்லை*

*பல நாள் இவ்வாறு வந்து போவான் அதைக் கண்டு அவனே அல்லாது அவனிடம் மிக்க உறவில்லாத எனக்கு இவனது எண்ணம் யாது என்ற நினைவு எழுந்தது நான் துயில் பெறாதவள் ஆனேன் துன்பத்துள் ஆழ்ந்தேன் அவனோ தன் குறையை நம் எதிர் நின்று கூறவில்லை நாமோ நின் வருத்தம் கண்டு யாங்களும் வருந்தினோம் எனக் கூறுவது நம் பெண் தன்மைக்கு உகந்தது அன்று அவன் வருத்தத்தால் இறந்து படுதலும் உண்டென்று எண்ணினேன்*

*இடையில் ஒருநாளில் என் தோள்கள் மெலிந்து நான் அடைந்த வருத்தத்தால் துணிவுடன் செய்யக் கூடாத ஒன்றைச் செய்து நாணமற்றவள் ஆனேன். அஃது என்ன வென்றால், நல்ல நெற்றியையுடைய தலைவியே! தினைப் புனத்து இனமான கிளிகள் தினைப் புனத்தில் வந்து உண்ணாமல் கிளியை ஓட்டிப் பாதுகாக்கும் புனத்துக்குப் பக்கத்தில் இடப்பட்டிருந்த ஊசலில் அமர்ந்து ஆடினேன். அந்த நாளில் அங்கு வந்தவனை, 'ஐயனே! சிறுபொழுது என்னை ஊசலில் ஆட்டுவாயாக' என்று யான் சொன்னேன் அவனும் அதற்கு உடன் பட்டான் பெண்ணே! 'நீ கூறியது நன்று' என்று ஊசலை ஆட்டினான் அது போழ்து நான் என் கை நெகிழப் பெற்ற வளாய் விழுவது போல் அவன் நினைக்கும்படி பொய்யாய் அவன் மார்பில் விழுந்தேன் அவன் அதை நான் நெகிழப் பெற்று விழுவதாகவே உண்மையாக எண்ணினான் விரைய என்னை அணைத்துக் கொண்டான். அப்போழ்து என் மெய் வருத்தத்தை உணர்ந்து யான் அறிந்து மயக்கம் நீங்கி எழுந்திருப்பேனாயின், பிறர் அறிவார் என்று அவன் எண்ணி விரைய 'ஒளியுடைய*

*அணியை அணிந்தவளே! நீ போ!' என்று கூறி அனுப்பினான் இதனால் நம்மீது அவன் ஒரு நோட்டம் உடையவனா யிருந் தான். அதனால் அவன் மார்பின் மீது மெய்ம் மறந்தவளைப் போல் நான் கிடந்தேன் என்று தலைவன் மீது கொண்ட காதலைத் தலைவி தோழியிடம் சொன்னாள்*

## 460. முறையாய் மணங்கொள்ள வருவான்

இமைய வில் வாங்கிய ஈர்ஞ் சடை அந்தணன்
உமை அமர்ந்து உயர்மலை இருந்தனனாக,
ஐ-இரு தலையின் அரக்கர் கோமான்
தொடிப் பொலி தடக் கையின் கீழ் புகுந்து, அம் மலை
எடுக்கல்செல்லாது உழப்பவன் போல—
உறு புலி உரு ஏய்ப்பப் பூத்த வேங்கையைக்
கறுவு கொண்டு, அதன் முதல் குத்திய மத யானை
நீடு இரு விடர் அகம் சிலம்பக் கூய், தன்
கோடு புய்க்கல்லாது, உழக்கும் நாட கேள்:

ஆர் இடை என்னாய் நீ அரவு அஞ்சாய் வந்தக்கால்
நீர் அற்ற புலமே போல் புல்லென்றாள், வைகறை,
கார் பெற்ற புலமேபோல், கவின் பெறும், அக் கவின்
தீராமல் காப்பது ஓர் திறன் உண்டேல் உரைத்தைைக்காண்.

இருள் இடை என்னாய் நீ இரவு அஞ்சாய் வந்தக்கால்
பொருளில்லான் இளமை போல் புல்லென்றாள், வைகறை
அருள் வல்லான் ஆக்கம் போல் அணி பெறும் அவ்அணி
தெருளாமல் காப்பது ஓர்திறன் உண்டேல், உரைத்தைைக்காண்.
மறம் திருந்தார் என்னாய் நீ மலையிடை வந்தக்கால்,
அறம் சேர்ந்தான் ஆக்கம் போல் திருத்தகும், அத் திருப்
புறங்கூற்றுத் தீர்ப்பது ஓர் பொருள் உண்டேல்,
உரைத்தைைக்காண்.
என ஆங்கு
நின் உறு விழுமம் கூறக் கேட்டு,
வருமே, தோழி, நல் மலை நாட—
வேங்கை விரிவு இடம் நோக்கி,
வீங்கு இறைப் பணைத் தோள் வரைந்தனன் கொளற்கே.

*— கலி 38*

பனி மலையில் விளைந்த மூங்கிலை வில்லாக வளைத்துக் கொண்டு கங்கை ஈரத்தையுடைய சடையுடையவன் சிவ பெருமான் அப் பெருமான் உமையம்மையுடன் இமய மலை யில் வீற்றிருந்தான். அப்போழ்து அரக்கர் தலைவனான பத்துத் தலைகளையுடைய இராவணன் அந்த இமய மலையை எடுப்பதற்குக் கையைக் கீழே செருகினான்; தன் பெரிய கையால் அதை எடுக்க அவனால் இயலவில்லை வருந்தினான் அந்த இராவணனைப் போன்று புலியினது வடிவை ஒத்த வேங்கை மரத்தைப் புலியானது பகைமை கொண்டு அதன் அடியில் குத்தியது யானை தன் கொம்பைத் திரும்ப எடுக்க மாட்டாது வருந்தும் அது மலையிடம் எல்லாம் எதிரொலிக்கும்படி கூப்பிடும் இத்தகைய இயல்புடைய நாட்டை உடையவனே! யான் சொல்வதைக் கேட்பாயாக:

நீர் இல்லாத நிலத்தின் பயிர் போல் நின் அன்பு இல்லாது பொலிவற்றவள், நீ வருவதற்கரிய இடம் என்று எண்ணாமல் அங்குள்ள பாம்புக்கும் அஞ்சாமல் வர, விடியற்காலத்தில் மழையைப் பெற்ற பயிரைப் போல் அழகு பெறுவாள் அங்ஙனம் இவள் பெற்ற அழகு இவளை விட்டு நீங்காது நிலையாய் நிற்கும்படி காக்கும் ஈடுபாடு உண்டாயின் அதை எங்களுக்குச் சொல்வாய்!

கையில் பொருள் இல்லாதவனின் இளமையைப் போல் நின் அன்பு கிட்டப்பெறாது பொலிவற்றவள், நீ இருளில் இரவு என்று எண்ணாமல் அங்கு செய்தலில் வல்லவனுக்கு உண்டான செல்வத்தைப் போல் அழகைப் பெறுவாள் அங்ஙனம் இவள் பெற்ற அழகானது பிறரால் வந்த அழகு என்று புறம் சொல்வதைப் போக்கும் ஒரு பொருளானது உண்டாயின் அதை எங்களுக்குச் சொல்வாய்!

அறநெறியைப் பொருந்தாது வீணே முதுமையை அடைந்தவன் மறுமைச் செல்வம் அடையாமல் பொலிவுறு வான். அது போல் உன் அருள் பெறாமல் இவள் பொலி வற்றாள், இவள் கொலைத் தொழிற் குறைவில்லாத கானவர் துன்பம் உண்டாகும் என்று எண்ணாமல், மலைச் சாரலில் உண்டான வழியில் வருகின்றாய். வந்த இடத்து, அவ் வருகையால் இவள் பெற்ற புணர்ச்சி இன்பத்தைப் போல்,

*விடியற்காலக் கூறுபாடுடையவனின் செல்வப் பொலிவு போல அழகை எய்துவாள் அங்ஙனம் பெற்ற அழகால் அயலவர் புறம் சொல்வதற்குரிய உரையை மாற்றுவதற்குரிய ஒரு பொருள் இருப்பின் அதை எங்களுக்குக் கூறு.*

*நின் வருத்தத்தை யான் தலைவனுக்குக் கூறினேன் அதைக் கேட்டு, நல்ல மலை நாடன், தோழி! வேங்கை மலர்கின்ற காலத்தைப் பார்த்துப் பெருத்த முன் கையை உடைய தோளை மணந்து கொள்வதற்கு வருவான்*

## 461. முறையாய் மணக்க வந்தான்

"காமர் கடும் புனல் கலந்து எம்மொடு ஆடுவாள்,
தாமரைக் கண் புதைத்து, அஞ்சித்
தளர்ந்து, அதனோடு ஒழுகலான்,
நீள் நாக நறுந் தண் தார் தயங்கப் பாய்ந்து, அருளினால்,
பூண் ஆகம் உறத் தழீஇப் போத்தந்தான் அகன் அகலம்
வரு முலை புணர்ந்தன என்பதனால் என் தோழி
அரு மழை தரல் வேண்டின் தருகிற்கும் பெருமையளே.

அவனும்தான் ஏனல் இதணத்து அகிற் புகை உண்டியங்கும்
வான் ஊர் மதியம் சேரின், அவ் வரை,
'தேனின் இறால்' என, ஏணி இழைத்திருக்கும்
கான் அகல் நாடன் மகன்.
சிறு குடியீரே! சிறுகுடியீரே!
வள்ளி கீழ் வீழா; வரைமிசைத் தேன் தொடா;
கொல்லை குரல் வாங்கி ஈனா – மலை வாழ்நர்
அல்ல புரிந்து ஒழுகலான்.

காந்தள் கடி கமழும், கண் வாங்கு, இருஞ் சிலம்பின்
வாங்கு அமை மென் தோட் குறவர் மட மகளிர்
தாம் பிழையார், கேள்வர்த் தொழுது எழலால் தம் ஐயரும்
தாம் பிழையார் தாம் கொடுத்த கோல்.'
என ஆங்கு

அறத்தொடு நின்றேனைக் கண்டு, திறப்பட
என்னையர்க்கு உய்த்து உரைத்தாள், யாய்.

அவரும் தெரிகணை நோக்கி, சிலை நோக்கி, கண் சேந்து
ஒரு பகல் எல்லாம் உருத்து எழுந்து, ஆறி,
'இருவர்கண் குற்றமும் இல்லையால்' என்று
தெருமந்து சாய்த்தார் தலை.

தெரியிழாய்! நீயும் நின் கேளும் புணர,
வரை உறை தெய்வம் உவப்ப, உவந்து
குரவை தழீஇ யாம் ஆட, குரவையுள்
கொண்டு நிலை பாடிக்காண்.

நல்லாய்!
நல் நாள் தலைவரும் எல்லை, நமர் மலைத்
தம் நாண் தாம் தாங்குவார், என் நோற்றனர்கொல்?

புன வேங்கைத் தாது உறைக்கும் பொன் அறை முன்றில்,
நனவில் புணர்ச்சி நடக்குமாம் அன்றோ?
நனவில் புணர்ச்சி நடக்கலும், ஆங்கே
கனவில் புணர்ச்சி கடிதுமாம் அன்றோ?

விண் தோய் கல் நாடனும் நீயும் வதுவையுள்
பண்டு அறியாதீர் போல் படர்கிற்பீர்மன் கொலோ?
பண்டு அறியாதீர் போல் படர்ந்தீர் பழங் கேண்மை
கண்டு அறியாதேன் போல் சுரக்கிற்பென்மன் கொலோ?

மை தவழ் வெற்பன் மண அணி காணாமல்
கையால் புதை பெறூஉம் கண்களும் கண்களோ?

என்னை மன் நின் கண்ணால் காண்பென்மன், யான்.

நெய்தல் இதழ் உண்கண் நின் கண் ஆக, என் கண் மன.
என ஆங்கு
நெறி அறி செறி குறி புரி திரிபு அறியா
அறிவனை முந்துறீஇ,
தகை மிகு தொகை வகை அறியும் சான்றவர் இனமாக,
வேய் புரை மென் தோட் பசலையும் அம்பலும்,
மாயப் புணர்ச்சியும், எல்லாம் உடன் நீங்க,
சேய் உயர் வெற்பனும் வந்தனன்;
பூ எழில் உண் கணும் பொலிகமா, இனியே! — *கலி 39*

தலைவி எம்முடன் கூடி விருப்பம் தரும் நீரில் நீராடினாள். அது போழ்து கால் தளர்ந்து அஞ்சித் தாமரை போன்ற கண்களை நீருள் மறைத்து நீரோடு சென்றனள் இவளிடம் உண்டான அருளால் சுரபுன்னை மலரால் ஆன மாலையைச் சூடிய தலைவன் அவளை அடித்துச் செல்லும் நீரில் குதித்தான் அணிகலன் அணிந்த இவள் மார்பைத் தன் மார்புடன் பொருத்த அணைத்துக் கொண்டான் கரையில் அவளைக் காத்துக் கொணர்ந்தான் அவனது அகன்ற மார்பை இவளது எழுகின்ற முலைகள் சேர்ந்தன என்று பிறர் கூறும் கூற்றால் என் தோழியான இவள், மழையைப் பெய்யச் செய்ய நாம் விரும்பினால் அதை நமக்குத் தரும் கற்பின் பெருமை யுடையவள் ஆனாள்.

இவளே அல்லாமல் அவனும் தினைப்புனத்தில் இடப் பட்ட பரணில் எரிந்த அகிலின் புகையால் உண்ணப்பட்டு ஒளி குன்றித் திரியும் நிலவும் வானில் போக, அம் மலை உச்சியில் தங்கும் மலையிலே வைக்கப்பட்ட தேன்கூடு என்று எண்ணி அதை அழித்தற்குக் கண்ஏணி அமைத்திருக்கும் காடு அகன்ற நாட்டினன் மகன் அவன்.

சிறு குடியிலுள்ளவரே! சிறுகுடியிலுள்ளவரே! இம் மலையில் வாழ்பவர் இவ்வாறு உதவி செய்தவர்க்குக் கொடுக்க எண்ணாமல் அயலார்க்குக் கொடுக்க எண்ணி அறம் அல்லாதவற்றை விரும்பி நடக்கின்றனர். அதனால் இனி இங்கு வள்ளிக் கொடியும் கிழங்கை ஈனாது மலையின் மீது தேன் கூடுகள் கட்டப்படமாட்டா; கொல்லையில் தினைகளும் கதிர்களை ஈனா.

காந்தள் பூ மணம் கமழ்கின்ற, பார்த்தவர் கண்ணைத் தன்னிடத்தை வாங்கிக் கொள்ளும் கரியமலை. அதனிடை வளர்ந்த மூங்கிலைப் போன்ற மென்மையான தோளையுடைய குறவரின் மடப்பத்தையுடைய மங்கையர் பிழையாமல் தம் கணவரைத் தெய்வம் என்று வணங்கி எழுந்தி ருத்தலால் அவர்களின் தந்தை முதலியவரும் தாங்கள் எய்யும் அம்புகள் இலக்குத் தப்பாதவர் ஆனார்

உறவினர் மணம் செய்துதர மறுத்தபோது அறத்தொடு நின்ற என் கூற்றைச் செவிலித்தாய் நெஞ்சினால் உணர்ந்து

நற்றாய்க்கு அறத்தொடு நின்றாள். அவள் அதைக் கேட்டு என் தமையன்மார்க்குச் சினம் உண்டாகாமல் கூறினாள்

அதைக் கேட்ட தமையன்மாரும் ஒரு முழுத்த நேரம் மனம் கொதித்தனர்; ஆராய்ந்தெடுத்த அம்புகளைப் பார்த்தனர்; வில்லையும் பார்த்தனர்; எழுந்து கலங்கினர் பின் இருவரிடத்தும் குற்றம் இல்லை என்று சினம் தணிந்தனர்; நாணத்தால் தலை சாய்ந்திருந்தனர்

ஆராய்ந்து எடுக்கப்பட்ட அணிகளை அணிந்த தலைவியே! நீயும் நின் கணவனும் கூடும்படியாய் இந்த மலை வாழ் முருகப் பெருமான் உள்ளம் மகிழும்படி யாம் மகிழ்ந்து குரவைக் கூத்தைக் கையைக் கோத்து ஆடுவதற்கு அக் கூத்தில் பாடும் பாட்டைக் கேட்டு நிலைப் பாடலைப் பாடுவாய்.

அதைக் கேட்டாள் தலைவி! "நற்றாய்! நம்மைத் தலைவர் மணந்து கொள்ளும் நாள் நம்மிடம் வரும் அளவில் நம் சுற்றத்தார் மலையில் நாணத்தைத் தாங்குபவர் என்ன நல்வினையைச் செய்தாரோ! என்று சொன்னாள்

புனத்தில் வளர்ந்துள்ள வேங்கைப் பூவின் பொன் போன்ற தாது உதிரும் பாறையையுடைய முற்றத்தில் வெளியில் ஏற்படும் கூட்டமும் ஒட்பில் நடக்கும் அன்றோ! அந்த நனவில் புணர்ச்சி நடந்ததாக அப்போது கனவில் உண்டாகும் கூட்டத்தைப் போக்கி விடுவோம் அல்லமோ! எனத் தலைவி உரைத்தாள்

அதைக் கேட்ட தோழி, 'வாளைத் தீண்டும் நாடனும் நீயும் அம் மணத்தில் முன்பு அறிந்து கொள்ளாதவர் போல் நடந்து கொள்வீரோ! நீவிர் முன்பு அறிமுகமாகாதவர் போல நடப்பின் யான் பழைய உறவைக் கண்டறியாதேன்போல் நும் பழைய தொடர்பை மறைப்பேனோ!' எனக் கூறினாள்.

முகில் தவழும் மலையை உடையவனின் மணக் கோலம் காணாமல் கையால் புதைத்தலைப் பெறுகின்ற கண்களும் கண்கள் எனச் சொல்லப்படுமோ!

அதைக் கேட்ட தலைவி நான் உன் கண்ணால் காண்பேன் என்றாள். அதைக் கேட்ட தோழி "நெய்தல் மலர் போல் மை பூசப் பெற்ற கண்ணான உன்கண் என் கண்ணாவதாகுக!" என்றாள்

*நீண்ட உயர்ந்த மலையை உடைய நம் தலைவனும் நூல் நெறியால் அறிந்த இருவரும் கூடுவதற்கு ஏதுவான வேளை வேறுபட்டுத் தப்புதலை அறியாத கணியனைக் கொண்டு அழகு மிகும் தொகுத்துக் கூறல் வகுத்துக் கூறல் ஆகியவற்றை அறியும் சான்றோர் தனக்குச் சுற்றமாக விளங்க, மூங்கிலைப் போன்ற நம் மென்மையான தோளில் உண்டாகும் பசலை யும் ஊரவர் கூறும் அம்பலும் கனவில் கூடும் பொய்யான கூட்டமும் நீங்குமாறு வந்தான் நின் மலர் அழகையுடைய கண்ணும் பொலிவு அடைக*

### 462. மணக்க வந்தான் மெய்ம்மலி உவகையன்!

"அகவினம் பாடுவாம், தோழி! –அமர் கண்,
நகை மொழி, நல்லவர் நாணும் நிலை போல்,
தனை கொண்ட ஏனலுள் தாழ் குரல் உரீஇ,
முகை வளர் சாந்து உரல், முத்து ஆர் மருப்பின்
வகை சால் உலக்கை வயின் வயின் ஓச்சி,
பகை இல் நோய் செய்தான் பய மலை ஏத்தி,
அகவினம் பாடுவாம் நாம்.

ஆய் நுதல் அணி கூந்தல், அம் பணைத் தட மென் தோள்,
தேன் நாறு கதுப்பினாய்! யானும் ஒன்று ஏத்துகு –
வேய் நரல் விடரகம் நீ ஒன்று பாடித்தை.
கொடிச்சியர் கூப்பி வரை தொழு கை போல்,
எடுத்த நறவின் குலை அலங்காந்தள்
தொடுத்த தேன் சோர, தயங்கும் தன் உற்றார்
இடுக்கண் தவிர்ப்பான் மலை.
கல்லா கடுவன் கணம் மலி சுற்றத்து,
மெல் விரல் மந்தி குறை கூறும் செம்மற்றே –
தொல் எழில் தோய்ந்தார் தொலையின், அவரினும்
அல்லற்பாடுவான் மலை.
புரி விரி, புதை துதை, பூத் ததைத்த தாழ் சினைத்
தளிர் அன்ன எழில் மேனி தகை வாட நோய் செய்தான்
அரு வரை அடுக்கம் நாம் அழித்து ஒன்று பாடுவாம்.
விண் தோய் வரை, பந்து எறிந்து அயா வீட,
தண் தாழ் அருவி, அரமகளிர், ஆடுபவே

பெண்டிர் நலம் வெளவி, தண் சாரல் தாது உண்ணும்
வண்டின் துறப்பான் மலை.
ஒடுங்கா எழில் வேழம் வீழ் பிடிக்கு உற்ற
கடுஞ்சூல் வயாவிற்கு அமர்ந்து, நெடுஞ்சினைத்
தீம் கண் கரும்பின் கழை வாங்கும் 'உற்றாரின்
நீங்கலம்' என்பான் மலை.
என் நாம்
தன் மலை பாட, நயவந்து கேட்டு, அருளி,
மெய்ம் மலி உவகையன் புகுதந்தான் – புணர்ந்து ஆரா
மென் முலை ஆகம் கவின் பெற,
செம்மலை ஆகிய மலைகிழவோனே. *– கலி 40*

*தோழியே! நம் கருத்துக்கு வேண்டியபடியெல்லாம் சொற்களை அழைத்துப் பாடுவோம் என்று தோழி தலைவியை நோக்கிக் கூறினாள். அதைக் கேட்ட தலைவி அழகுடைய தினைப்புனத்தில் முகத்துக்குப் பொருந்திய கண்ணையும் மகிழ்வு அளிக்கும் சொல்லையும் உடைய மகளிர் நாணம் கொண்டு இறைஞ்சும் நிலை போல், முற்றித் தாழ்ந்த தினைக்கதிரை உருவி, சந்தன மரத்தால் ஆக்கப்பட்ட உரலில் இட்டு, முத்துடைய யானைக் கொம்பால் செய்யப் பட்ட உலக்கையை என்னிடத்தும் உன்னிடத்தும் மாறி மாறி உயர்த்திக் குற்றி, மருந்து இல்லாத நோயைச் செய்தவனின் பயன் தரும் மலையை வாழ்த்தி நம் கருத்துக்கு வேண்டியபடி யெல்லாம் அழைத்துப் பாடுவோம் என்று உடன்பட்டாள்.*

*அழகிய நெற்றியையும் அழகுபடுத்தும் கூந்தலையும் மூங்கில் போன்ற தோளையும் மலர் மணம் கமழும் கதுப்பை யும் உடையவளே! மூங்கில் ஒலிக்கும் முழைஞ்சை யுடைய மலையை முன்பு போல் அல்லாது நீ இயற்பட ஒன்றைப் பாடு; பின்பு யானும் இயற்படப் பாடுவேன் என்று தோழி சொன்னாள்*

*(தலைவி இயற்படப் பாடவில்லை ஆதலால் தோழி இனிப் பாடுகின்றாள்)*

*தன்னைச் சேர்ந்தவனின் வருத்தத்தைப் போக்கும் மலை, கொடிச்சியர் இரு கைகளையும் கூப்பித் தம் குறைநீங்க முருகன் உறையும் மலையைத் தொழும் கைகளைப் போன்று,*

மிக்க வேதனையுடைய கொத்துகள் அசையும் காந்தளின் தேன் ஒழுகும்படியாக, அக் காந்தள் அசையும்.

தான் புணர்ந்த மகளிரின் அழகுகெடின் அவரைவிட அதிகமாக வருத்தம் அடைபவனின் மலை, ஆண்குரங்கு களவொழுக்கம் ஒழிந்து மணந்து கொள்ளும் நிலைமையைக் கற்றுத் திரண்ட சுற்றத்தவரிடம் போய் மகள் பேசுவார் போல் மென்மையான விரலையுடைய பெண் குரங்கை எனக்குத் தர வேண்டும் என்று தனது குறையைக் கூறும் இயல்பு உடையது

கட்டு அவிழ்ந்த கொம்பு மறைந்த நெருங்கிய பூக்கள் பொருந்திய கிளையில் உள்ள தளிரைப் போன்ற அழகு வாய்ந்தது நம் மேனி இது கெடுமாறு நமக்கு நோயைச் செய்தானின் அரிய உச்சி மலைகளையுடைய பக்க மலை களை நாம் இனிப்பாடும் போது இயற்படப் பாடுவதை விட்டு இயற்பழித்தலாகிய ஒன்றைப் பாடுவோம்

குளிர்ந்த மலைச்சாரலில் தேனை உண்ணும் வண்டு அதைத் துறப்பது போல், மங்கையரின் அழகை நுகர்ந்து, அம் மங்கையரைத் துறப்பவரின் மலையாய் இருந்தபோதும், வானை அளாவும் மலையில் தெய்வமங்கையர் பந்து ஆடிய இளைப்பு நீங்கக் குளிர்ந்த அம் மலை அருவியில் நீராடுவர்.

தன்னைச் சேர்ந்தவரிடத்து நின்றும் நீங்கமாட்டோம் என்று இருப்பவனது மலை. அதில் சோம்பியிராத அழகை யுடைய யானை தான் விரும்பும் பெண் யானைக்கு முதல் சூலால் உண்டான வயா நோய்க்கு உள்ளம் பொருந்தி இனிய கணுவில் தோன்றிய, கிளையை உடைய நீண்ட கரும்பினை முரிக்கும்

என்று நாம் அவன் மலையைப் பாடினோம். பாட, அதனை அம் மலைக்குரியவன் கேட்டு மெய் நிறைந்த மகிழ்ச்சி கொண்டான். கனவிற் புணர்ச்சியாதலால் தழுவி மனம் நிறையப் பெறாத மெல்லிய முலையை உடைய மார்பு அழகு அடையுமாறு நீ தலைமையுடையையாக வேண்டி அவன் மணம் செய்து கொள்ள வந்தான் எனத் தோழி உரைத்தாள்.

## 463. தந்தையும் திருமணத்துக்கு உடம்பட்டான்

**பாடுகம், வா வாழி, தோழி! வயக் களிற்றுக்**
**கோடு உலக்கையாக, நல் சேம்பின் இலை சுளகா,**

ஆடு கழை நெல்லை அறை உரலுள் பெய்து, இருவாம்
பாடுகம், வா தோழி, தோழி! நல் தோழி! பாடுற்று.

இடி உமிழ்பு இரங்கிய விரவு பெயல் நடு நாள்,
கொடி விடுபு இருளிய மின்னுச் செய் விளக்கத்து,
பிடியொடு மேயும் புன்செய் யானை
அடி ஒதுங்கு இயக்கம் கேட்ட கானவன்
நெடு வரை ஆசினிப் பணவை ஏறி,
கடு விசைக் கவணையில் கல் கை விடுதலின்,

இறு வரை வேங்கை ஒள் வீ சிதறி,
ஆசினி மென் பழம் அளிந்தவை உதிரா,
தேன் செய் இறாஅல் துளைபடப் போகி,
நறு வடி மாவின் பைந் துணர் உழக்கி,
குலையுடை வாழைக் கொழு மடல் கிழியா,
பலவின் பழத்துள் தங்கும் மலை கெழு வெற்பனைப்
பாடுகம், வா தோழி, தோழி! நல் தோழி! பாடுற்று.

இலங்கும் அருவித்து; இலங்கும் அருவித்தே
வானின் இலங்கும் அருவித்தே தான் உற்ற
சூள் பேணான் பொய்த்தான் மலை.

பொய்த்தற்கு உரியனோ? பொய்த்தற்கு உரியனோ?
'அஞ்சல் ஓம்பு' என்றாரைப் பொய்த்தற்கு உரியனோ?
குன்று அகல் நல் நாடன் வாய்மையில் பொய் தோன்றின்,
திங்களுள் தீத் தோன்றிற்று.
இள மழை ஆடும், இள மழை ஆடும்
இள மழை வைகலும் ஆடும் என் முன்கை
வளை நெகிழ வாராதோன் குன்று.

வாராது அமைவானோ வாராது அமைவானோ?
வாராது அமைகுவான் அல்லன் மலைநாடன்
ஈரத்துள் இன்னவை தோன்றின், நிழற் கயத்து
நீருள் குவளை வெந்தற்று.

மணி போலத் தோன்றும், மணி போலத் தோன்றும்;
மண்ணா மணி போலத் தோன்றும் என் மேனியைத்
துன்னான் துறந்தான் மலை.

துறக்குவன் அல்லன்; துறக்குவன் அல்லன்;
தொடர் வரை வெற்பன் துறக்குவன் அல்லன்—
தொடர்புள் இனையவை தோன்றின, விசும்பில்
சுடருள் இருள் தோன்றியற்று
என ஆங்கு
நன்று ஆகின்றால் தோழி! நம் வள்ளையுள்
ஒன்றி நாம் பாடி, மறை நின்று கேட்டு அருளி,
மென் தோட் கிலுவனும் வந்தனன், நுந்தையும்
மன்றல் வேங்கைக் கீழ் இருந்து,
மணம் நயந்தனள் அம் மலைகிழவோற்கே. — *கலி 41*

*தோழி! வாழ்க! நாம் பாடுவோம், வா! எவ்வாறு பாடுவோம் என்றால், வாழி, தோழியே! நாம் இருவரும் அசையும் மூங்கிலின் நெல்லைப் பாறையாகிய உரலில் இட்டு, வன்மை வாய்ந்த யானைக் கொம்பான உலக்கையில் குற்றி நல்ல சேம்பினது இலைமுறமாய்க் கொண்டு புடைத்துப் பாடுவோமாக!*

*நல்ல தோழி! இடிபட்டுத் தீயை உமிழ்ந்து ஒலித்து எங்கும் பெய்தது மழை. அதனால் இருண்டது. அத்தகைய நள்ளிரவு அந் நள்ளிரவில் மின்னல் உண்டாக்கிய ஒளியில் பெண் யானைகளுடன் வந்து புன்செய் நிலத்தில் மேய்வன யானைகள் அவற்றின் அடிகள் வைக்கும் நடையினது ஓசையைக் கேட்டனன் கானவன் உயர்ந்த மலையில் ஆசினிப் பலா மரத்தின் மேல் இட்ட பரணில் ஏறினன்; கடிய வேகம் உடைய கவணில் கல்லை வைத்து எறிய, அக்கல் முரிபட்ட மலையில் நின்ற வேங்கை மரத்தின் ஒளியுடைய மலர்களைச் சிதறும் ஆசினிப் பலாவினது மென்மையான பழம் கனிந்துள்ளவற்றை உதிர்க்கும். வண்டுக் கூட்டம் கட்டிய தேன் அடையைத் துளையுண்டாக ஊடுருவும். நல்ல பிஞ்சை யுடைய மா மரத்தின் பசுமையான கொத்துகளைக் கலக்கும்; குலையை உடைய வாழையினது கொழுமையான மடலைக் கிழிக்கும்; பலாவின் பழத்துக்குள் போய்த் தங்கும் இத்தகைய வளம் உடையது தலைவன் மலை. அம் மலை யுடைய தலை வனைப் பாடுவோம், வா!*

நல்ல தோழி! நீ வாழி! தோழி. தான் கொண்ட சூளினைப் பாதுகாவாமல் பொய்த் தவனின் மலையா யிருந்தும் அது வீழ்ந்து விளங்கும் அருவியை உடையது; மழை பெய்தலால் விளங்கும் அருவியையுடையது இது என்ன வியப்பு!

அதைக் கேட்ட தலைவி தான் கூறிய சூளைப் பொய்யாக்குதற்கு உரியனோ! பொய்யாக்குதற்கு உரியனோ! அல்லன். ஆதலால் நீ அஞ்ச வேண்டா என்று கூறிய மகளிரைப் பாதுகாவாமல் விடுவதற்கு உரியவனோ! மலை மிக்க நல்ல நாட்டை உடையவன் கூறிய மெய்யிலே, பொய் தோன்றுமாயின் அது நிலவினில் தீயானது தோன்றியதைப் போன்றதாகும்!

எனது முன்கையில் வளையல் கழலும்படியாய் என்னிடம் வாராதவனின் மலையாயிருந்தும் இளமுகில் உலவும் அது ஒரு காலத்தில் அன்றி நாள்தோறும் உலவுகின்றது - இது தலைவி கூறியது.

பின் தோழி கூறுகின்றாள்: நின்னிடம் தலைவன் வாராது ஆற்றியிருப்பானோ! வாராது ஆற்றியிருப்பானோ! அதுவன்றி இம் மலை நாடனின் அருளில் இத்தகைய கொடியவை தோன்றுமாயின் நிழலையுடைய குளத்துள் நீரில் நின் குவளை வெந்தது போன்ற இயல்பையுடையது. ஆதலால் நீ அங்ஙனம் கூறாதே!

அதைக் கேட்ட தலைவி சொல்லலானாள். என் மேனியைக் கூடாது துறந்தவனின் மலையாயிருந்தும் அது நீலமணி போல் விளங்கும் கழுவப்படாத நீலமணிபோல் விளங்கும்

தோழியே! நீ கூறியபடி தலைவன் நம்மைக் கைவிடுவான் அல்லன் ஒன்றுடன் ஒன்று தொடர்ந்த மலையையுடைய அவன் நம்மைக் கைவிடுவான் அல்லன் அவனுடன் நாம் கொண்ட உறவில் இத்தகைய கொடியவை தோன்றுமானால் அது வானில் உலவும் ஞாயிற்றுள் இருள் உண்டான தன்மை உடையது ஆதலால் நீ அவ்வாறு கூறாதே என்று தோழி சொன்னாள்.

தோழி நம் வள்ளைப்பாட்டால் நாம் இக் கருத்துப் பொதியப் பாட, நம் மென் தோளுக்கு உரிமை உடையவனும்

*மறைந்து நின்றுகேட்டு அருளி மணம் செய்துகொள்ள வேண்டி வந்தனன் உன் தந்தையும் மணம் பொருந்திய வேங்கை மரத்தின் கீழ் இருந்து அம் மலைக்குரியவனுக்கு மணம் செய்து கொடுப்பதை விரும்பி உடன்பாட்டைத் தெரிவித்தான். ஆதலால் நமக்கு நன்மை உண்டாகிறது. எனவே, இனி நீ வருந்தாதே!*

## 464. நிகழ்ந்ததை நினைந்து கலங்குதல்

'மறம் கொள் இரும் புலித் தொல் முரண் தொலைத்த
முறம்செவி வாரணம் முன் குளகு அருந்தி,
கறங்கு வெள் அருவி ஒலின் துஞ்சும்
பிறங்கு இருஞ் சோலை நல் மலை நாடன்
மறந்தான், மறக்க, இனி; எல்லா! நமக்குச்
சிறந்தமை நாம் நற்கு அறிந்தனம், ஆயின்; அவன் திறம்,
கொல் யானைக் கோட்டால் வெதிர் நெல் குறுவாம் நாம்,
வள்ளை அகவுவம், வா' 'இகுளை! நாம்
வள்ளை அகவுவம், வா' .

காணிய வா–வாழி தோழி!–வரைத் தாழ்பு
வாள் நிறம் கொண்ட அருவித்தே, நம் அருளா
நாணிலி நாட்டு மலை.

ஆர்வுற்றார் நெஞ்சம் அழிய விடுவானோ–
ஓர்வு உற்று ஒரு திறம் ஒல்காத நேர்கோல்
அறம் புரி நெஞ்சத்தவன்?

தண் நறுங் கோங்கம் மலர்ந்த வரையெல்லாம்
பொன் அணி யானை போல் தோன்றுமே–நம் அருளாக்
கொன்னாளன் நாட்டு மலை.

கூரு நோய் ஏய்ப்ப விடுவானோ? தன் மலை
நீரினும் சாயல் உடையன், நயந்தோர்க்குத்
தேர் ஈயும் வண் கையவன்.

வரைமிசை மேல் தொடுத்த நெய்க் கண் இறா அல்
மழை நுழை திங்கள் போல் தோன்றும் இழை நெகிழ
எவ்வம் உறீஇயினான் குன்று.

எஞ்சாது, எல்லா! கொடுமை நுவலாதி
அஞ்சுவது அஞ்சா அறனிலி அல்லன், என்
நெஞ்சம் பிணிக் கொண்டவன்.
என்று யாம் பாட, மறை நின்று கேட்டனன்,
தாழ் இருங் கூந்தல் என் தோழியைக் கை கவியா,
சாயல் இன் மார்பன் சிறு புறம் சார்தர,
ஞாயிற்று முன்னர் இருள் போல மாய்ந்தது, என்
ஆய்இழை மேனிப் பசப்பு. *– கலி 42*

*வீரமுடைய பெரிய புலியினது பழைய பகைமையைக் கெடுத்த முறம் போல் செவிகளை உடைய யானை அது தனக்கு முன் உள்ள தழையுணவை உண்டு, ஒலிக்கும் அருவி நீரைக் குடித்து அந்த அருவி தாலாட்ட உறங்கும் கரிய சோலையை உடைய மலை நாடன் நாம் வருந்த நம்மை மறந்தான். இனி அவன் முற்றும் மறப்பானாக! தோழியே, ஆராய்ந்து பார்த்தால் நாம் நமக்குச் சிறந்ததை அறிவோம் இனி யானையின் கொம்பால் மூங்கில் நெல்லைக் குற்றுதற்கு நாம் அவன் செய்த கொடுமையின் இயல்பை வள்ளைப் பாட்டாகப் பாடுவோம்! வா! எனத் தோழி இயற்பழித்தாள் அதைக் கேட்ட தலைவி தான் இயற்பட மொழிய எண்ணி, தோழி! நீ கூறியவாறின்றி அவன் திறத்தை நான் வள்ளைப் பாட்டாகப் பாடுவோம் வா! என்றாள்.*

*தோழி வாழ்க! நமக்கு அருள் காட்டாதிருக்கும் கொடுமைக்கு நாணாமல் இருக்கின்றவனது நாட்டின் மலையாய் இருந்தும், அது பக்க மலையில் தாழ்ந்த ஒளி மிக்க அருவியைப் பெற்றுள்ளது இதற்குக் காரணத்தை நாம் ஆராய்வோம், வா! எனத் தோழி இயற்பழித்தாள்.*

*ஒரு பக்கத்தில் சாயாத நா நிற்கும் துலாக் கோலைப் போல் ஆராய்ந்து அறத்தையே விரும்பின் நெஞ்சத்தை யுடையவன் தன்னால் நுகரப்பட்டவர் நெஞ்சத்தை அழியு மாறு விடுவானோ? விடமாட்டான்! எனத் தலைவி கூறினாள்*

*நமக்கு அருளி இல்லறப் பயனை மேற்கொள்ளாது பயனற்றதை மேற் கொண்டவன் நாட்டு மலையாய் இருந்தும் குளிர்ந்த கோங்க மலர்ந்த பக்க மலையெல்லாம் பொன்னால் செய்யப்பட்ட பல ஆரம் அணிந்த யானைகள் போல் சிறந்து*

விளங்கும் இதன் காரணம் யாது? எனத் தோழி தலைவனின் இயல்பை இகழ்ந்து கூறினாள்

நம் தலைவன், தன் கொடையை விரும்பி வந்தவர்க்குத் தேரை அளிக்கும் வளவிய கையை உடையவன் அவன் தன் மலையில் உள்ள நீரை விட மென்மை உடையவன் ஆதலால் மணந்து கொள்ளாமல் நமக்கு மிக்க துன்பம் உண்டாகும் படி செய்வானோ? செய்யான்! மணந்த கொள்வான் என்று தலைவி கூறினாள்

நாம் அணிந்த அணி நெகிழ்ந்து விழும்படி நம்மை வருத்தியவனின் குன்றாக இருந்தும், பக்க மலைகளின் மேல் வைத்த தேனையுடைய தேனிறால் முகிலில் நுழையும் நில வினைப் போல் தோன்றும் இதற்குக் காரணம் என்ன?" என்று தோழி இயற்பழித்தாள்

இவ்வாறு தோழி இயற்பழித்ததற்குப் பொறுக்காத வளாய்த் தலைவி, "தோழி! ஓயாமல் அவன் கொடுமையைக் கூறாதே! என் நெஞ்சைத் தன் அன்பால் பிணித்தவன் மற்றவர் அஞ்சும் கொடிய செயலுக்கு அஞ்சாத அறமற்றவன் அல்லன்!" எனக் கூறினாள்

தலைவி தன் நெஞ்சுடனே முன் மொழிந்து பின்பு, யாங்கள் பாட மறைந்து நின்று கேட்டான் தலைவன். மென்மையால் இனிய மார்புடைய அவன் தாழ்ந்த கரிய கூந்தலை உடைய என் தோழிக்குத் தன் வருகையை எனக்குத் தெரிவிக்க வேண்டா எனக் கை கவித்துக் காட்டினான் காட்டி, பின் புறங்கழுத்தைச் சேர அவ்வளவில் என் மேனியில் பரவியிருந்த பசலை, கதிரவன் முன் இருள் போலக் கெட்டது என்று யாம் அங்ஙனம் பாடவும், அவன் சிறுபுறம் சாராத தால் மேனியின் பசலை மாயாது நின்றது என அவன் பிரிந்த போது கலங்கினாள்

## 465. தலைவி தோள்கள் பொலிவு பெற்றன

**வேங்கை தொலைத்த வெறி பொறி வாரணத்து**
**ஏந்து மருப்பின் இன வண்டு இமிர்பு ஊதும்**
**சாந்த மரத்தின் இயன்ற உலக்கையால்,**
**ஐவன வெண் நெல் அறை உரலுள் பெய்து, இருவாம்,**

ஐயனை ஏத்துவாம் போல, அணி பெற்ற
மை படு சென்னிப் பய மலை நாடனை,
தையலாய்! பாடவாம், நாம்.

தகையவர் கைச் செறித்த தாள்போல் காந்தள்
முகையின்மேல் தும்பி இருக்கும் பகை எனின்,
கூற்றம் வரினும் தொலையான, தன் நாட்டார்க்குத்
தோற்றலை நாணாதோன் குன்று.

வெருள்பு உடன் நோக்கி, வியல் அறை யூகம்,
இருள் தூங்கு இறு வரை ஊர்பு இழிபு ஆடும்
வருடைமான் குழவிய வள மலை நாடனைத்
தெருள் தெரியிழாய்! நீ ஒன்று பாடித்தை.

நுண் பொறி மான் செவி போல, வெதிர் முளைக்
கண் பொதி பாளை கழன்று உகும் பணிபிற்றே
மாறு கொண்டு ஆற்றார்எனினும், பிறர் குற்றம்
கூறுதல் தேற்றாதோன் குன்று.

புணர் நிலை வளகின் குளகு அமர்ந்து உண்ட
புணர் மருப்பி எழில் கொண்ட வரை புரை செலவின்
வயங்கு எழில் யானைப் பய மலை நாடனை—
மணம் நாறு கதுப்பினாய் மறுத்து ஒன்று பாடித்தை.

கடுங் கண் உழுவை ஆடி போல வாழைக்
கொடுங் காய் குலைதொறூஉம் தூங்கும் இடும்பையால்
இன்மை உரைத்தார்க்கு அது நிறைக்கல் ஆற்றாக்கால்,
தன் மெய் துறப்பான் மலை.
என ஆங்கு
கூடி அவர் திறம் பாட, என் தோழிக்கு
வாடிய மென் தோளும் வீங்கின—
ஆடு அமை வெற்பன் அளித்தக்கால் போன்றே. — *கலி 43*

*மங்கையே! நாம் இருவரும் ஐவனமாகிய வெண்ணெல்லைப் பாறை என்ற உரலில் இட்டுப், புலியைக் கொன்ற மதமுடைய புகர் பொருந்திய யானையினது கொம்பாலும், இனமான வண்டுகள் ஒலித்துத் தாது ஊதும் சந்தன மரத்தாலும் ஆகிய உலக்கைகளால் குற்றி, முருகனைப் புகழ்வது*

போல் அழகு பெற்ற முகில் உண்டாகின்ற தலைமைத் தன்மை யுடைய பயன் பொருந்திய மலை நாட்டை உடையவனைப் புகழ்ந்து பாடுவோம்

(இஃது ஆற்றாத தலைவியை விளையாட்டில் ஈடுபடுத்தி ஆற்றுவித்தற் பொருட்டுத் தோழி அழைத்தது)

பகை என்று கூறினன் இயமன் எதிர்வரினும் புறம் கொடாதவன்; தன்னை உறவு கொண்டவர்க்குத் தோற்றலை நாணாதவன் இவ் இயல்புடைய தலைவனின் மலை; அதில் தும்பி, மங்கையின் கையில் அணிந்த தான் கூட்டான 'நீலக் கடைச் செறி' போன்று, காந்தள் அரும்பின் மீது அஃது மலரும் காலத்தை எதிர் பார்த்திருக்கும்

ஆராய்ந்தெடுத்த அணிகலன் அணிந்தவளே! அகன்ற பாறைவில் உள்ள கருங் குரங்கைச் சேர, வெருண்டு பார்த்து இருள் பொதிந்த பக்க மலையில் ஏறி இறங்கி ஆடும் வருடை மானின் குட்டிகளை உடைய வளம் கொண்ட மலை நாடனைப் புகழ் விளங்க நீ ஒன்று பாடுவாய் என்றாள்.

செல்வம் முதலியவற்றால் மாறுபாடு கொண்டு அவற்றைப் பொறுக்காதிருப்பர் எனப் பலர் கூறினும் மற்றவர் குற்றத்தைக் கூற அறியாதவனின் மலை, நுட்பமான பொறியை யுடைய மானின் செவியைப் போன்று மூங்கிலின் முளையின் கணுவை மூடிய பாளை கழன்று கீழே விழுகின்ற பண்பை உடையது என்று தலைவி சொன்னாள்

தோழி கூறுகின்றாள்; பெண் யானையுடன் சேர்ந்துள்ள இயல்புடைய யானை, வளகு என்ற புதலின் தழையை மனம் பொருந்தித் தின்னும் இணையான கொம்புகள் அழகு கொண்டவை மலை நடந்தது போன்ற நடையினால் விளங்கும் அழகுடையது. இத்தகைய யானைகளை உடைய பயன்மிக்க மலை நாடனை நறுமணம் கமழும் கூந்தலை உடையவளே! முன் இயற்பட மொழிந்ததை மாற்றி இனி இயற்பழித்து ஒன்று படுவாயாக

அதைக் கேட்ட தலைவி சொல்லலானாள். வறுமையால் பொருள் இல்லாமையைக் கூறியவர்க்கு அப் பொருளை அவர்க்குக் கொடுக்க முடியாத போது தன் உடலைத் துறப்பவனது மலை அஞ்சாமையுடைய புலியினது அடியைப்

போல் வாழை மரத்தின் வளைவான காய் குலைகள் தோறும் தொங்கும்.

யானும் தலைவியும் கூடித் தலைவனின் திறத்தையும் முருகனின் திறத்தையும் பாடினோம் பாட, என்னுடைய தோழிக்கு அசையும் மூங்கிலையுடைய மலையை உடையவன் அருளிய சமயம் போல முன் அன்புகாட்டாததால் மெலிந்த மெல்லிய தோள்களும் சிறந்தன என்று தன்னுள் கூறுப வனைப் போல் சிறைப்புறமாய் உள்ள தலைவன் கேட்பக் கூறியது

### 466. தலைவியின் ஆரஞர் தீர்க்கும் மருந்தாகுக

கதிர் விரி கனை சுடர்க் கவின் கொண்ட நனஞ் சாரல்
எதிர் எதிர் ஓங்கிய மால் வரை அடுக்கத்து,
அதிர் இசை அருவி தன் அம் சினைமிசை வீழ,
முதிர் இணர் ஊழ் கொண்ட முழவுத்தாள் எரிவேங்கை
வரி நுதல் எழில் வேழம் பூ நீர் மேல் சொரிதர,
புரி நெகிழ் தாமரை மலர் அம் கண் விறு எய்தி,
திரு நயந்து இருந்தன்ன தேம் கமழ் விறல் வெற்ப!

தன் எவ்வம் கூரினும், நீ செய்த அருள் இன்மை
என்னையும் மறைத்தாள், என் தோழி அது கேட்டு,
நின்னை யான் பிறர் முன்னர்ப் பழி கூறல் தான் நாணி.

கூரும் நோய் சிறப்பவும் நீ செய்த அருள் இன்மை
சேரியும் மறைத்தாள், என் தோழி அது கேட்டாங்கு,
'ஒரும் நீ நிலையலை' எனக் கூறல் தான் நாணி.

நோய் அட வருந்தியும் நீ செய்த அருள் இன்மை
ஆயமும் மறைத்தாள், என் தோழி அது கேட்டு,
மாய நின் பண்பு இன்மை பிறர் கூறல் தான் நாணி.
என ஆங்கு
இனையன தீமை நினைவனள் காத்தாங்கு,
அனை அரும் பண்பினான், நின் தீமை காத்தவள்
அருந் துயர் ஆர் அஞர் தீர்க்கும்
மருந் ஆகிச் செல்கம், பெரும! நாம் விரைந்தே. — *கலி 44*

*எதிர் எதிராய் ஓங்கிய மலையின் அகன்ற சாரல், அதில் ஞாயிற்றின் விரியும் செறிந்த கதிர்கள் அழகைத் தன்னிடம் உடைய மாணிக்கப் பாறையில் நிற்கப்பட்டு முழங்கும் ஓசையை உடையனவாய் இரண்டு மலையினின்றும் இறங்கும் அருவி, வேங்கை மரத்தின் அழகிய கொம்புகளின் மீது வீழ்தலால் முதிர்ந்த கொத்துகள் அலரும் அதன் அடிப்பகுதி முழவு போன்றது தீயைப் போன்றது அது, புள்ளியை உடைய மத்தகத்தையும் அழகையும் உடைய யானைகள் பூவுடன் கூடிய நீரை மேலே சொரிய, எக் காலத்திலும் தாமரை மலரின் அழகையுடைய உள் இதழிலே வீறுடன் திருமகள் விரும்பி யிருத்தலைப் போல் விளங்கும். இத்தகைய தேன் மணக்கும் வெற்றியையுடைய வெற்பனே!*

*என் தோழி - தலைவி - தன் வருத்தம் மிகவும், நீ செய்த அருள் இல்லாமையைச் சேரியில் உள்ளவரும் அறிந்து கொள்ளாதபடி மறைத்தாள் அவள் இங்ஙனம் மறைத்தது நின் அருள் இல்லாமையைப் - பிரிவைக் - கேட்கும் அப் போதே நீ நிலையான தன்மை கொண்டவன் இல்லாதவன் என்று யான் மற்றவர்க்குச் சொல்லி விடுவேன் என்பதற்கு அவள் நாணம் கொண்டதால்*

*என் தோழி காமநோய் வருத்துதலால் வருந்தியும் நீ செய்த அருளற்ற செயலைத் தன் தோழியர்க்கும் தெரியாது மறைத்தாள் அவள் ஏன் இங்ஙனம் மறைத்தாள்? நினது அருளற்ற தன்மையைக் கேட்டு மாயத்தில் வல்ல உனது பண்பு இல்லாத இயல்பை மற்றவர் கூறுவரே எனத் தான் நாணியதால்*

*உன் தீமையால் உண்டாகிய அரிய துன்பத்தைப் பிறர் அறியாத வண்ணம் நினைத்து உனக்குப் பழி தோன்றாது காத்தவளின் அறிய துயரத்தைத் தீர்க்கும் மருந்தாய் நாம் விரைந்து செல்வோம்!*

## 467. மணமுயற்சியை மேற்கொண்டான் தலைவன்

**விடியல் வெங் கதிர் காயும் வேய் அகல் அறை,**
**கடி சுனை கவினிய காந்தள் அம் குலையினை,**
**அரு மணி அவிர் உத்தி அரவு நிர் உணல் செத்து,**

பெரு மலை மிளிர்ப்பன்ன காற்றுடைக் கனை பெயல்
உருமுக் கண்ணுறுதலின், உயர் குரல் ஒலி ஓடி,
நறு வீய நனஞ் சாரல் சிலம்பலின், கதுமென,
சிறுகுடி துயில் எழூஉம் சேண் உயர் விறல் வெற்ப!
கால் பொர நுடங்கல கறங்கு இசை அருவி நின்
மால் வரை மலி சுனை மலர் ஏய்க்கும் என்பதோ—
புல் ஆராப் புணர்ச்சியால் புலம்பிய என் தோழி
பல் இதழ் மலர் உண்கண் பசப்ப, நீ சிதைத்ததை.

புகர் முகக் களிறொடு புலி பொருகு உழக்கும் நின்
அகன் மலை அடுக்கத்த அமை ஏய்க்கும் என்பதோ—
கடை எனக் கமழும் நோய் கைம்மிக, என் தோழி
தடையின திரண்ட தோள் தகை வாட, சிதைத்ததை.

சுடர் உற உற நீண்ட கரும்பு இமிர் அடுக்கத்த
விடர் வரை எரி வேங்கிக இணர் ஏய்க்கும் என்பதோ—
யாமத்தும் துயிலவள் அலமரும் என் தோழி
காமரு நல் எழில் கவின் வாட, சிதைத்ததை?
என ஆங்கு
தன் தீமை பல கூறிக் கழறலின், என் தோழி
மறையில் தான் மருவுற மணந்த நட்பு அருகலான்,
பிறை புரை நுதல்! அவர்ப் பேணி நம்
உறை வரைந்தனர். அவர் உவக்கும் நாளே. — *கலி 45*

*விடியற்காலத்து ஞாயிற்றை மறைக்கும் மூங்கில் நெருங்கிச் சூழ்ந்த அகன்ற மாணிக்கப் பாறை அதில் அமைந்துள்ளது ஒரு சுனை. அதில் காந்தள் அழகு பெற வளர்ந்துள்ளது. அதன் அழகிய குலையைப் பெறுவதற்கு அரிய மணிகள் பொருந்திய பாம்பு நீரை உண்பதாய் எண்ணி, பெரிய மலைகளையும் கீழ் மேலாக்குவது போல் விளங்கும் காற்றையுடைய மழையில் இடி இடிக்கின்றது அதனால் ஓசை எழுகின்றது. அந்த ஓசை ஒலிக்கையில் சிறுகுடியில் உள்ளவர் உறக்கத்தினின்று விழித்து எழுவர் இத்தகைய மிக உயர்ந்த வெற்றியையுடைய வெற்பனே!*

*(காந்தளினைப் பாம்பு என எண்ணியதால் இடி இடித்தது)*

*புணர்ச்சி பெறாமையால் வருந்திய என் தோழியின் பல இதழ்களை உடைய மலர் போன்ற உண்கண்கள், பசலை*

*கொள்ளுமாறு நீ கெடுத்தாய். இவ்வாறு செய்ததன் காரணம் யாது? காற்று வீசவும் தன் பெருமையால் அசையாதபடி நின்று ஒலிக்கும் அருவிகளையுடைய நின் பெரிய மலையில் உள்ள சுனையில் மலர்ந்த மலரினைப் போன்றது என்ற பொறாமையோ, உனக்கு அருள் இல்லாததோ?*

*உயிர் நீக்கும் பருவம் என்று கூறுமாறு கலங்குதற்குக் காரணமான காம நோயைக் கடக்கும்படி என் தோழியின் பெரிய திரண்ட தோள்களை அழகு குலைந்திட நீ கெடுத்தாய் இதன் காரணம் யாது? புகரையுடைய முகம் பொருந்திய யானையுடன் புலி போரிட்டுத் துகைத்துத் திரியும் உன் அகன்ற மலையில் உள்ள மூங்கில் போல் விளங்குவன என்னும் பொறாமையோ? இல்லாத காரணமோ?*

*நள்ளிரவிலும் உறக்கம் கொள்ளாமல் உள்ளம் தடுமாறும் என் தோழியின் நல்ல எழுச்சி அழகு கெடும்படி நீ கெடுத்தாய். இதன் காரணம் யாது? ஞாயிற்றைத் தீண்டும்படி மிகயுயர்ந்த வண்டுகள் ஒலிக்கின்ற முழைஞ்சுகளை உடைய பக்க மலையிடத்துள்ள தீயைப் போன்ற வேங்கையின் மலர்க் கொத்தை ஒக்கும் என்ற பொறாமையோ, அருள் இல்லாததோ?*

*என்று தலைவரின் தீமைகள் பலவற்றையும கூறி இடித் துரைத்தலால், அவர் என் கூற்றை உண்மை எனத் தெளிந்தார் களவொழுக்கத்தில் நம்முடன் நெருங்குபவர் பின் வரைவு முயற்சியுடன் நெருங்கினார். பிறைநிலவினைப் போன்ற நெற்றியையுடையவளே! இக் களவொழுக்கத்தில்வேட்கை நீங்கி அவரைப் பேணி அவரிடத்தில் தங்குதலை அவர் விரும்பினார் விரும்பிய அந் நாளிலேயே நம் உறவினரும் அவர்க்கே தலைவியை மணம் செய்து தருவதாக முடிவு செய்தனர். இதுவே நமக்கு உண்டான நன்மை! எனத் தோழி யுரைத்தாள்*

## 468. ஆற்றாமை கூறி மணம் வேண்டல்

**வீயகம் புலம்ப், வேட்டம் போகிய**
**மாஅல் அம் சிறை மணி நிறத் தும்பி,**
**வாய் இழி கடாத்த வால் மருப்பு ஒருத்தலோடு**
**ஆய் பொறி உழுவை தாக்கிய பொழுதின்,**

'வேங்கை அம் சினை' என விறற் புலி முற்றியும்,
பூம் பொறி யானைப் புகர் முகம் குறுகியும்,
வலி மிகு வெகுளியான் வாள் உற்ற மன்னரை
நயன் நாடி நட்பு ஆர்க்கும் வினைவர் போல், மறிதரும்
அயம் இழி அருவிய அணி மலை நல் நாட!

ஏறு இரங்கு இருள் அடை இரவினில் பதம் பெறாஅன்,
மாறினென் எனக் வறி மனம் கொள்ளும், தான் என்ப—
கூடுதல் வேட்கையான், குறி பார்த்து, குரல் நொச்சிப்
பாடு ஓர்க்கும் செவியோடு பைதலேன் யான் ஆக.

அருஞ் செலவு ஆர் இடை அருளி வந்து, அளி பெறாஅன்,
வருந்தினென் எனப் பல வாய்விடூஉம், தான் என்ப—
நிலை உயர் கடவுட்குக் கடம் பூண்டு, தன்மாட்டுப்
பல சூழும் மனத்தோடு பைதலேன் யான் ஆக.

கனை பெயல் நடு நாள் யான் கண் மாற, குறி பெறாஅன்
புனையிழாய்! என் பழி நினக்கு உரைக்கும், தான் என்ப
துளி நசை வேட்கையான் மிசை பாடும் புள்ளின், தன்
அளி நசைஇ ஆர்வுற்ற அன்பினேன் யான்ஆக.
எனஆங்கு,
கலந்த நோய் கைம்மிக, கண் படா என்வயின்
புலந்தாயும் நீ ஆயின், பொய்யானே வெல்குவை –
இலங்கு தாழ் அருவியோடு அணி கொண்ட நின் மலைக்
சிலம்பு போல், கூறுவ கூறும்,
இலங்கு ஏர் எல் வளை, இவளுடை நோயே. – *கலி 46*

*தான் தேன் குடித்த மலரானது தனித்து நிற்க, விரும்பிய மலர் மீது போனது தும்பி அது பெருமையையும் அழகையும் சிறகையும் நீல மணி போன்ற நிறத்தையும் கொண்டது அத்தகைய வண்டு, வாயிலிருந்து பெருகி வழியும் மதத்தையும் வெண்மையான கொம்பையும் உடைய தலைமையுடைய யானையுடனே புலி வந்து போரிட்ட பொழுது, வேங்கை மரத்தின் அழகிய கொம்பு என்று எண்ணி ஆற்றல் வாய்ந்த புலியைச் சூழ்ந்தது வேங்கை மரத்தின் கொம்பு என்று புள்ளிகளை உடைய யானையின் முகத்தை அணுகியது. வலி மிகும் சினத்தால் வாட் போரைச் செய்யத் தொடங்கிய*

அரசர்களை நட்பாக்கும் வழியினை ஆராய்ந்து நட்புறவு அமைதி செய்பவரைப் போல் அவ் வண்டு பலமுறையும் திரியும் இத்தகைய இயல்பு கொண்ட, பள்ளத்தில் பாயும் அருவிகளையுடைய திரண்ட மலைகள் பொருந்திய நாடனே! எனத் தோழி கூறினாள்

"ஐய யான் உனக்குப் பகற்குறி மறுத்து உன் வரவை இரவுக்குறியில் நொச்சிப்பூ விழும் நுண்ணிய ஒலியையும் கேட்குமளவு நான் விழிப்புடன் எதிர்பார்த்திருந்தேன் நீ அல்ல குறிப்பிட்டுப் போனமை உணராமல், தலைவி யானே இரவுக்குறியும் மறுத்து விட்டதாவும், அதனால்தான் நீ இரவுக்குறியில் வரவில்லை என்றும் நினைத்து வருந்து கின்றாள்" என்று கூறினாள்

மணந்து கொண்டால் உயர்வதற்குக் காரணமான கடவுளுக்குரிய கடமைகளை யெல்லாம் மேற்கொண்டு அவளிடத்தே நிகழ்கின்ற வருத்தத்தைப் போக்கப் பலவற்றை யும் ஆராய்கின்ற எண்ணத்துடன் நான் இருக்க, தலைவன் அரிய செலவையுடைய வழியில் நம்மை அருள வந்து நம் அன்பைப் பெறாது வருந்தினன் எனப் பல சொற்களையும் தலைவி கூறுவாள்.

மழைத்துளியை உண்ணும் விருப்பத்துடன் வானத்தி லிருந்து பாடும் வானம்பாடி என்ற பறவை போல நீ செய்யும் அன்பைப் பெறுதலால் நிறைந்த அன்புடையளாய் இருந்த, மிக்க மழை பெய்யும் நள்ளிரவில் யான் நினக்குரிய குறியை மாற்ற நீ குறியிடத்தில் தலைவியைக் கூடப் பெறவில்லை வறிதே திரும்பினாய் என்று என் குற்றத்தை உனக்குத் தலைவி கூறுவாள்

இவளுக்கு உண்டான நோய் இவளைத் துன்புறுத்த அது கண்டு கண் உறங்காதவள் யான் என்னிடத்தில் நீ வெறுப்புக் கொண்டவன் போல், விளங்கும் தாழ்ந்த அருவிகளால் அழகு பெறும் நின் மலையின் பக்க மலை ஒருவர் கூறுவதையே கூறுவதைப் போல் விளங்கும் ஒளியுடைய வளையலை அணிந்த இவள் நோயினை இவள் ஆற்றும்படி ஒரு பொய்ம் மொழி கூறியாயினும் ஆற்றுவாய் இவளுக்கு நீ சொன்னதே சிறந்த சொல்லாகும்

*தோழி "தலைவியைக் கடாததற்குக் காரணம் தோழியே" என்று பொய் கூறித் தலைவியின் துன்பத்தை ஆற்றுமாறு தலைவனிடம் கூறினாள்.*

## 469. பகற்குறியில் வரச் செய்வோம்

ஒன்று இரப்பான் போல் எளிவந்தும் சொல்லும், உலகம்
புரப்பான் போல்வது ஓர் மதுகையும் உடையன்;
வல்லாரை வழிபட்டு ஒன்று அறிந்தான் போல்
நல்லார்கண் தோன்றும் அடக்கமும் உடையன்;
இல்லோர் புன்கண் ஈகையின் தணிக்க
வல்லான் போல்வது ஓர் வன்மையும் உடையன்;
அன்னான் ஒருவன் தன் ஆண்தகை விட்டு, என்னைச்
சொல்லும் சொல், கேட்டீ—சுடரிழாய் பல் மாணும்:

'நின் இன்றி அமையலேன் யான்' என்னும் அவன் ஆயின்
அன்னான்சொல் நம்புண்டல் யார்க்கும் இங்கு அரிதுஆயின்,
என் உற்ற பிறர்க்கும் ஆங்கு உளகொல்லோ நறுநுதால்!

'அறியான் நீ; வருந்துவல் யான்' என்னும் அவன்ஆயின்,
தமியரே துணிகிற்றல் பெண்டிர்க்கும் அரிதுஆயின்,
அளியரோ, எம் போல ஈங்கு இவன் வலைப்பட்டார்?

'வாழலேன், யான்' என்னும் 'நீ நீப்பின்' அவன்ஆயின்,

'ஏழையர்' எனப் பலர் கூறும் சொல் பழிஆயின்
சூழுங்கால், நினைப்பது ஒன்று அறிகலேன், வருந்துவல்
சூழுங்கால், நறுநுதால்! நம்முளே சூழ்குவம்.
'அவனை,
நாண் அட பெயர்த்தல் நமக்கும் ஆங்கு ஒல்லாது;
'பேணினர்' எனப்படுதல் பெண்மையும் அன்று அவன்;
வௌவினன் முயங்கும் மாத்திரம் வா' எனக்
கூறுவென் போலக் காட்டி,
மற்று அவன் மேஎவழி மேவாய், நெஞ்சே! — *கலி 47*

*விளங்கும் அணிமணி அணிந்தவளே! ஒரு தலைவன் என்னிடம் ஒன்றை இரந்து நிற்பவனைப் போல் எளிமையை மேற்கொண்டவனாய்ச் சில சொற்களைச் சொல்வான்.*

அங்ஙனம் அவன் இரந்து நிற்பினும் உலகத்தையெல்லாம் காப்பவனைப் போல் வலிமையையும் உடையவன். மெய்ப் பொருள் நூல் வல்லவரை வழிபட்டு நின்று அப் பொருளை அறிந்தவனைப் போல் நன் மக்களிடம் என்றும் அடக்கமான குணத்தையும் உடையவன் வறியவரின் வறுமைத் துன்பத்தைத் தன் கொடைத்தன்மையால் போக்க வல்லவனைப் போல் விளங்கும் வண்மையும் உடையவன் அத்தகைய முரண்பட்ட தன்மையுடைய அவன் தனக்குரிய ஆளுமையைக் கைவிட்டு என்னைப் பார்த்துச் சொல்லும் மாட்சிமைப்படும் சொல்லைக் கேட்பாயாக:

நறுமணமிக்க நெற்றியை உடையவளே! அவன் உன்னை அல்லாது உயிர் வாழமாட்டேன் எனக் கூறுகின்றான். அங்ஙனம் இறந்துபடும் தன்மையை உடையவனின் சொல்லை நம்புதல் யார்க்கும் அரிது அங்ஙனமாயின் என்னைச் சேர்ந்த வருத்தங்கள் பிறர்க்கும் உனக்கும் உளவோ? இல்லையன்றே? அவன் யான் வருந்துகின்றேன் நீ அதனை அறியாயோ என்று கூறி நிற்கின்றான் அங்ஙனம் நிற்பானாயின் தமக்கு உயிர் போல் சிறந்த தோழியருடன் ஆய்ந்து துணியாமல் தனியாய் இருந்தே முடிவு செய்தல் அரிதாய் உள்ளது. அங்ஙனமாயின் இந் நிலைமையில் அவன் வலையில் அகப்பட்டவர் சிலர் எம்மைப்போல் இரங்கத்தக்கவராய் இருப்பாரோ இரங்கா திருப்பர் அன்றோ!

அவன் நீ இரங்காது போனால் யான் உயிர் வாழ மாட்டேன் என்கின்றான் நல்ல குடிப் பிறந்த மகளிரை ஏழையர் என்பது ஆராய்ந்து அறிய வல்லவர் அல்லர் என்று எண்ணியேயாகும் அச் சொல் எனக்குப் பொருந்தும் அப் பழி பேரறிவுடைய உனக்குப் பொருந்தாது ஆகவே நாம் இருவரும் அவனைப் பற்றி ஆராய்ந்து ஒன்றைத் துணிவோம்

நம்மை நாணம் வருத்துவதால் அவனைத் திரும்ப அனுப்புதல் நமக்குப் பொருந்தாது இறந்துபடுபவனைப் பேணினார் என்று நன் மக்கள் புகழ்ந்து கூறுதல் நின் கருத்தின்படி பெண் தன்னையும் ஆகாததாய் உள்ளது இங்ஙனமாகவும் அவன் உன்னைத் தழுவும் அளவுக்குத் துணிவு கொண்டுவிட்டான் அதனை நீயும் ஏற்பதில்லை

*இதற்கு நான் கூறுவது ஒன்று இல்லை என்று தோழி தலைவிக்குச் சொன்னாள் பின்பு அவள் தன் நெஞ்சுடன் குறியிடத்து வா என்று கூறுபவளைப் போல் தலைவனுக்கு ஒரு பொய்க் குறியைக் காட்டி அவன் சென்ற வழியிலேயே நெஞ்சே நீ செல்வாயாக, என்று சொன்னாள், தலைவி*

## 470. மணந்து கொள்ளல் வேண்டும்

ஆம் இழி அணி மலை அலர் வேங்கைத் தகை போல,
தே மூசு நனை கவுள், திசை காவல் கொளற்கு ஒத்த,
வாய் நில்லா வலி முன்பின், வண்டு ஊது புகர் முகப்
படு மழை அடுக்கத்த, மா விசும்பு ஓங்கிய
கடி மரத் துருத்திய, கமழ் கடாம் திகழ்தரும்
பெருங் களிற்றினத்தொடு, வீங்கு எருத்து எறுழ் முன்பின்
இரும் புலி மயக்குற்ற இகல் மலை நல் வாட!

வீழ்பெயற் கங்குலின் விளி ஓர்த்த ஒடுக்கத்தால்,
வாழும் நாள் சிறந்தவள் வருந்து தோள் தவறு உண்டோ—
தாழ் செறி கடங் காப்பின் தாய் முன்னர், நின் சாரல்
ஊழ் உறு கோடல் போல, எல் வளை உகுபவால்?

இனைஇருள் இது என் ஏங்கி, நின் வரல் நசைஇ
நினைதுயர் உழப்பவள் பாடு இல் கண் பழி உண்டோ—
'இனையள்' என்று எடுத்து அரற்றும்
அயல் முன்னர், நின்சுனைக்
கனை பெயல் நீலம் போல், கண் பனி கலுழ்பவால்?

பல் நாளும் படர் அட, பசலையால் உணப்பட்டாள்,
பொன் உரை மணி அன்ன, மாமைக்கண் பழி உண்டோ—
இன் நுரை செதும்பு அரற்றும் செவ்வியுள் நின் சோலை—
மின் உகு தளிர் அன்ன, மெலிவு வந்து உரைப்பதால்?
என ஆங்கு—
பின் ஈதல் வேண்டும், நீ பிரிந்தோள் நட்பு என் நீவிப்
பூங் கண் படுதலும் அஞ்சுவல்; தாங்கிய
அருந் துயர் அவலம் தூக்கின்,
மருங்கு அறிவாரா மரையினும் பெரிதே. *– கலி 48*

யானைக் கூட்டம் எட்டுத் திசைகளையும் காத்தற் தொழிலுக்குப் பொருந்தியவை; பகைத்த உயிர்கள் எதிர்த்து நில்லாத வலியின; விளக்கத்தைத் தரும் மணம் கமழும் மதத்தால் நனைந்த கன்னங்களை உடையன; அருவி விழும் அழகையுடைய மலையிடத்தில் வண்டுக் கூட்டம் மொய்க்கும் மலர்களையுடைய வேங்கையின் அழகைப் போல் வண்டுகள் மொய்க்கும் புள்ளிகளையுடைய முகம் கொண்டன; சொரியும் மழையையுடைய பக்க மலையிடத்தன; பெருமை கொண்ட வானில் வளர்ந்த மரங்களை யுடைய ஆற்றிடைக் குறையில் உள்ளன. இத்தகைய அவ் யானைக் கூட்டத்துடன் பெருத்த கழுத்தையும் மிக்க வன்மையையுமுடைய பெரிய புலி போர் செய்யும். இவ் வியல்பு கொண்ட மலையையுடைய நல்ல நாடனே!

தாழை இட்டு அடைத்ததைப் போன்று பொருந்திய காவலை உடைய தாயின் முன்பு, உன் மலைச்சாரலில் காந்தள் மலர் உகுமாறு போல் ஒலியுடைய வளையல் கழன்று விழுவன ஆயின. இவ்வாறு ஆவதற்கு இடைவிடாது மழை பெய்யும் இரவில் நீ செய்யும் குறியால் அழைக்கும் அழைப்பைச் செவியே கருவியாய்க் கேட்டதனால் ஏற்பட்ட ஒடுக்கத்தால் உயிர் வாழும் நாளை உடையவள் வருந்தும் தோளிடத்து அவை உனக்குச் செய்த தவறும் உண்டோ, இல்லையே.

இப்படியே, ஒரு களவொழுக்கம் உடையவள் என்று கூறுகின்ற அயலவர் முன்பு, நின் சுனையில் மிக்க மழையை ஏற்ற நீலமலர் போல் கண்கள் நீரைப் பெய்கின்றன. இப்படி யாவதற்கு, அது யாம் வருந்துவதற்குக் காரணமான இருள் என ஏங்கி, நீ வரும் தொழிலை விரும்பி எண்ணியதால் உண்டான வருத்தத்தால் வருந்துபவளின் உறங்காத கண் களில் அவை உனக்குச் செய்த குற்றம் உண்டோ, இல்லையே.

நுரை பொருந்திய இனிய நீர் வந்து ஆரவாரிக்கும். இளவேனிற் காலத்தில், உன் சோலையில் உள்ள ஒளி கெட்ட தளிரைப் போன்ற நிறக்கேடு ஏற்பட்டுப் பலர்க்கும் கூறுவதாக உள்ளது. இப்படியாவதற்குப் பல நாள்களும் நினைவு வருத்துகையால் பசலையால் படரப்பட்டவளது பொன் உரைத்த ஒரு நீலமணி இருக்குமாயின் அதைப் போன்ற

*பசலையானது மாமை நிறத்தில் அது செய்த பழியுண்டோ? இல்லையே?*

*அவள் அப்படியாயினாள். ஆதலின் அவள் பூப் போன்ற கண் மூடாமையை நீங்கி உறங்குதலையும் அஞ்சுகின்றேன் அந்த உறக்கத்தில் எண்ணி வருந்தத்தக்க கனவால் பின்பு ஏற்படும் வருத்தம் அவ் அரிய வருத்தத்தால் உண்டான கேட்டை ஆராய்ந்து பார்த்தால் அஃது எல்லை காண முடியாத மலையை விடவும் பெரிது இனி மேல் இத்தகைய வருத்தம் அவள் அடையாத வண்ணம் நீ விரும்பியவளுடன் கொண்ட உறவு பின்னுதலை நீ அளிக்க வேண்டும் மணந்து கொள்ள வேண்டும் என்றாள் தோழி.*

## 471. இரவில் வராதே பகலில் வா

கொடுவரி தாக்கி வென்ற வருத்தமொடு
நெடு வரை மருங்கின் துஞ்சும் யானை,
நனவில் தான் செய்தத மனத்தது ஆகலின்,
கனவில் கண்டு, கதுவென வெரீஇ,
புதுவதாக மலர்ந்த வேங்கையை
அது என உணர்ந்து, அதன் அணி நலம் முருக்கி,
பேணா முன்பின் தன் சினம் தணிந்து, அம் மரம்
காணும் பொழுதின் நோக்கல் செல்லாது
நாணி இறைஞ்சும் நல் மலை நல் நாட,

போது எழில் மலர் உண்கண் இவள்மாட்டு நீ இன்ன
காதலை என்பதோ இனிது மற்று இன்னாதே,
மின் ஒரும் கண் ஆக, இடி என்னாய், பெயல் என்னாய்,
இன்னது ஓர் ஆர் இடை, ஈங்கு நீ வருவதை.

இன்புற அளித்தனை இவள்மாட்டு நீ இன்ன
அன்பினை என்பதோ இனிது மற்று இன்னாதே
மணம் கமழ் மார்பினை, மஞ்சு இவர் அடுக்கம் போழ்ந்து,
அணங்குடை ஆர் இடை, ஈங்கு நீ வருவதை.
இருள் உறழ் இருங் கூந்தல் இவள் மாட்டு நீ இன்ன
அருளினை என்பதோ இனிது மற்று இன்னாதே,
ஒளிறு வேல் வலன் ஏந்தி, 'ஒருவன் யான்' என்னாது,
களிறு இயங்கு ஆர் இடை, ஈங்கு நீ வருவதை.

அதனால்
இரவின் வாரல், ஐய! விரவு வீ
அகல் அறை வரிக்கும் சாரல்,
பகலும் பெறுவை, இவள் தட மென் தோளே. — *கலி 49*

*வளைந்த வரியையுடைய புலி வந்து போர் செய்தலால் அதனை வென்ற வருத்தத்துடன் பெரிய மலையில் உறங்கும் யானை அவ் யானை நனவில் தான் போரிட்டு வென்றது மனத்தில் இருத்தலால் அதைக் கனவில் கண்டு அஞ்சி எழும் பின் புதிதாய் மலர்ந்து நின்ற வேங்கை மரத்தைப் புலி என்று நினைந்து அந்த மரத்தின் அழகிய நலத்தைக் கெடுக்கும். சினந் தணியும் அம் மரத்தைக் காணும்போது அதைப் பார்க்கவும் செய்யாமல் நாணித் தலை கவிழ்ந்து போகும். இத்தகைய இயல்பு வாய்த்த நல்ல மலை நாடனே!*

*மலரும் பருவம் கொண்ட அழகிய மலர் போன்ற கண்களையுடைய இத் தலைவியிடம் நீ இன்றியமையாத காதல் உடையவனாக உள்ளாய் என்று கூறும் சொல்லோ இனியது இது போக வரியை ஆராய்ந்து பார்க்கும் கண், முன்னாக இடி இடிக்கின்றது எனக் கருதாமல், மழை பொழிகின்றது என்று கருதாமல், இத்தகைய துன்பம் மிக்க அரிய வழியில் இவ் இடத்தில் நீ வரும் நிலைமை எமக்குத் துன்பத்தைத் தருவதாக உள்ளது*

*இன்பம் அடையும்படி அன்பு காட்டுவதால் இவளிடம் நீ மிக்க காதல் உடையவனாய் உள்ளாய் என்று கூறும் சொல்லோ இனியது அது போக, மணம் கமழ்கின்ற மாலையை உடையவனாய் முகில் தவழ்கின்ற பக்க மலையை ஊடறுத்துச் சூரர மகளிர் உள்ள அரிய வழியில் இவ் இடத்தில் நீ வரும் நிலைமை எமக்குத் துன்பத்தைத் தருகின்றது.*

*இருளுடன் மாறுபடும் கரிய கூந்தலையுடைய எம் தலைவியான இவளிடம் நீ சிறந்த அருளை உடையவனாய் உள்ளாய் எனச் சொல்லும் சொல்லோ இனிது அது போக வேலைக் கையில் கொண்டு தான் ஒருவன் துணையில்லாமல் நான் ஒருவனே செல்கின்றேன் என்று கருதாமல் யானை திரிகின்ற அரிய வழியிலே, இங்கு நீ வருகின்றமை எமக்குத் துன்பத்தைத் தருகிறது*

*ஐய, இதனால் எங்கட்குத் துன்பம் வருதலால் இனி இரவுக் காலத்தில் வரவேண்டா. இவளது பெருமையுடைய மென்மையான தோள்களைப் பல பூக்கள் பொருந்திய அகன்ற பாறையிலே கோலம் செய்யும் மலைச்சாரலிலே பகற் காலத்தும் பெறுவாய் என்றாள் தோழி*

## 472. காதலியை நின்னிடம் சேர்ப்பேன்

வாங்குகோல் நெல்லொடு வாங்கி, வருவைகல்,
மூங்கில் மிசைந்த முழந்தாள் இரும் பிடி,
தூங்கு இலை வாழை நளி புக்கு, ஞாங்கர்
வருடை மட மறி ஊர்வு இடைத் துஞ்சும்
இருள் தூங்கு சோலை, இலங்குநீர், வெற்ப!

அரவின் பொறியும் அணங்கும் புணர்ந்த
உரவு வில்மேல் அசைத்த கையை, ஓராங்கு
நிரைவளை முன்கை என் தோழியை நோக்கி,
படி கிளி பாயும் பசுங் குரல் ஏனல்
கடிதல் மறப்பித்தாய் ஆயின், இனி நீ
நெடிது உள்ளது ஓம்புதல் வேண்டும்; இவளே
பல் கோட் பலவின் பயிர்ப்பு உறு தீம் கனி
அல்கு அறைக் கொண்டு ஊண் அமலைச் சிறுகுடி
நல் கூர்ந்தார் செல்வ மகள்.

நீயே, வளியின் இகல் மிகும் தேரும், களிறும்
தளியின் சிறந்தனை வந்த புலவர்க்கு
அளியொடு கைதூவலை.
அதனால்
கடு மா கடவுறூஉம் கோல போல், எனைத்தும்
கொடுமை இலையாவது அறிந்தும், அடுப்பல்—
வழை வளர் சாரல் வருடை நன் மான்
குழவி வளர்ப்பவர் போல, பாராட்டி,
உழையின் பிரியின், பிரியும்
இழைஅணி அல்குல் என் தோழியது கவினே. — *கலி 50*

*தானே வளையும் மூங்கில் கோலை நெல்லுடன் வளைத்துத் தின்னும் முழந்தாளையுடையது கரிய பெண்*

யானை. அஃது அம் மலையில் செறிந்த இலையினைக் கொண்ட வாழை மிக்க இடத்தில் புகுந்து அங்கு வருடை மானின் குட்டி பரந்த திரியும் இடத்தில் கதிரவன் தோன்றும் விடியற் காலத்தில் உறங்கும் இவ் இயல்பு வாய்ந்த இருள் மிக்க சோலையையும் விளங்கும் நீரையும் உடைய மலையை உடையவனே!

பாம்பின் பொறி போல் விளங்கம் பொறிகளும், பகைவரை வருத்தும் வலிமை உடைய வில்லின் மீது வைத்த கையை உடையவனாய் நின்று, வரிசையான வளையல் அணிந்த கையையுடைய என் தலைவியைக் காமக் குறிப்பு அவளுக்கு உண்டாகும்படிப் பார்த்தாய் தினையில் வந்து பொருந்தும் கிளிகள் பரவும் பசுமையான கதிரையுடைய தினைப்புனத்தில் கிளியை ஓட்டுதலை மறக்கச் செய்தாய்; உன் வயத்தவள் ஆக்கினாய். அங்ஙனமாயின் இனி நீ இடைவெளி இன்றி நினைப்பதை இவள் விரும்புவாள். இவள் பல குலைகளையுடைய பலாவின் பிசின் உள்ள இடத்தை உடைய இனிய பழம் விழுந்து கிடக்கும் பாறையில் எடுத்து உண்ணும் உணவையும், பெருஞ் சோற்றுத் திரளையும் உடையது சிறு குடி இச் சிறுகுடியில் இருக்கும் பிள்ளையால் வறுமை அடைந்தாரின் செல்வத்தையுடைய மகள் இவள். ஆதலால் உன்னைப் பிரிந்து வருந்துவதை ஆற்றாதவள்

நீ காற்றை விட விரைவாகச் செல்லும் தொழிலில் வல்ல தேரையும், ஆண் யானையையும் உன்னிடம் வந்த புலவர்க்குக் கையொழியாமல் கொடுப்பதால் மழையைவிட அருள் மிக்காய் ஆதலால் நானும் சுரபுன்னை வளர்ந்த மலைச் சாரலில் திரியும் வருடை மானின் நல்ல குட்டியை வளர்ப்பவரைப் போல் நீங்காமல் பாராட்டி அவளிடமிருந்து பிரிவாய் அதனால் மேகலை அணிந்த அல்குலையுடைய என் தோழியது அழகும் நீங்கும் அதற்காகக் கடிதாகிய குதிரை மேலும் கடிதாகச் செலுத்தும் தாற்றுக்கோல் போல் சிறிதும் கொடியவனாய் இல்லாமையை அறிந்திருந்தும் அவளை உன்னிடத்தே சேர்ப்பேன் என்றாள் தோழி

## 473. கள்வன் மகன் நகைக்கூட்டம்

சுடர்த்தொடீஇ! கேளாய், தெருவில் நாம் ஆடும்
மணற் சிற்றில் காலின் சிதையா, அடைச்சிய
கோதை பரிந்து, வரிப் பந்த கொண்டு ஓடி,
நோ தக்க செய்யும் சிறு புட்டி மேல் ஓர் நாள்,
அன்னையும் யானும் இருந்தேமா, 'இல்லிரே
உண்ணு நீர் வேட்டேன்' என வந்தாற்கு, அன்னை,
அடர் பொற் சிரகத்தால் வாக்கி, சுடரிழாய்
உண்ணு நீர் ஊட்டி வா' என்றாள், என யானும்
தன்னை அறியாது சென்றேன்; மற்று என்னை
வளை முன்கை பற்றி நலிய, தெருமந்திட்டு,
'அன்னாய்! இவன் ஒருவன் செய்தது காண்' என்றேனோ,
அன்னை அலறிப் படர்தர, தன்னை யான்
உண்ணு நீர் விக்கினான் என்றேனோ, அன்னையிம்
தன்னைப் புறம்பு அழித்து நீவ, மற்று என்னைக்
கடைக்கண்ணால் கொல்வான் போல் நோக்கி
நகைக்கூட்டம்
செய்தான் அக் கள்வன் மகன். — *கலி 51*

*ஒளியுடைய வளையலை அணிந்த தோழியே! நான் சொல்வதைக் கேட்பாயாக: தெருவில் நாம் இளமையில் மணலால் செய்த சிறிய வீட்டைத் தன் காலால் கலைத்தும் நாம் கூந்தலில் சூடிய மலர் மாலையை அறுத்தும், வரியை உடைய பந்தை எடுத்துக் கொண்டு ஓடியும், நாம் வருந்தத் தக்க செயல்களைச் செய்யும் சிறியவனாக கட்டுக்கடங் காதவன், வளர்ந்த பின் முன் ஒரு நாளில் தாயும் நானும் வீட்டில் இருந்தபோது வந்தான் "வீட்டில் இருப்பவரே, உண்ணும் நீரை உண்ண விரும்பினேன்" என்றான் அவ்வாறு வந்தவனுக்கு தாய், "விளங்கும் அணியை அணிந்தவளே! உண்ணீரைத் தகட்டுப் பொன்னால் ஆன கலத்தில் எடுத்துக் கொண்டு போய் அவனை உண்ணச் செய்து விட்டு வா!" என்றனள் அங்ஙனம் அவள் சொன்னதால் வந்தவன் சிறு பட்டியாய் இருக்கும் தன்மையை அறியாமல் போனேன். சென்றபோது அவன் என் வளையல் அணிந்த முன் கையைப்*

*பிடித்து வருத்தினான் அதனால் நான் வருந்தி, "தாயே! இவன் செய்த ஒரு செயலைக் காண்பாய் நீ!" என்று உரைத்தேன் தாயும் அலறிக்கொண்டு ஓடி வந்தாள் அவன் செய்த செயலை மறைத்து யான் "இவன் நீர் குடிக்கும்போது விக்கல் எடுக்க அதனால் வருந்தினான் என்றேன். நான் உரைத்ததைக் கேட்டுத் தாயும் அவனது முதுகைப் பல முறை தடவினாள். அப்போது அக் கள்வன் மகன் தன் கடைக் கண்ணால் என்னைக் கொல்பவன் போல் பார்த்துத் தன் மகிழ்ச்சி தரும் புன்முறுவலால் என் உள்ளத்தில் புகுந்தான்.*

## 474. இவள் வதுவை நான் ஒடுக்கம் காண்பேன்

**முறம் செவி மறைப் பாய்பு முரண் செய்த புலி செற்று,
மறம் தலைக்கொண்ட நூற்றுவர் தலைவனைக்
குறங்கு அறுத்திடுவான் போல், கூர் நுதி மடுத்து, அதன்
நிறம் சாடி முரண் தீர்ந்த நீள் மருப்பு எழில் யானை,
மல்லரை மறம் சாய்த்த மால் போல், தன் கிளை நாப்பண்,
கல் உயர் நனஞ் சாரல், கலந்து இயலும் நாட! கேள்:**

**தாமரைக் கண்ணியே. தண் நறுஞ் சாந்தினை,
நேர் இதழ்க் கோதையாள் செய்குறி நீ வரின்,
மணம் கமழ் நாற்றத்த மலை நின்று பலி பெறூஉம்
அணங்கு என அஞ்சுவர், சிறுகுடியோரே.**

**ஈர்ந் தண் ஆடையை எல்லி மாலையை,
சோர்ந்து வீழ் கதுப்பினாள் செய்குறி நீ வரின்,
ஒளி திகழ் ஞெகிழியர், கவணையர், வில்லர்,
'களிறு' என ஆர்ப்பவர் ஏனல் காவலரே.**

**ஆர மார்பினை அண்ணலை, அளியை,
ஐது அகல் அல்குலாள் செய்குறி நீ வரின்
'கறி வளர் சிலம்பில் வழங்கல் ஆனாப்
புலி என்று ஓர்க்கும், இக் கலி கேழ் ஊரே.
என ஆங்கு
விலங்கு ஓரார், மெய் ஓர்ப்பின், இவள் வாழாள்;**

**இவள் அன்றி
புலம் புகழ் ஒருவ! யானும் வாழேன்:**

அதனால் பொதி அவிழ் வைகறை வந்து, நீ குறை கூறி,
வதுவை அயர்தல் வேண்டுவல்; ஆங்கு,
புதுவை போலும் நின் வரவும், அவள்
வதுவை நாண் ஒடுக்கமும், காண்குவல், யானே. – *கலி 52*

*யானையின் முறத்தைப் போன்ற செவியை மறைவிட மாய்க் கொண்டு பாய்ந்து மாறுபாடு செய்த புலியைச் சினந்து, மறம் பொருந்திய நூற்றுவர் தலைவனான துரி யோதனனைத் தொடையில் உள்ள உயிரைப் போக்குகின்ற வீமனைப் போன்று, தன் நீண்ட கொம்பின் கூர்மையான முனையினால் குத்தி, புலியின் மார்பைப் பிளந்து பகைமை நீங்கிய யானை, அது மல்லரின் மறத்தை அழித்த திருமால் போல் கல் உயர்ந்த அகன்ற சாரலில் தன் சுற்றத்துடனே திரியும். இவ் இயல்புடைய நாடனே! யான் கூறுவதைக் கேட்பாயாக:*

*தாமரை மலர் அணிந்தவனாய்க், குளிர்ந்த நறுமணச் சந்தனத்தைப் பூசியவனாய், ஒன்றை ஒன்று ஒத்த இதழ்களால் கட்டிய மாலையை உடைய தலைவி கூறிய குறியிடத்தில் நீ வருவாயானால், மணம் கமழ்கின்ற நாற்றத்தையுடைய மலை யில் நின்று பலியைப் பெற்றுக் கொள்ளும் அணங்குகளில் ஓர் அணங்கு என்று எண்ணிச் சிறு குடியில் உள்ளவர் அச்சம் கொள்வர்*

*மழைத் துளியால் நனைந்த ஆடையை உடையவனாய் நீ இரவில் புணர்ச்சிக்குரியவற்றை அணியும் இயல்பையுடை யனாய், நீ வரைந்து கொள்வதை விட்டு, தோழியர் விரும்பும் மயிரையுடையவள் செய்த குறியில் வருவாயானால், நீ செய்யும் குறிகளால், ஒளி விளங்கும் குறைக் கொள்ளியையும் கவணையும் வில்லையும் உயைவராய்க் களிறு வந்ததென்று எண்ணித் தினைப்புனத்தைக் காப்பவர் ஆரவாரம் செய்வர்.*

*மாலை அணிந்த மார்பை உடையவனாய்த் தலைமைத் தன்மை பெற்றவனாய், அருள் கொண்டவனாய், செய்த குறி யில் நீ வந்தால் உன்னைக் கண்டு விலங்கு முதலியவை அஞ்சி ஓடும் அவ்வாறு ஓடும் ஓசையால், மிளகுக் கொடி வளர்ந்த மலையிலே உலவும் புலி என்று இந்தச் செருக்குக் கொண்ட ஊர் நினைக்கும்*

*யாவரும் புகழும் அறிவை உற்ற ஒப்பில்லாதவனே! அங்ஙனம் இவ் ஊரார் வேறாக உணராமல், உண்மையாக உணர்வாராயின், கள வொழுக்கத்தை அவர் அறிந்தார் என்று இவள் உயிர் வாழ மாட்டாள்! யானும் உயிர் வாழ மாட்டேன்! ஆதலால் நின் காரியத்தைப் பலர்க்குச் சொல்லி அவர் உடன்பட்ட பின்பு மலர்கள் பூக்கின்ற விடியற் காலத்தில் வந்து மணந்து கொள்பவரை விரும்புகின்றேன் அதற்குக் காரணம் யாது என்றால், அப்போது புதியவன் போல் நீ வரும் வருகையையும், இவள் மனத்தில் தோன்றிய வெட்கத் தால் ஒடுங்கியிருக்கும் ஒடுக்கத்தையும் யான் காணல் வேண்டும் என்பதேயாகும் என்றாள் தோழி*

## 475. அளிபெற நந்தும் ஆய்நுதற் கவின்

**வறன் உறல் அறியாத வழை அமை நறுஞ் சாரல்
விறல் மலை வியல் அறை, வீழ் பிடி உழையதா,
மறம் மிது வேழம், தன் மாறுகொள் மைந்தினான்,
புகர் நுதல் புண் செய்த புய் கோடு போல,
உயர் முகை நறுங் காந்தள் நாள்தோறும் புதிது ஈன,
அயம் நந்தி அணி பெற, அருவி ஆர்த்து இழிதரும்
பய மழை தலைஇய பாடு சால் விறல் வெற்ப!**

**மறையினின் மணந்து, ஆங்கே மருவு அறத் துறந்தபின்,
இறை வளை நெகிழ்பு ஓட, ஏற்பவும் ஒல்லும்மன்—
அயல் அலர் தூற்றலின், ஆய்நலம் இழந்த கண்;
கயல் உமிழ் நீர் போல, கண் பனி கலுழாக்கால்?**

**இனிய செய்து அகன்று, நீ இன்னாதார் துறத்தலின்,
'பனி, இவள் படர்' எனப் பரவாமை ஒல்லும்மன்—
ஊர் அலர் தூற்றலின், ஒளி ஓடி, நறு நுதல்
பீர் அலர் அணி கொண்டு, பிறை வனப்பு இழவாக்கால்?**

**'அஞ்சல்' என்று அகன்று, நீ அருளாது துறத்தலின்,
நெஞ்சு அழி துயர் அட, நிறுப்பவும் இயையும்மன்—
நனவினால் நலம் வாட, நலிந்த நடுங்கு அஞர்
கனவினால் அழிவுற்று, கங்குலும் அரற்றாக்கால்?
என ஆங்கு**

விளியா நோய் உழந்து ஆனா என் தோழி, நின் மலை
முனிவுற வருந்திய முளை முதிர் சிறு தினை
தளி பெறத் தகை பெற்றாங்கு, நின்
அளி பெற தந்தும், இவள் ஆய் நுதற் கவினே. – *கலி 53*

*வற்கடத்தை அறியாத சுரபுன்னை மரங்கள் நெருங்கிய பக்க மலையையும் வெற்றியையும் கொண்ட மலையின் அகன்ற பறையில் வாழ்கின்ற தான் விரும்பி பெண் யானை தன்னிடத்தே உள்ளது தனக்கு மாறான யானையைத் தன் மனத்தில் கொண்ட வலிமையால் அதன் புள்ளியையுடைய நெற்றியைப் புண்படுத்திய மறம் மிக்க யானை குத்தி எடுத்த கொம்பைப் போல உயர்ந்த அரும்பையுடைய காந்தள் நாள் தோறும் புதுமையை உண்டாக்கும் பள்ளங்கள் எல்லாம் நீர் நிறைந்து அழகு உண்டாகுமாறு அருவிகள் ஆரவாரத்துடன் இழியும். அதற்குக் காரணமான பயனைத் தரும் மழையை உடைய பெருமை அமைந்த வெற்றியையுடைய வெற்பனே!*

*அயலில் உள்ளவர் பழி கூறித் தூற்றுவதால் கண்கள் இயற்கையான தம் நலத்தை இழந்தன அம்மட்டில் நில்லாது பின்னர்க் கண்கள் கயல் மீன் கக்கும் நீர் போல நீர் விழாத காலத்துக் களவிடத்துக் கூடி, அக் களவொழுக்கத்தை மேற் கொண்டு தலைவியைக் கூடிப் பிரிந்த பின்பு முன்கையில் உள்ள வளைகள் நெகிழ்ந்து கழல்கின்றன கலுழ அவ் வருத்தத்தை ஏற்றுக் கொண்டிருக்கவும் கூடும் ஆனால் அதனால் பயன் என்ன? அக் கண்கள் அதற்குக் கண்ணீர் சிந்தாது இருப்பதில்லையே!*

*ஊரார் பழி சொல்வதால் நறுமணமுடைய நெற்றி ஒளி குன்றிப் பீர்க்கம் பூவின் அழகைத் தான் அடைந்து பிறைச் சந்திரன் போன்ற அழகை இழவாத போது, இயற்கைப் புணர்ச்சியில் பிரிய மாட்டேன் எனத் தெளிவுபடுத்திப் பிரியவும் செய்து பின் துன்பமாகுமாறு நீ பிரியின் இவளுக்கு வருத்தம் மிகும். இவளது வருத்தம் தெய்வத்தால் வந்ததென்று கருதித் தெய்வத்துக்கு வழிபாடு செய்யாதிருத்தலும் கூடும். அதனால் பயன் என்ன? அந்த நெற்றி தன் நலம் கெடா திருப்பதில்லையே!*

*பகலில் அழகானது கெடும்படி எம்மை நலியும்படி செய்த நடுங்குதற்குக் காரணமான வருத்தம் இரவில் கனவி*

*லும் வந்து வருந்திட இவள் ஆற்றாதவள் ஆனாள் அக் காலத்து இயற்கைப் புணர்ச்சியில் தெளியுறுத்திப் பிரிந்து அருளாது போனபின் இவள் மனம் வருந்துதற்குக் காரண மான துன்பம் இறந்து விடுதற்கு உயிரைப் போக்காமல் நிறுத்தவும் பொருந்தும் ஆனால் அதனால் பெற்றது என்ன? அதற்கு அக் கனவின் ஆற்றல் ஏற்றதாய் இருப்பதில்லையே!*

*என்று நான் கூறும்படியாய் அழியாத நோயினால் வருந்தி ஆறுதல் அடையாதவள் இவள் மலையில் வாடுமாறு வருந்திய தினைமுளை மழையைப் பெற அழகைப் பெறும். அதைப் போல் உன் அன்பைப் பெற்றால் இவளது நெற்றி அழகைப் பெறும்*

*இவ்வாறு தோழி தலைவனைப் பார்த்துச் சொன்னாள்.*

## 476. நில்லா உலகத்து நிற்கும் புகழ்

'கொடியவும் கோட்டவும் நீர் இன்றி நிறம் பெற,
பொடி அழல் புறந்தந்த பூவாப் பூம் பொலன் கோதை,
தொடிசெறி யாப்பு அமை அரி முன்கை, அணைத் தோளாய்!
அடி உறை அருளாமை ஒத்ததோ, நினக்கு' என்ன,
நரந்தம் நாறு இருங் கூந்தல் எஞ்சாது நனி பற்றி,
பொலம் புனை மகரவாய் நுங்கிய சிகழிகை,
நலம் பெறச் சுற்றிய குரல் அமை ஒரு காழ்
விரல் முறை சுற்றி, மோக்கலும் மோந்தனன்;
நறாஅ அவிழ்ந்தன்ன என் மெல் விரற் போது கொண்டு,
செறா அச் செங் கண் புதைய வைத்து,
பறாஅக் குருகின் உயிர்த்தலும் உயிர்த்தனன்;
தொய்யில் இள முலை இனிய தைவந்து,
தொய்யல் அம் தடக் கையின், வீழ் பிடி அளிக்கும்
மையல் யானையின், மருட்டலும் மருட்டினன்.
அதனால்
அல்லல் களைந்தனன், தோழி நம் நுகர்
அருங் கடி நீவாமை கூறின், நன்று' என
நின்னொடு சூழ்வல், தோழி, 'நயம் புரிந்து,
இன்னது செய்தாள் இவள்' என
மன்னா உலகத்து மன்னுவது புரைமே. — *கலி 54*

நீரால் நிறம் பெறுவனவான கொடியில் உள்ளவையும் கொம்பில் உள்ளவையும் ஆகிய பூப் போல் விளங்க, நீருக்கு முரணான பொடியை உடைய தீயால் செய்யப்பட்ட பொன் பூவால் செய்த மாலையையும், தொடி செறிந்த கட்டு வடங்கள் அமைந்த அழகையுமுடைய முன்கையையும், மெல்லிய தோளையும் உடையவளே! உன் அடியில் நான் தங்குதற்கு நீ அருள் செய்யாதிருத்தல் உனக்குப் பொருந்திய ஒன்றோ என்று சொன்னாள் பொன்னால் ஆன மகர வாயாய் அமைந்த தலைக் கோலம் விழுங்கிக் கிடந்த நரந்தம் பூ நாறும் என் அரிய கூந்தலின் முடியை ஒழியாது மிகப் பிடித்தான் அதில் ஒரு மாலையை விரலால் முறைப்படிச் சுற்றி அதை மோந்தும் பார்த்தான் அதுவே அன்றி நறவம் பூ மலர்ந்தாற் போன்று என் மென்மையான கையைத் தாங்கிக் கொண்டு அருளையுடைய சிவந்த கண் மறையுமாறு வைத்துக் கொல்லன் உலை மூக்கு வெப்பமாகப் பெருமூச்சு விடுவதைப் போல் பெருமூச்சையும் விட்டான் அதுவுமல்லாது தொய்யில் எழுதப்பட்ட இளைய முலையை இனிமையாய்த் தடவித், தொய்யில் படிந்த அப் பெரிய கையால், தான் விரும்பிய பெண் யானையை அருள் செய்யும் மயக்கத்தை யுடைய ஆண் யானையைப் போல் என் உடல் முழுவதையும் தடவினான் அவனது செயலால் கலங்கிய கலக்கத்தைப் போக்கினேன் தோழி! இனி, நீயும் யான் விரும்பிய விருப்பத்தின்படி மணம் புரிந்து 'நின் மகள் நம் குடிக்கு வழு ஏற்படாமல் கற்புக்கடம் பூண்டாள்' என்று நம் மனையில் நிகழும் மணம், அத் தலைவனை விட்டுப் பிரியாமல் தாய்க்கு அறத்தொடு நிற்கும் வகையில் கூறின் அது நமக்கு நல்லது என்று உன்னிடம் வேண்டினேன். நீ இவ்வாறு கூறின் நிலையற்ற உலகத்தில் நிலை நிற்கும் புகழ் நமக்குப் பொருந்தும் என்று தலைவி தோழியிடம் கூறினாள்

## 477. நாணமும் மடமும் இழக்கிலேன்

மின் ஒளிர் அவிர் அறல் இடை போழும் பெயலேபோல்,
பொன் அகை தகை வகிர் வகை நெறி வயங்கிட்டு,
போழ் இடை இட்ட கமழ் நறும் பூங் கோதை,

இன் நகை, இலங்கு எயிற்று, தேமொழி, துவர்ச்செவ்வாய்
நன்னுதால்! நினக்கு ஒன்று கூறுவாம் கேள் இனி:

'நில்' என நிறுத்தான், நிறுத்தே வந்து,
நுதலும், முகனும், தோளும், கண்ணும்,
இயலும், சொல்லும், நோக்குபு நினைஇ,
'ஐ தேய்ந்தன்று, பிறையும் அன்று;
மை தீர்ந்தன்று, மதியும் அன்று;
வேய் அமன்றன்று, மலையும் அன்று;
பூ அமன்றன்று, சுனையும் அன்று;
மெல்ல இயலும், மயிலும் அன்று;
சொல்லத் தளரும் கிளியும் அன்று;
என, ஆங்கு
அனையன பல பாராட்டி, பையென,
வலைவர் போல, சோர் பதன் ஒற்றி,
புலையர் போல, புன்கண் நோக்கி,
தொழலும் தொழுதான்; தொடலும் தொட்டான்;
காழ் வரை நில்லாக் கடுங் களிறு அன்னோன்
தொழூஉம்; தொடூஉம்; அவன் தன்மை
ஏழைத் தன்மையோ இல்லை, தோழி! — *கலி 55*

*ஒலிக்கின்ற மின்னல் கொடிகள் இடையில் பிளந்தோடும் முகில்கள் போன்று பொன்னைக் கூறுபடுத்திய அழகையுடைய தலைக் கோலத்தை ஐந்து பகுதியையுடைய மயிரில் விளங்க வைத்து, பின்னால் தாழம்பூவையும் இடையிலே இட்டு முடித்த மிகவும் மணக்கும் பூமாலையையும், இனிய நகையையும் விளங்கும் பற்களையும், இனிய மொழியையும், சிவந்த வாயையும் உடைய நல்ல நெற்றியை உடையவளே! உனக்கு ஒரு சொல்லைச் சொல்வேன்; அதைக் கேட்பாயாக:*

*தலைவன் என்னை மேலே போகாதே என்று என்னை நிறுத்தியவன். என் அருகில் நெருங்கி வந்து நெற்றியையும் முகத்தையும் தோளையும் கண்ணையும் சாயலையும் சொல்லையும் நோக்கி நின்றான் நின்றவன் உவமையைக் கூற நினைத்தான்*

*நெற்றி வியப்புக் கொண்டதாய்த் தேய்ந்தது; என்றாலும் அது பிறைநிலவு அன்று. முகம் களங்கமற்றது; ஆயினும் முழு மதியும் அன்று தோள் மூங்கிலின் தன்மை நெருங்கியது; அது பிறக்கும் இடம் மலை அன்று கண் மலரின் தன்மை நெருங்கியது அது பிறக்கும் சுனை யான இடமும் அன்று சாயல் பொருந்த மெல்ல நடக்கும், மயிலும் அன்று சொல் சொல்லத் தளரும் ஆயினும் கிளியுமன்று; என்று அங்கு அத்தன்மையுடைய உறுப்புகள் பலவற்றையும் பொய்யாகப் பாராட்டினான். வேடர் விலங்குகளின் சோர்வைப் பார்ப்ப தைப் போல் என் மனம் அழிந்த நிலையைப் பார்த்து, புலையர் நோக்குவது போன்று வருத்தம் ஏற்படப் பார்த்து வணங்கி னான் என்னைத் தீண்டவும் செய்தான் மதத்தால் அறிவை இழந்த குத்துக் கோலின் எல்லையில் நில்லாத ஆண் யானை யைப் போன்றவன் பல முறையும் வணங்கவும் செய்தான் தீண்டவும் செய்தான் ஆதலால் தோழி! அவனது குணத்தில் அறியாமையோ இல்லை! இங்ஙனம் அவன் நடந்து கொள்ள வும் யான் நாணமும் மடமும் நீங்காமல் நின்றேன் என்று தலைவி தன் பெருமை இயல்பு தோன்றக் கூறினாள்*

## 478. அரசனே தவறுடையான்

**ஊர்க்கால் நிவந்த பொதும்பருள், நீர்க் கால்,**
**கொழு நிழல் ஞாழல் முதிர் இணர் கொண்டு,**
**கழும முடித்து, கண்கூடு கூழை**
**சுவல்மிசைத் தாதொடு தாழ, அகல் மதி**
**தீம் கதிர் விட்டது போல, முகன் அமர்ந்து,**

**ஈங்கே வருவாள் இவள் யார்கொல்? ஆங்கே, ஓர்**
**வல்லவன் தைஇய பாவைகொல்? நல்லார்**
**உறுப்பு எலாம் கொண்டு, இயற்றியாள்கொல்? வெறுப்பினால்,**
**வேண்டு உருவம் கொண்டதோர் கூற்றம்கொல்?—ஆண்டார்**
**கடிது, இவளைக் காவார் விடுதல்; கொடி இயல்**
**பல் கலை, சில் பூங் கலிங்கத்தள் ஈங்கு, இது ஓர்!**
**நல்கூர்ந்தார் செல்வ மகள்!**

**இவளைச் சொல்லாடிக் காண்பேன், தகைத்து.**
**நல்லாய்! கேள்:**

ஆய் தூவி அனம் என், அணி மயிற் பெடை என,
தூது உண் அம் புறவு என, துதைத்த நின் எழில் நலம்—
மாதர் கொள் மான் நோக்கின் மட நல்லாய்! நிற் கண்டார்ப்
பேதுறூஉம் என்பதை அறிதியோ? அறியாயோ?

நுணங்கு அமைத் திரள் என, நுண் இழை அணை என
முழங்கு நீர்ப் புணை என, அமைந்த நின் தட மென் தாள்
வணங்கு இறை, வால் எயிற்று, அம் நல்லாய்!
நிற் கண்டார்க்கு
அணங்காகும் என்பதை அறிதியோ? அறியாயோ?

முதிர் கோங்கின் முகை என, முகம் செய்த குரும்பை என,
பெயல் துளி முகிழ் என, பெருத்த நின் இள முலை—
மயிர் வார்ந்த வரி முன்கை மட நல்லாய்! நிற் காண்டார்
உயிர் வாங்கும் என்பதை உணர்தியோ? உணராயோ?
என ஆங்கு
பேதுற்றாய் போலப் பிறர் எவ்வம் நீ அறியாய்,
யாது ஒன்றும் வாய்வாளாது இறந்தீவாய்! கேள், இனி:
நீயும் தவறு இலை; நின்னைப் புறங்கடைப்
போதர விட்ட நுமரும், தவறு இலர்;
நிறை அழி கொல் யானை நீர்க்கு விட்டாங்கு,
'பறை அறைந்தல்லது செல்லற்க!' என்னா
இறையே தவறு உடையான். — *கலி 56*

*ஊரில் வளர்ந்திருக்கும் இள மரக்காவினுள் நீர் ஓடும் கால்வாயில் நின்ற கொழுமையான நிழலையுடைய ஞாழல் என்ற மரத்தின் கொத்துகளைப் பறித்துக் கொண்டு, பூவும் மயிரும் தமக்குள் கலக்கும்படி முடிந்து வாரி முடிக்கும்படி ஒன்று கூடிய தலை மயிர், தோளில் சிறிது குலைந்து விழ, நிறைவான வெண்ணிலா இனிய கதிர்களை வீசுவது போல முகமானது ஒளி பொருந்தி, நான் நிற்கும் இந்த இடத்துக்கு வரும் இவள் யார்? கொல்லிமலையில் வல்லவன் ஒருவனால் செய்து வைக்கப்பட்ட ஒப்பில்லாத பாவையோ! நல்ல மகளி ரின் நல்ல உறுப்புகள் எல்லாவற்றையும் ஒருங்கு சேர்த்து ஒருவடிவாய்ப் படைக்கப்பட்ட ஒருத்தியோ! ஆடவர் மேல் உள்ள வெறுப்பினால் தன்னை இயமன் என்ற அறிந்து*

கொள்ளாதபடி பெண் வடிவம் கொண்டு வந்த இயமனோ' இதனை ஆராய்ந்து பார். கொடி போன்ற நுட்பத்தையும் எட்டுக் கோவையான மேகலையையும் சில பூத்தொழிலை யுடைய ஆடையையும் உடுத்தியவளாய் இவள் உள்ளாள் ஆதலால் குழந்தைப் பேறின்றி வறுமைப் பட்டவரின் செல்வ மகள் இவள் ஆவாள் இவளைக் காத்து வந்தவர்கள் இப் போது காவாமல் புறப்பட விடுதல் கொடியதாகும்

இனி இவளைத் தடுத்து நிறுத்தி, "நல்லாய் யான் கூறுவதைக் கேட்பாயாக!" என்று பேசிப் பார்ப்போம்

"கண்டவர் காதல் கொள்வதற்குக் காரணமாகிய மான் போன்ற பார்வையையும் மடப்பத்தையும் உடைய நல்லவளே! சூட்டு மயிரையுடைய அன்னம் போலவும், அழகிய பெடையை யுடைய மயிலைப் போலவும், நடையும் சாயலும் மடப்பமும் என்னும் நலங்கள் பொருந்திய உன் எழிலானது, உன்னைக் கண்டவர்களை மயக்கம் கொள்ளச் செய்துவிடும் இத் தன்மையை நீ அறிவாயோ! அறியாயோ!

"வளைந்த முன் கையையும் வெள்ளிய பற்களையும் பெற்ற அழகிய நல்லவளே! நிறத்தினாலும் திரட்சியினாலும் அழகி னது நுண்மையைக் கொண்ட மூங்கில் போலவும், மென்மை யால் நுட்பமான துகிலையுடைய அணை போலவும், காமக் கடலை நீந்ததற்குத் தெப்பமாதலால் நீரைக் கடக்கும் வேழங் கோலால் ஆன தெப்பம் போலவும், உள்ள நின் பெருமையுடைய மென்மையான தோள்களை நின்னைக் கண்டவர்க்கு வருத்தம் உண்டாக்கும் என்பதை நீ அறிவாயோ, அறிய மாட்டாயோ!

"மயிர் நேரிதான வரிகளை உற்ற முன்கையையும் மடப்பத் தையும் உடைய நல்லவளே! முற்றின கோங்க மரத்தின் அரும் பைப் போலவும், அடி வரைந்து கண்ணுக்குப் புலப்படும் குரும்பையைப் போலவும் விளங்குவன பெருத்த நின் இள முலைகள் அவை நின்னைக் கண்டவர்களின் உயிரை வாங்கிக் கொள்ளும் இந் நிலைமையை நீ அறிவாயோ, அறியாயோ!"

என்று நான் கூறினேன், கூற -

"நீ மயக்கம் கொண்டவன் போல மற்றவரின் வருத்தத்தை அறியாது, கேட்டவர்க்கு எதையும் சொல்லாது போகின்ற வளே' இப்போது நான் சொல்வதைக் கேட்பாயாக! நீ குற்றம்

*உடையவள் அல்லை! உன்னை இப் பக்கத்தில் வரும்படி விட்ட உறவினரும் குற்றம் உடையவர் அல்லர் குற்றம் உடையவர் யார் என்றால், மதம் கொண்ட கொல்லும் தன்மையுடைய யானையை நீர்க்குப் பறையை அறைந்து செல்லும் படி விடுவது போல் பறையறைந்து செல்வதல்லது பறை சாற்றாது செல வேண்டா என்று ஆணையிடாத அரசனே குற்றவாளி ஆவான்!" என்றான் தலைவன்*

## 479. அறிவைக் கவர்ந்து சென்றாள்

**வேய் எனத் திரண்ட தோள், வெறி கமழ் வணர் ஐம்பால்
மா வென்ற மட நோக்கின், மயில் இயல், தளர்பு ஒல்கி
ஆய் சிலம்பு அரி ஆர்ப்ப, அவிர் ஒளி இழை இமைப்ப,
கொடி என, மின் என, அணங்கு என, யாது ஒன்றும்
தெரிகல்லா இடையின்கண் கண் கவர்பு ஒருங்கு ஓட,
வளமை சால் உயர் சிறப்பின் நுந்தை தொல் வியல் நகர்
இளமையான் எறி பந்தோடு இகத்தந்தாய்! கேள், இனி:**

**பூந் தண் தார், புலர் சாந்தின், தென்னவன் உயர் கூடல்
தேம் பாய அவிழ் நீலத்து அலர் வென்ற அமர் உண்கண்
ஏந்துகோட்டு எழில் யானை ஒன்னாதார்க்கு அவன் வேலின்,
சேந்து நீ இனையையால், ஒத்ததோ? சின்மொழி!**

**பொழி பெயல் வண்மையான் அசோகம் தண் காவினுள்,
கழி கவின் இள மாவின் தளிர் அன்னாய்! அதன் தலை,
பணை அமை பாய்மான் தேர் அவன் செற்றார் நிறம் பாய்ந்த
கணையினும், நோய் செய்தல் கடப்பு அன்றோ? கனங்குழாய்!**

**வகை அமை தண் தாரான் கோடு உயர் பொருப்பின் மேல்
தகை இணர் இள வேங்கை மலர் அன்ன கணங்கினாய்!
மத வலி மிகு கடாஅத்து அவன் யானை மருப்பினும்
கதவவால் தக்கதோ? காழ் கொண்ட இள முலை.
என ஆங்கு
இனையன கூற, இறைஞ்சுபு நிலம் நோக்கி,
நினையுபு நெடிது ஒன்று நினைப்பாள் போல், மற்று ஆங்கே
துணை அமை தோழியர்க்கு அமர்த்த கண்ணள்
மனை ஆங்குப் பெயர்ந்தாள் என் அறிவு அகப்படுத்தே.**

*– கலி 57*

மூங்கிலைப் போல் திரண்ட தோளையும், மணம் கமழும் நுனி வளைந்த கூந்தலையும், மான் போன்ற பார்வையையும், மயில் போன்ற சாயலையும் உடையவளே! அழகிய சிலம்பின் உள்ளே இடப்பட்ட மணி ஒலிக்க, ஒளிரும் அணிகள் விளங்க, நுடக்கம் உடைய கொடி போன்ற விளக்கத்தால் மின்னல் எனக் கண்ணுக்குப் புலப்படாத வருத்தம் என்ன சிறிதும் தெளியாத இடையில் கண்கள் விரும்பிச் சேர ஓட, உன் இளமைப் பருவ அறியாமையால் செல்வம் பொருந்திய உயர்ந்த தலைமை பெற்ற உன் தந்தையின் பழமையுடைய வீட்டினின்றும் அடிக்கப்படும் பந்துடனே தளர்ந்து ஒதுங்கிப் புறப்பட்டவளே! இப்போது யான் சொல்வதைக் கேட்பாயாக:

சில சொற்களையே யுடையவளே! குளிர்ந்த மலர் மாலையையும், உலர்ந்த சந்தனத்தையும் உடைய பாண்டியனின் உயர்ந்த மதுரை நகரில் தேன் பரவும்படி மலர்ந்த நீலமலரை வென்ற போரை உற்ற கண்கள், தலையில் பொருந்திய கொம்பையும் யானையையும் உடைய பகைவர்க்கு அப் பாண்டியன் வேல் மனத்தை வருத்துவதைப் போல், சிவந்து வருத்தம் செய்ய நீ இத்தகைய இயல்பு கொண்டவளாய் உள்ளாய். இது நின் இளமைக்குத் தக்கதோ?

பொன்னால் செய்த காதணியை உடையவளே! பெய்யும் மழை போன்ற கொடையையுடைய பாண்டிய மன்னனின் அசோக மரத்தின் குளிர்ந்த சோலையிடத்து நின்ற மிக்க அழகையுடைய மாமரத்தின் தளிர் போன்ற மாநிறத்தை உடையவளே! அங்ஙனம் வருத்துவதற்கு மேல் பாய்ந்து செல்லும் குதிரை பூட்டப்பட்ட தேரையுடைய பாண்டியனால் சினம் கொள்ளப்பட்டவர்களின் மார்பில் தைத்த அம்பைவிடத் துன்பத்தைச் செய்தல் உலகத்துக் கொடுமைகளில் மிக்க கொடுமையாகும்

வகுப்பு அமைந்த குளிர்ந்த மாலையை அணிந்த பாண்டிய மன்னனின் பொதிய மலையில் உள்ள அழகைக் கொண்ட கொத்துகளையுடைய வேங்கைப் பூவைப் போன்ற தேமலை உடையவளே! முத்து மாலையைத் தன்னிடம் உடைய நின் முலைகள், இப் பருவத்திலும் அப் பாண்டியனின் மிக்க

வன்மையையும், மிக்க மதத்தையும் உடைய யானையின் கொம்புகளைவிடச் சினம் கொண்டவையாய் உள்ளன இந்தக் கொடுமை நின் இந்த இளமைப் பருவத்துக்குத் தக்கதோ?

இத் தகையனவற்றை யான் கூற, அதற்கு ஒன்றும் கூறாமல் கவிழ்ந்து நிலத்தைப் பார்த்துப் பின்பு அங்குத் தன் தோழியரை நினைப்பவள் போல் துணையாய் அமைந்த தோழியரைப் பார்த்தவளாய் அவள் எனது அறிவைத் தன்னிடத்தே கைக் கொண்டு தன் வீட்டுக்கு மீண்டு சென்றாள் என்றான் தனக்குள் தலைவன்

## 480. மடல் ஏறுவேன்

வார் உறு வணர் ஐம்பால், வணங்கு
இறை நெடு மென்தோள்,
பேர் எழில் மலர் உண் கண்,
பிணை எழில் மான் நோக்கின்,
கார் எதிர் தளிர் மேனி, கவின் பெறு சுடர் நுதல்,
கூர் எயிற்று முகை வெண் பல்
கொடி புரையும் நுசுப்பினாய்,
நேர் சிலம்பு அரி ஆர்ப்ப, நிரை தொடிக் கை வீசினை,

ஆர் உயிர் வௌவிக்கொண்டு
அறிந்தீயாது இறப்பாய்! கேள்:
உளனா, என் உயிரை உண்டு, உயவு நோய் கைம்மிக,
இளமையான் உணராதாய்! நின் தவறு இல்லானும்,
களைநர் இல் நோய்செய்யும் கவின்அறிந்து, அணிந்து, தம்
வளமையான் போத்தந்த நுமர் தவறு இல் என்பாய்.

நடை மெலிந்து அயர்வு உறீஇ, நாளும் என் நலியும் நோய்
மடமையான் உணராதாய்! நின் தவறு இல்லானும்,
இடை நில்லாது எய்க்கும் நின் உரு அறிந்து, அணிந்து தம்
உடைமையால் போத்தந்த நுமர் தவறு இல் என்பாய்.

அல்லல் கூர்ந்து அழிவுற, அணங்காகி அடரும் நோய்
சொல்லினும் அறியாதாய்! நின் தவறு இல்லானும்,
ஒல்லையே உயிர் வௌவும் உருஅறிந்து, அணிந்து, தம்
செல்வத்தால் போத்தந்த நுமர் தவறு இல் என்பாய்.

என ஆங்கு
ஒறுப்பின், யான் ஒறுப்பது நுமரை;
யான் மற்று இந் நோய்

பொறுக்கலாம் வரைத்து அன்றிப்
பெரிதாயின் பொலங்குழாய்!
மறுத்து இவ் ஊர் மன்றத்து மடல் ஏறி,
நிறுக்குவென் போல்வல் யான், நீ படு பழியே. – *கலி 58*

*வாரப்பட்ட நுனி வளைந்த கூந்தலையும், வளைந்த முன்கையை உடைய நீண்ட மென்மையான தோளையும், பெரிய அழகுற்ற மலர் போன்ற கண்களையும், பெண் மானின் மருண்ட பார்வையைப் போன்ற பார்வையையும், மழை பெய்யப் பெற்ற தளிரைப் போன்ற நிறத்தையும், அழகுமிக்க பிறைத்திங்கள் போன்ற நெற்றியையும், விழுந்த பின்பு முளைத்த கூர்மையான பற்களையும், விழுந்து முளைக்காத முல்லை அரும்பைப் போன்ற இடையை உடையவளே! காலில் உள்ள சிலம்பின் உள் இட்ட மணி ஆரவாரிப்ப, வரிசையான தொடியையுடைய கைகளை வீசியவளாய்ப் பெறுவதற்கு அரிய என் உயிரைக் கொண்டு, இளமையால் கைக் கொண்டதை அறியாமல், போகின்றவளே! யான் சொல்வதைக் கேட்பாயாக:*

*வருத்தத்தைத் தரும் காமநோய் மிகும்படி யான் சிறிது உயிருடன் இருக்கும்படி என் உயிரை வாங்கிக் கொண்டு உன் இளமையால் என் துன்பத்தை அறியாது போகின்ற வளே! உன்னிடம் தவறு இல்லை என்றாலும், உன்னைத் தவிர இந் நோயைப் போக்குபவர் பிறர் இல்லாத இதைச் செய்யும் அழகை அறிந்தும், தம் செல்வச் செருக்கால் உன்னை அலங்காரம் செய்து புறப்பட விட்ட உன் சுற்றத் தாரைத் தவறு இல்லாதவர் என்று கூறலாம் என்றால் கூறு அஃது அரிது*

*அறிவு நிறைவு ஓர்ப்பு கடைப்பிடி என்னும் ஒழுக்கம் தேய்ந்து மறத்தலை எனக்கு உண்டாக்கி நாள்தோறும் நான் வருந்துவதற்குக் காரணமான நீ செய்த நோயை நின் மடப்பத்தினால் அறிந்து கொள்ளாமல் போகின்றவளே!*

உன்னிடம் தவறு இல்லை என்றாலும் நிற்க மாட்டாது இளைக்கும் இடையையுடைய நின் வடிவை அறிந்தும் தன் செல்வச் செருக்கினால் உன்னை அலங்கரித்து வெளியே வரும்படி விட்ட உன் சுற்றத்தாரைத் தவறு உடையவர் அல்லர் எனக் கூறலாம் என்றால் கூறு, ஆனால் அஃது அரிது

மனம் அழிந்து வருத்தம் மிக்குக் கெடுமாறு வருத்தமாகி மென்மேலும் அடர்ந்து வரும் நோயைக் குறிப்பால் அறிந்து கொள்ளாதவளே! உன்னிடம் தவறு இல்லை என்றாலும் மெல்லப் படிப்படியாய் உயிரை வாங்காமல் விரைய உயிரை வாங்கும் உன் வடிவை அறிந்திருந்தும் தம் செல்வச் செருக்கினால் அலங்கரித்துப் புறப்பட விட்ட உன் சுற்றத்தாரைத் தவறு உடையவர் அல்லர் என்று கூறலாம் என்றால் கூறு! ஆனால் அஃது அரிது

நான் ஒறுத்துக் கூறுவதானால் உன்னை வெளியே வரும் படி விட்ட உன் சுற்றத்தாரை! உன்னையன்று, இக் காம நோய் பொறுக்கும் அளவுடையதன்றி மேலும் மிகுமானால், பொன் குழை அணிந்தவளே, யான் வருந்தும் மடல் ஏறி நீ அடையக் கூடிய ஒரு பழியை நான் உனக்கு ஏற்றுவது போல் உள்ளேன் இதை நீ அறிவாயாக! என்றான் காமுற்ற தலைவன்

## 481. உன் தவப் பயன் வீணாகும்

தளை நெகிழ் பிணி நிவந்த பாசடைத் தாமரை
முளை நிமிர்ந்தவை போலும் முத்துக் கோல் அவிர்தொடி,
அடுக்கம் நாறு காந்தள் நுண் ஏர் தண் ஏர் உருவின்
துடுப்பு எனப் புரையும் நின் திரண்ட நேர் அரி முன்கை,
சுடர் விரி வினை வாய்ந்த தூதையும் பாவையும்

விளையாட, அரி பெய்த அழகு அமை புனை வினை
ஆய் சிலம்பு எழுந்து ஆர்ப்ப, அம் சில இயலும் நின்
பின்னு விட்டு இருளிய ஐம்பால் கண்டு, என் பால
என்னை விட்டு இகத்தர, இறந்தீவாய்!" கேள், இனி:

மருளி, யான் மருள் உற, "இவன் உற்றது எவன்? என்னும்
அருள் இலை இவட்கு' என அயலார் நிற் பழிக்குங்கால்
வை எயிற்றவர் நாப்பண், வகை அணிப் பொலிந்து, நீ
தையில் நீர் ஆடிய தவம் தலைப்படுவாயோ?

உருளிழாய்!" "ஒளிவாட, இவன் உள்நோய் யாது" என்னும்
அருள் இலை இவட்கு' என அயலார் நிற் பழிக்குங்கால்
பொய்தல மகளையாய், பிறர் மனைப் பாடி, நீ
எய்திய பலர்க்கு ஈத்த பயம் பயக்கிற்பதோ?

ஆய்தொடி! "ஐது உயிர்த்து, இவன்உள்நோய் யாது" என்னும்
நோய் இலை இவட்கு" என நொதுமலர் பழிக்குங்கால்,
சிறு முத்தனைப் பேணி, சிறு சோறு மடுத்து, நீ
நறு நுதலவரொடு, நக்கது நன்கு இயைவதோ?
என ஆங்கு
அனையவை உளையபும், யான் தனக்கு உரைத்ததை
இனைய நீ செய்தது உதவாயாயின், சேயிழாய்!
செய்ததன் பயம் பற்று விடாது;
நயம் பற்று விடின் இல்லை நசைஇயோர் திறத்தே.

*– கலி 59*

*கட்டு அவிழ்ந்ததும் அரும்புகள் நீரின் மேல் உயர்ந்த பசிய இலையைக் கொண்டதும் ஆன தாமரை வளையம் போல் விளங்கும் முத்துப் பதித்த திரண்டு விளங்கும் தொடியணிந்த முன்கை; மலை அடுக்கம் எல்லாம் மணம் கமழும் கூர்மை யான அழகிய இதழ்களை உடைய காந்தளின் வடியுடைய துடுப்பு எனச் சொல்லும்படி தம்மில் ஒத்த மென்மையான இத்தகைய உன் முன் கையினால், இங்குலிகம் எழுதப் பெற்ற விரிந்த தொழில்களை உடைய வாய்களைப் பெற்ற மரத்தால் செய்த சிறு பானையும் பாவையும் கொண்டு விளையாடுதற்கு, உள்ளே இடப்பட்ட மணியுடைய அழகிய சிலம்புகள் மிகுதியாய் ஆரவாரம் செய்யச் சில அடியிட்டு நடக்கும் உன்னுடைய இளமை நீங்குவதால், பின்னி விடப் பட்ட நின் கூந்தலைக் கண்டு என்னிடம் உண்டான அறிவு முதலியவை என்னை விட்டுப் போகுமாறு போகின்றவளே!*

*யான் மயக்கம் அடைவதால் அதைக் கண்டு தானும் மருட்சி கொண்டு 'இவன் அடைந்த நோய் தான் எது வென்று கேட்கும் அருள் இவட்கு இல்லை' என்று நான் சொல்லவும், அதைக் கேட்டுப் பிறர் உன்னைப் பழிப்பர் அங்ஙனம் பழிக்கும் அளவில் கூர்மையான பற்களை உடைய இளம் மங்கையர்க்கு நடுவே பகுப்புடைய கோலத்தால்*

*பொலிவைப் பெற்று, நீ தைத் திங்களில் நீராடிய நோன்பின் பயனை அடைவாயோ? அடைய மாட்டாய்!*

*தலையில் கிடந்து அசையும் 'தலைப்பாளை' என்ற அணிகலன் அணிந்தவளே! ஒளி கெடுமாறு இவன் மனத்தில் ஏற்பட்டுள்ள நோய் யாது என்று கேட்கும் அருள் இவளுக்கு இல்லை என்று கூற அதைக் கேட்டுப் பிறர் உன்னைப் பழிப்பர், இந்த அளவுக்கு நோன்பான விளையாட்டை உடைய பெண் தன்மையை உடையவளாய்ப், பிறர் இல்லத்தில் போய் ஐயம் ஏற்றுப் பாடி நீ அங்குப் பெற்றவற்றை மற்றவர்க்குக் கொடுத்ததால் உள்ள பயன் உனக்குப் பயன் அளிக்குமோ? அளிக்காது.*

*ஆராய்ந்து எடுத்த தொடியை உடையவளே! நீ அழகாய் உயிர்த்து இவன் மனத்தில் ஏற்பட்டுள்ள நோய் யாது என்று கேட்கும் வருத்தம் இவளுக்கு இல்லை என்று யான் சொல்ல, அதைக் கேட்டு அயலவர் உன்னைப் பழிக்கும் அளவில், சிறிய குழ இளமகனை வளர்த்து அவனுக்கு வேறொருத்தியின் பெண்ணைக் கொள்வதற்குச் சிறு சோற்றைச் சமைத்துத் தோழியர்க்கு இட்டு, நீ நறிய நெற்றியையுடைய மகளிருடன் நோன்பைக் கொண்டாடி அந் நோன்பின் பயனானது உனக்கு வந்த பொருந்துமோ? பொருந்தாது!*

*என்று நீ மனம் வருந்தவும் யான் உனக்குக் கூறியது, உன்னை விரும்பியவர் திறத்து என் திறத்து வருந்தும்படி நீ செய்த கொடுமைக்கு, நீ ஓர் உதவியைச் செய்யாது போனால், நீ செய்த தீமையின் பயன் உன்னைப் பற்றாமல் விடாது அதுவேயன்றி அருளைக் கைவிடுவாயாயின் உனக்கு அத் தகைய நோன்புகள் பயன் தருவதில்லை என்றான் தலைவன்*

## 482. தலைவனுக்குக் குறை நயப்பித்தல்

**சுணங்கு அணி வன முலை, சுடர் கொண்ட நறு நுதல்,**
**மணம் கமழ் நறுங் கோதை மாரி வீழ் இருங் கூந்தல்,**
**நுணங்கு எழில் ஒண் தித்தி, நுழை நொசி மட மருங்குல்,**
**வணங்கு இறை வரி முன்கை, வரி ஆர்ந்த அல்குலாய்!**

**'கண் ஆர்ந்த நலத்தாரை, கதுமென, கண்டவர்க்கு**
**உள் நின்ற நோய் மிக, உயிர் எஞ்சு துயர் செய்தல்**

பெண் அன்று, புனையிழாய்!' எனக் கூறி – தொழூஉம்;
தாழுதே
கண்ணும் நீராக நடுங்கினன், இன் நகாய்!
என் செய்தான்கொல்லோ – இஃது ஒத்தன் தன்கண்
பொருகளிறு அன்ன தகை சாம்பி, உள்உள்
உருகுவான் போலும், உடைந்து?

தெருவின்கண் காரணம் இன்றிக் கலங்குவர்க் கண்டு, நீ
வாரணவாசிப் பதம் பெயர்த்தல், ஏதில
நீ நின்மேல் கொள்வத; எவன் ?

'அலர்முலை ஆய்இழை நல்லாய்! கதுமென,
பேர் அமர் உண்கண் நின் தோழி உறீஇய
ஆர் அஞா எவ்வம் உயிர் வாங்கும்;
மற்று இந் நோய் தீரும் மருந்து அருளாய், ஒண்தொடீ!

நின் முகம் காணும் மருந்தினேன்' என்னுமால்;
நின் முகம் தான் பெறின் அல்லது, கொன்னே
மருந்து பிறிது யாதும் இல்லேல், திருந்திழாய்!
என் செய்வாம்கொல், இனி நாம்?

பொன் செய்வாம்
ஆறு விலங்கித் தெருவின்கண் நின்று ஒருவன்
கூறும் சொல் வாய் எனக் கொண்டு, அதன் பண்பு உணராம்

'தேறல், எளிது' என்பாம் நாம்.

'ஒருவன் சாம் ஆறு எளிது' என்பாம், மற்று.

சிறிது, ஆங்கே – 'மாணா ஊர் அம்பல் அலரின் அலர்க' என,
நாணும் நிறையும் நயப்பு இல் பிறப்பு இலி.

பூண் ஆகம் நோக்கி இமையான் நயந்த நம்
கேண்மை விருப்புற்றவனை, எதிர் நின்று,
நாண் அடப் பெயர்த்த நய வரவு இன்றே. *– கலி 60*

*சுணங்கு சூழப் பெற்ற முலை; இளம்பிறையின் இயல்பைக் கொண்ட நல்ல நெற்றி; நல்ல மாலையையுடைய மணம் கமழும் முகிலும் விரும்பும் கரிய கூந்தல்; கூர்மையான அழகு பார்ப்பவரின் கண் சென்று நுழைந்து பார்க்கும் நுண்மை*

யால் அவர்க்கு அறியாமையைத் தரும் இடை; வளைந்த முன் கையையுடைய வளையல் அணிந்த முன்கை ஆகிய வற்றை உடைய ஒள்ளிய தித்தியாகிய வரி நிறைந்த அல் குலை உடையவளே!

இனிய பற்களைப் பெற்றவளே, உன்னை நோக்கித் தொழுவான்; தொழுதபின்பு அணிமணி அணிந்தவளே! என்னை நோக்கிக் கண்ணுக்கு நிறைந்த நலம் கொண்ட மகளிரைப் பார்த்தவர்க்குக் காம நோய் மிகும்படி விரைவில் உயிர் போகும் துயரைச் செய்தல் அவர்க்குப் பெண் தன்மை ஆகாது என்று கூறி உருகி நின்று நடுக்கம் கொண்டான் இவன் ஒருவன் போரிடும் யானை போன்ற தன்மை கெட்டான்; மனமுடைந்து உள்ளுக்குள்ளே உருகுவான் போல் நின்றான் இவன் இங்கு வந்து என்ன செயலைச் செய்தான் என்றாள்.

அதைக் கேட்ட தோழி நம்மால் நிகழ்ந்த ஒரு காரணம் இல்லாமலேயே, தெருவில் கலங்கும் சிலரைப் பார்த்து உனக்கு அயலாய் இருப்பன இத்தன்மை வாரணவாசி (காசி) யில் உள்ளவர் செய்யும் அருளுடைமையாகிய இயல்பை நீ உன்னிடத்தே கொண்டாய். இதனால் நமக்கு என்ன உண்டாகும்?

அதைக் கேட்ட தோழி 'அடி பரந்த முலையையும் அணியையும் பூண்ட நல்லவளே! பெரிய உண்கண்ணை யுடைய நின் தோழி உணர்த்திய பொறுப்பதற்கு இயலாத மனக் கவர்ச்சியைச் செய்யும் வருத்தம், விரைய உயிரை அரிக்கும். ஒண்டொடி, அஃது உயிரை வாங்காதபடி இந் நோய் தீர்வதற்குக் காரணமான மருந்தை அளிப்பாயாக! அந்த மருந்து தான் மிகவும் அரியது அன்றே உன் முகம் பார்த்தல் காரணமாகப் பிறக்கும் அருளை மருந்துத் தன்மை யாய் உடையோள் என்று கூறுகின்றான் ஆதலால் அவன் நின் முகத்தை இக் காலத்தில் பெற்றால் மருந்தாகும் திருந் திழாய், அதுவன்றி வேறு மருந்து இல்லை இருக்குமானால் நாம் என்னை செய்வோம்?

அதைக் கேட்டுத் தலைவி பொன் செய்வோம் என்று குறும்பாய் உரைத்தாள்

அவள் அவ்வாறு நகைத்துச் சொன்ன பின்பும் உலக ஒழுக்கத்தினின்று தப்பி ஒருவன் தெருவில் சொல்லும் சொல்லை உண்மை என்று கொண்டு அதன் உண்மையை உணராமல் நான் அதைத் தெளிதல் எளிது என்று சொல்லக் கடவோம்

அதைக் கேட்ட தோழி என் கருத்து இதுவானால் ஒருவன் இறத்தல் எளிது என்று சொல்வோம் என்றாள்

அதைக் கேட்ட தலைவி "மாட்சிமைப் படாத இந்த ஊரில் அம்பல் இனி அலராகுக என்று கருதி நாணத்தையும் நிறையையும் விரும்பாத குடிப்பிறப்புக்குரிய ஒழுக்கம் பொருந்திய மனம் இல்லாதவனுக்கு இறந்து படுவேன் என்று சொல்லும் தன்மை அவனுக்கு இல்லை" எனக் கூறினாள் அதைக் கேட்ட தோழி என் புணர்ச்சியை உள்ளத்தால் எண்ணி, உறக்கம் கொள்ளாமல் நம் நட்பை விரும்பி நம்மை விரும்பியவனை நாணம் தடுப்பதால் எதிர் நின்று வரவேற்றல் இல்லை. அதற்குத் தக்கதொன்றை அறிவாயாக! என்றாள்.

## 483. மடலேறுவான் போல் தோன்றுகிறது

எல்லா இஃது ஒத்தன், என் பெறான்? கேட்டைக் காண்:
செல்வம் கடைகொள, சாஅய், சான்றவர்
அல்லல் களை தக்க கேளிருழைச் சென்று,
சொல்லுதல் உற்று, உரைக்கல்லாதவர் போல—
பல் ஊழ் பெயர்ந்து என்னை நோக்கும்; மற்றுயான் நோக்கின்

மெல்ல இறைஞ்சும் தலை.

எல்லா! நீ முன்னத்தான் ஒன்று குறித்தாய்போல் காட்டினை;
நின்னின் விடாஅ நிழல் போல் திரிதருவாய்!
என், நீ பெறாதது? ஈது ஏன்?

சொல்லின், மறாதீவான்மன்னோ, இவள்?
செறாஅது ஈதல், இரந்தார்க்கு ஒன்று,ஆற்றாது வாழ்தலின்
சாதலும் கூடுமாம் மற்று.

இவள் தந்தை காதலின் யார்க்கும் கொடுக்கும்,
விழுப் பொருள்
யாது நீ வேண்டயது? பேதாய்! பொருள் வேண்டும்
புன்கண்மை ஈண்டு இல்லை; யாழ

மருளி மட நோக்கின் நின் தோழி என்னை
அருளீயல் வேண்டுவல், யான்

'அன்னையோ?' – 'மண்டு அமர் அட்ட களிறு
அன்னான்தன்னை ஒரு
பெண்டிர் அருளக் கிடந்தது எவன்கொலோ?

ஒண்தொடீ! நாண் இலன் மன்ற இவன் –
ஆயின், ஏஎ!

'பல்லார் நக்கு எள்ளப்படு மடல்மா ஏறி,
மல்லல் ஊர் ஆங்கண் படுமே, நறுநுதல்
நல்காள் கண்மாறிவிடின்' எனச் செல்வானாம்
எள்ளி நகினும் வரூஉம்; இடைஇடைக்
கள்வர் போல் நோக்கினும் நோக்கும்; குறித்தது
கொள்ளாது போகாக் குணன் உடையன், எந்தை தன்
உள்ளம் குறைபடாவாறு. *– கலி 61*

*தலைவன் தம்மிடம் வருவதைப் பார்த்துத் தலைவிக்கு, "ஏடி! இவன் ஒருவன் என்ன குறை உடையவன்? இவன் கேட்டைப் பார்! அறிவுடையவர் தம் செல்வம் முடிவை அடைவதால் வறுமை அடைந்து தம் வருத்தத்தைப் போக்கும் உறவினரிடத்தே போய்த் தம் குறையை வாய்விட்டுக் கூறத் தொடங்கிப் பின்பு தாம் சொல்ல எண்ணியதைச் சொல்ல மாட்டாமல் இருப்பதைப் போல், தான் சொல்லக் கருதியதைச் சொல்லாமல் என்னைப் பல முறை பார்ப்பான் பின் யான் அவனைப் பார்க்கின் தான் மெல்லெனத் தலை குனிந்து நிற்பான்" என்று சொன்னாள்.*

*பின்பு தோழி தலைவனிடம் சென்றாள் அவனை நோக்கி, "ஏடா! நீ குறிப்பால் எம்முடன் நட்புக் கொண்டாற் போன்று எங்கட்கு அறிவித்தபடி உன்னைவிட்டு நீங்காத நிழலைப் போல் என்னை விட்டு நீங்காமல் திரிபவனே! நீ பெறாத குறை யாது? அதனை இன்னது என்று சொல்," என்றாள் இவ்வாறு தோழி தலைவி செவியால் கேட்பத் தலைவனை வினவினாள்*

*நான் என் குறையைக் கூறினால் இவள் மறுக்காதிருப்பாளோ? எனத் தலைவன் தன் நெஞ்சுடன் உசாவினான்.*

அவ்வாறு தலைவன் தன் நெஞ்சுடன் உசாவித் தம்மிடம் இரந்தவர்க்கு ஏதேனும் ஒன்றை முகம் மாறுபடாமல் ஈயாது உயிர் வாழ்வதைவிடப் பின் சாதலும் கூடும் என்றான்

அதைக் கேட்ட தோழி, "இவளுடைய தந்தை இரப்பவர் மீதுள்ள அன்பால் எவருக்கும் சிறந்த பொருளைத் தருவான் எனவே நீ வேண்டிய பொருள்தான் யாது?" என வினவினாள்

அதைக் கேட்ட தலைவன், "சொல்வதன் குறிப்பை அறியாதவளே, என்னிடம் பிறரிடம் போய்ப் பொருளை இரக்கும் வறுமை இல்லை மடப்பத்தை உடைய நோக்கம் பொருந்திய நின் தலைவி எனக்கு அருள்வதை யான் இரப்பேன்" எனச் சொன்னான்.

அத் தன்மைதானோ! போரில் பகைவரைக் கொன்ற களிறு போன்றவனுக்கு ஒரு பெண்ணாய் இருப்பவள் அருள வேண்டியுள்ள வேண்டுகோள்தான் யாது?

இது தோழி தலைவன் நீங்கியபின் தலைவியிடம் வினவியது.

"ஒளியுடைய வளையலை அணிந்தவளே! இவன், என் தந்தை தன் உள்ளம் குறைபடா வண்ணம் வேண்டியவற்றைத் தந்து, தான் குறித்த ஒன்றைக் கைப்பற்றாமல் போகாத குணம் உடையவன், அதனால் நீ அருள செய்தலிலும் தாழ்வில்லை அவன் குறை வேண்டி நிற்கும் காலத்து யான் அவனை இகழ்ந்து சிரித்தாலும் பல முறையும் வருகின்றான் அங்ஙனம் குறையுற்று நிற்பதற்கு இடையே கள்வர் தாம் குறித்த பொருளைப் பார்க்காமல் பார்த்துக் கொள்வதைப் போல் நின்னைப் பார்க்காமல் பார்க்கின்றான் எனவே இவன் நாணம் இல்லாமையால் இவன் போக்கும் "நல்ல நெற்றியை உடைய தலைவி அருளாது போனால் பலரும் சிரித்து இகழும் மடல் மா ஏறுமாறு அமையும் அப்போது அவளுடன் எனக்குள்ள தொடர்பு ஊரில் அலராய் ஆகுமே" என்று எண்ணியபடி செல்பவன் போல உள்ளது

தலைவனின் இவ் இயல்பை விளக்கி மேல் இதற்குச் செய்யத் தக்கது அறிந்து செய் என்று தோழி குறை நயப்பித்தாள்

## 484. நீரைக் கேட்டா நீர் பருகுவார்?

ஏஎ! இஃது ஒத்தன், நாண் இலன் தன்னொடு
மேவேம் என்பாரையும் மேவினன் கைப்பற்றும்.

'மேவினும், மேவாக்கடையும், அஃது எல்லாம்
நீ அறிதி; யான் அஃது அறிகல்லேன்; பூ அமன்ற
மெல் இணர் செல்லாக் கொடி அன்னாய்! நின்னை யான்
புல் இனிது ஆகலின், புல்லினென்' 'எல்லா!
தமக்கு இனிது என்று, வலிதின் பிறர்க்கு இன்னா
செய்வது நன்று ஆமோ மற்று?'

சுடர்த்தொடீ! போற்றாய் களை,
நின் முதுக்குறைமை; போற்றிக் கேள்!
வேட்டார்க்கு இனிது ஆயின் அல்லது,
நீர்க்கு இனிது என்று
உண்பவோ, நீர் உண்பவர்?

செய்வது அறிகல்லேன்; யாது செய்வேன்கொலோ—
ஐ வாய் அரவின் இடைப்பட்டு, நை வாரா?
'மை இல் மதியின் விளங்கும் முகத்தாரை
வெளவிக் கொளலும் அறன்' எனக் கண்டன்று.

'அறனும் அது கண்டற்றாயின், திறன் இன்றி,
கூறும் சொல் கேளான், நலிதரும்; பண்டு நாம்
வேறு அல்லம் என்பது ஒன்று உண்டால்; அவனோடு
மாறு உண்டோ, நெஞ்சே! நமக்கு. — *கலி 62*

*இவன் ஒருவன் தன்னுடன் புணரும் குறிப்பு இல்லாத வரையும் புணர்ச்சி விருப்புக் குறிப்பு உடையவனாய்க் கையால் வலியப் பிடித்துக் கொள்கின்றான் ஆதலால் இவன் நாணம் இல்லாதவன் என்று தலைவி கூறினாள்*

*அதைக் கேட்ட தலைவன் அப் புணர்ச்சிக் குறிப்பின் பகுதியான மெய்ப்பாடு எல்லாம் உன்னிடம் பொருந்தி யிருப்பினும், பொருந்தாத இடத்திலும் உள்ள நன்மை தீமையை நீ அறிதல் வேண்டும் பூக்கள் நெருங்கியுள்ள மெல்லிய கொத்து நீங்காத கொடி போன்றவளே! பூவாத*

கொடியைப் போன்றவளே! உன் மேனியைத் தழுவுதற்கு இனிதாய் உள்ளது அதனால் தழுவினேன் என்று கூறினான்

அவன் உரைத்ததைக் கேட்ட தலைவி "ஏடா! தங்கட்கு இனிதாய் இருக்கின்றது என்று எண்ணிப் பிறர்க்கு இனிய தல்லாததை வலியச் செய்வது இன்பத்தை அளிக்குமோ?" என்றாள்

அதைச் செவியேற்ற தலைவன், "ஒளியுடைய வளையலை அணிந்தவளே! உன் அறிவை வெளிப்படுத்த வேண்டா! அதைக் கைவிடு! யான் சொல்வதைக் கேள்! அரிய நீரை அருந்துபவர் தண்ணீர் விரும்புபவர்க்கு அஃது இனியது என்று அருந்துவதல்லாது அந் நீர்க்கு இனியதாய் இருக்குமென்று எண்ணி அருந்துவாரோ!" என்று கூறினான்

ஐந்து தலைகளை உடைய பாம்பினது பார்வையில் அகப் பட்டது போல் எனக்கு வருத்தம் உண்டாயது மேற்கொண்டு செய்யக் கூடியதை அறியேன் இனி நான் ஏது செய்வேன்;" என்று தன் மனத்துடன் சொல்லி, அதன் பின், "களங்கம் இல்லாத நிலவினைப் போல் விளங்கும் முகமுடைய மகளிரை வலியப் புணர்வதும் ஒரு மணமே ஆகும் என நூல் கண்டது!" எனத் துணிந்து சொன்னான்

அதைக் கேட்ட தலைவி நூலில் உயர்ந்த மணம் கூறப்பட்டு உலகத்து ஒழுக்கமும் அது வாயின், அவனும் யான் அவனை மறுத்துக் கூறும் சொல்லைக் கொள்ளாது செயலற்று வருந்துவானாயின், அதுவே அன்றி, அவனது மனத்தில் முற்பிறப்பில் 'நானும் அவளும் வேறு அல்லேம் என்' எண்ணம் உண்டாகியிருக்குமானால், என் நெஞ்சே, அவனுடன் நமக்கு இனி மாறுபாடு உண்டோ" என்று அவனைப் புணர்வ தற்கு உடம்பட்டுக் கூறினாள்

## 485. தோழி கூறுகின்றாள்

**நோக்குங்கால், நோக்கித் தொழூஉம், பிறர் காண்பார்**
**தூக்கு இலி; தூற்றும் பழி எனக் கை கவித்துப்**
**போக்குங்கால், போக்கு நினைந்த இருக்கும்; மற்று நாம்**
**காக்கும் இடம் அன்று, இனி.**

எல்லா எவன் செய்வாம்
பூக்குழாய்! செல்லல் அவனுழைக் கூஉய்க் கூஉய்
விரும்பி யான் விட்டேனும் போல்வல்; என் தோள்மேல்
கரும்பு எழுது தொய்யிற்குச் செல்வல்; 'ஈங்கு ஆக
இருந்தாயோ' என்று ஆங்கு இற.

அவன் நின் திருந்துஅடிமேல் வீழ்ந்து இரக்கும்,
நோய் தீர்க்கும்
மருந்து நீ ஆகுதலான்.

இன்னும், கடம் பூண்டு, ஒருகால் நீ வந்ததை; உடம்பட்டாள்
என்னாமை என் மெய் தொடு.

இஃதோ அடங்கக் கேள்:
நின்னொடு சூழுங்கால், நீயும் நிலம் கிளையா,
என்னொடு நிற்றல் எளிது அன்றோ? மற்று அவன்—
தன்னொடு நின்று விடு. — *கலி 63*

*தான் மகளிரைத் தொழுவதைப் பிறர் காண்பாரே என்று ஆராய்ச்சி இல்லாதவன், நாம் பார்க்கும் போது நம்மை நோக்கி வணங்குவான் இங்ஙனம் தொழுவது நமக்கும் பழியைத் தூற்றும் என்று எண்ணித் தொழுதலை விலக்கிப் போகவிடும் காலத்து, அந்தப் போக்குத் தனக்குச் செய்யும் வருத்தத்தை எண்ணிப் போகாதிருப்பான். ஆதலால், இனி நாம் அவனை நம்மிடம் வராதபடி காக்கும் காலமன்று, ஏடி! இங்ஙனம் காத்தற்கு அரிய நிலைமை கண்டு மேல் என்ன செய்வோம், கூறுவாய்!*

*அழகிய குழையை உடையவளே! வருந்தும் அவனிடத்து நீ கூடும் கூட்டத்தை யான் விரும்பி உன்னைப் பல முறையும் அழைத்து, அழைத்துக் கொண்டு விடுவதைப் போல் செய்வேன். அவனுக்கு அது தோன்றாதபடி நீ என் தோள் மீது கரும்பு எழுதும் குழம்பிற்கு என்று ஒரு காரணத்தை அவனிடம் சொல்லிவிட்டு போவேன். நீ அங்கு வந்து, 'இந்த இடமே உனக்கு இருப்பிடமாய் எண்ணி இருந்து விட்டாயோ என்று என்னைத் தேடி வந்தது போல் அங்கிருந்து குறி யிடத்துக்குப் போ! அப்போது, அவன் காம நோய் தீர்க்கும் மருந்து நீ, ஆதலால் உன் அடிமீது விழுந்து நின்னை இரப்பான்.*

*தலைவன் குறை இரக்கின்றமைக்கு ஏற்ப உன்னை நானே அழைத்துக் கொண்டு விடுவது போல் நடிப்பேன் நீயும் அந்த நாடகத்துக்கு ஏற்ப நடி என்றாள் தோழி*

*அதைக் கேட்ட தலைவி தலைவன் இரக்கும் அங்கு நீ வாராய்; இன்னமும் ஒருகால் அவனிடம் போய் உன் வேண்டு கோளை முடித்தலைத் தன் கடமையாய்க் கொண்டு அவள் (நான்) தலைவனின் கூட்டத்துக்கு உடம் பட்டேன் என்று அவனிடம் கூற வேண்டா: இதற்கு என் மெய் தொட்டுச் சூள் கூறுவாயாக:" என்று தோழிக்கு உரைத்தாள்.*

*அதைக் கேட்ட தோழி "யான் சொன்ன குற்றம் இதுவோ? இனி இது செய்ய வேண்டியதைச் சுருங்கக் கேள், உன்னுடன் இதனை நான் ஆராயும் காலத்தில் நீயும் நாணத்தால் நிலத்தைக் கால் விரலால் கீறி என்னுடனே வேறுபட்டு நின்றனை இது செய்வதற்கு எளியதன்றோ! பின் இப்படியே அவனுடன் நின்று இங்ஙனமே செய்வது எளிதன்றோ" என்றாள் தோழி*

## 486. தேமல் நீங்குதற்கு வழி

**அணி முகம் மதி ஏய்ப்ப, அம் மதியை நனி ஏய்க்கும்,**
**மணி முகம், மா மழை, நின் பின் ஒப்ப, பின்னின்கண்**
**விரி நுண் நூல் சுற்றிய ஈர் இதழ் அலரி**
**அரவுக்கண் அணி உறழ் ஆரல் மீன் தகை ஒப்ப,**
**அரும் படர் கண்டாரைச் செய்து, ஆங்கு இயலும்**
**விரிந்து ஒலி கூந்தலாய்! கண்டை எமக்குப்**
**பெரும் பொன் படுகுவை பண்டு.**

**ஏஎ, எல்லா! மொழிவது கண்டை, இஃது ஒத்தன்;**
**தொய்யில்**
**எழுதி இறுத்த பெரும் பொன் படுகம்;**
**உழுவது உடையமோ, யாம்.**

**உழுதாய்**
**சுரும்பு இமிர் பூங் கோதை அம் நல்லாய்! யான் நின்**
**திருந்து இழை மென் தோள் இழைத்த, மற்று இஃதோ,**
**கரும்பு எல்லாம் நின் உழவு அன்றோ? ஒருங்கே**
**துகள் அறு வாள் முகம் ஒப்ப மலர்ந்த**

குவளையும், நின் உழவு அன்றோ? இகலி
முகை மாறு கொள்ளும் எயிற்றாய்! இவை அல்ல,
என் உழுவாய் நீ, மற்று இனி.

எல்லா! நல் தோள் இழைத்த கரும்புக்கு நீ கூறு;
முற்று எழில் நீல மலர் என உற்ற,
இரும்பு ஈர் வடி அன்ன, உண்கட்கும், எல்லாம்,
பெரும் பொன் உண்டு என்பாய்! இனி.

நல்லாய்! இகுளை! கேள்:
ஈங்கே தலைப்படுவன், உண்டான் தலைப்பெயின்,
வேந்த கொண்டன்ன பல.

'ஆங்கு ஆக! -'அத் திறம் அல்லாக்கால், வேங்கை வீ
முற்று எழில் கொண்ட சுணங்கு அணி பூண் ஆகம்
பொய்த்து ஒருகால் எம்மை முயங்கினை சென்றீமோ,
முத்து ஏர் முறுவலாய்! நீ படும் பொன் எல்லாம்
உத்தி எறிந்துவிடற்கு.' — *கலி 64*

*உன் அழகிய முகம் நிலவை போன்றது. மணிகள் விளங்கும் உன் பின்னப்பட்ட மயிர் முகத்துக்கு ஒப்பான வெண்மதி பொருந்தும் கரிய முகிலினைப் போன்றது அப் பின்னிய கூந்தலில் உள்ள நூலால் கட்டிய தேனினால் ஈரமான இதழ் களை உடைய மலர்கள் பின்னலுக்கு ஒப்பான கரிய பாம்பி னிடத்தே பொருந்தி, அதன் கரிய நிறத்துக்கு மாறுபட்ட கார்த்திகை என்னும் விண்மீனைப் போன்றது. இத்தகைய இயல்புடைய மனத்தால் ஒப்புக் கண்டவர்களை வருத்தத்தைச் செய்து விடும் தழைத்த கூந்தலை உடையவளே! நீ என் இகழும் நிலைமையைக் கைவிட்டு நான் சொல்வதை மனத் தால் ஆராய்ந்து பார் முன்னம் நீ என் காரணமாகப் பெரிய பொன் பெற்றனை!*

*முன்னம் இடைவிடாது கூடிய கூட்டத்தால் தோற்றப் பொலிவைப் பெற்றாய் என்று தலைவன் சொல்லி, இடைக் காலத்தில் வாராதிருந்தால் உண்டான வருத்தத்தைப் போக்கினான் அதனை எமக்குப் பெரும் பொன் கடன் பட்டவை ஆவாய் என நகைச் சுவைபடக் கூறினான்*

"இவன் ஒருவனால் தோற்றப் பொலிவு நான் அடைந்தேன் என்று இவன் சொல்லும் சொல்லைப் பார்!" என்று தலைவி தன் மனத்துக்குக் கூறினாள் பின் அவள் நீ என் தோள் மேல் தொய்யில் எழுதிக் கனவு போல் சில சமயம் தங்கினதால் உண்டான தோற்றப் பொலிவு எனக்கு உண்டான துண்டு ஆனால் என் முலையால் நின் மார்பிடத்து இடைவிடாது உழுவதைப் பெற்றேனா? அங்ஙனம் பெறவில்லையே!" என்று அவள் சொன்னாள்.

தலைவன் அவளை நோக்கி, 'வண்டுகள் ஒலிக்கும் மலரால் ஆன மாலையை உடைய அழகு பொருந்திய நல்லவளே! நீ உழுதாய்! என் மார்பான நிலத்தை நீ உழுதாய் அதனால் பொன் பொலிவு பெற்றாய் இக் களவொழுக்கத்திலும் மென் தோளின் மீது யான் எழுதிய கரும்பு போன்ற பொலிவு எல்லாம் நின் முலைகள் இடைவிடாமல் புணர்ந்ததால் உண்டான பயன் அன்றோ? அதனுடன் குற்றம் அற்ற ஒளியையுடைய முகம் குவளை மலருடன் மாறுபட்டுப் புணரும் போதெல்லாம் பொலிவு உண்டாகுமாறு பூத்த கண்களின் தோற்றப் பொலிவு நீ இடைவிடாது புணர்ந்ததால் உண்டானதன்றோ? முல்லை அரும்புடன் மாறுபடும் பற்களை உடையவளே, இத் தோற்றப் பொலிவுகளன்றி வேறு தோற்றப் பொலிவு ஏற்படும்படி புணர்வாயாக!" என்றான்

உன் கருத்து இடைவிடாது புணர்வது தான் என்றால் புணர்வாயாக' என்றான் என்றது நின்னை மணந்து கொள்வேன் என்பதாகும்

அதைக் கேட்ட தலைவி, "தலைவ! என் உறுப்புகளில் தோற்றப் பொலிவு உண்டாயுள்ளன எனச் சொல்லாமல் என் தோள்களில நின்னால் எழுதப்பட்ட கரும்பிற்குத் தோற்றப் பொலிவு உண்டு என்று கூறு நான் ஏற்றுக் கொள்கின்றேன் இனி மலர்ந்த அழகு குலைந்து அழகையுடைய நீல மலர் என்று பிறர் சொல்லும்படியாய் வருத்தம் அடைந்த இரும்பால் அரியப்பட்ட மா வடு போன்ற கண்களுக்கும் மற்ற உறுப்புகளுக்கும் பெரும் பசப்பு உண்டு எனச் சொல்வாய்!"

அதைக் கேட்ட தலைவன் "நல்லவளே, தோழியே, நான் சொல்வதைக் கேள்: மன்னனைச் சேர்ந்து அவனது செல்வத்தை

*அனுபவித்த ஒருவன் அவன் வயத்தனாய் நின்று செயலில் தலைமைத் தன்மை அடைவானாயின், அம் மன்னன் அவனால் உள்ள பயனைக் கொண்டாற்போல் பல பயனையும் நான் இங்கு அடையப் பெறுவேன்!" என்றான்*

*'நீ சொன்னவண்ணமே ஆகுக" என்றாள் தலைவி சிறிது வெறுத்தவள் போல்!*

*அதைக் கேட்ட தலைவன், "நீ இங்ஙனம் வெறுத்துக் கூறுவதை விடு முத்துப் போன்ற பற்களை உடையவளே! நீ முன்பு அடைந்த பசலையெல்லாம் இனி எக் காலத்திலும் உண்டாகாதபடி கழித்து விடுவதற்கு வேங்கைப் பூவின் அழகைக் கொண்ட சுணங்குடைய உடலால் பொய்யாக வேனும் ஒருமுறை முயங்கிச் செல்வாயாக!" என்று சொன்னான்*

## 487. மணமின்றித் தலைவியைக் கூடல் அரிது

திருந்திழாய்! கேளாய், நம் ஊர்க்கு எல்லாம் சாலும்
பெரு நகை! அல்கல் நிகழ்ந்தது; ஒரு நிலையே
மன்பதை எல்லாம் மடிந்த இருங் கங்குல்,
அம் துகில் போர்வை அணி பெறத் தைஇ, நம்
இன் சாயல் மார்பன் குறி நின்றேன் யான் ஆக—
தீரத் தறைந்த தலையும், தன் கம்பலும்,
காரக் குறைந்து, கறைப்பட்டு வந்து, நம்
சேரியின் போகா முட முதிர் பார்ப்பானை,
தோழி! நீ போற்றுதி என்றி அவன் ஆங்கே
பாரா, குறழா, பணியா, 'பொழுது அன்றி,
யார் இவண் நின்றீர்?' எனக் கூறி, பையென,
வை காண் முது பகட்டின், பக்கத்தின் போகாது,
'தையால்! தம்பலம் தின்றியோ?' என்று, தன்
பக்கு அழித்து, 'கொண்டீ' எனத் தரலும் – யாது ஒன்றும்
வாய்வாளேன் நிற்ப–கடிது அகன்று கைமாறி,
'கைப்படுக்கப்பட்டாய், சிறுமி! நீ' 'மற்று யான்
ஏனைப் பிசாசு; அருள்; என்னை நலிதரின்,
இவ் ஊர்ப் பலி நீ பெறாஅமல் கொள்வேன்'
எனப் பலவும் தாங்காது வாய் பாடி நிற்ப –

முதுபார்ப்பான் அஞ்சினன் ஆதல்அறிந்து, யான், எஞ்சாது
ஒரு கை மணல் கொண்டு, மேல் தூவக் கண்டே,
கடிது அரற்றிப் பூசல் தொடங்கினன், ஆங்கே.
ஒடுங்கா வயத்தின், கொடுங் கேழ் கடுங்கண்,
இரும் புலி கொண்மார் நிறுத்த வலையுள் ஓர்
ஏதில் குறு நரி பட்டற்றால்! காதலன்
காட்சி அழுங்க, நம் ஊர்க்கு எலாஅம்
ஆகுலம் ஆகி விளைந்ததை – என்றும் தன்
வாழ்க்கை அதுவாகக் கொண்ட முது பார்ப்பான்
வீழ்க்கைப் பெருங் கருங் கூத்து. *– கலி 65*

*திருந்திய அணிகளை அணிந்தவளே, ஒரு பார்ப்பான் அவன் மயிர் நீங்கிய தட்டையான தலையினை உடையவன்; கருங் குட்டத்தினால் காலும் கையும் குறையப் பெற்றவன்; கடமையை மேற் கொண்டு வந்து நம் தெருவினின்றும் போகாமல் ஒளிந்து திரியும் முடமானவன்; முதிர்ந்தவன் அவனைப் பேணுவாய் என்று நீ பலகாலும் கூறுவாய் அதை நான் ஏற்காமல் உயிர்கள் யாவும் ஒன்றாக உறங்கும் இரவில் அழகிய போர்வையால் போர்த்தி அழகு பெற உடுத்து நம் தலைவன் செய்யும் குறியை எதிர் பார்த்து நின்றேன் அப்போது அந்தப் பார்ப்பானால் இரவுக் காலத்தே பெரிய சிரிக்கத் தக்க நிகழ்ச்சி நிகழ்ந்தது அந் நகைக்குரிய நிகழ்ச்சி ஊர் எல்லாம் நகைத்தற்கு உரியதாய் இருந்தது அது நிகழ்ந்த வண்ணத்தைக் கேட்பாயாக: அவன் அங்குக் குனிந்து பார்த்து, "மகளிர் வரும் காலம் இதுவன்று இந் நேரத்தில் நின்ற நீ யார்?" என்று முதலில் சொன்னான் பின், "சிறியவளே! நீ என்னால் பிடித்துக் கொள்ளப் பட்டாய்!" என்று சொன்னான் மெல்ல வணங்கினான் வைக்கோலைக் கண்ட முதிய எருதினைப் பொல் என் பக்கத்தினின்று போகாமல் நின்றான் "பெண்ணே! தாம்பூலம் உண்பாய்!" என்று பாக்குள்ள பையைக் குலைத்து, "நீ எடுத்துக் கொள்;" என்றான் நான் அதற்கு ஒரு சொல்லும் சொல்லவில்லை, பேசாமல் நின்றேன் அதனால் அவன் அஞ்சித் தன் முன்னைய நிலையை மாற்றிக் கொண்டான் "பெண் பேய் ஆகிய உன்னை ஒழித்த ஆண் பேய் நான் எனக்கு அருள்வாய்! அங்ஙனம் அருளாமல்*

*வருத்தினால், இவ் ஊரில் நீ பெற்றுவரும் பலியைப் பெறாமல் செய்து விடுவேன் அதனை நான் கொண்டுவிடுவேன்!" என் றான் பல சொற்களையும் இப்படிப் பேசினான்*

*அந்த முதிய பார்ப்பான் என்னைப் பெண் பேய் என்று எண்ணி அஞ்சியதை யான் அறிந்து, ஒரு கையால் மணலை அள்ளி ஒழியாது அவன் மீது தூவினேன் அவன் அதனைக் கண்டு அங்கிருந்து விரைந்து கதறியபடி ஊர்க்கெல்லாம் கேட்கும்படி கூப்பாடிடத் தொடங்கினான்*

*தனியாய் நிற்கும் மகளிரைக் கண்டால் தன் காம வேட்கையால் மேல் விழுந்து செய்யும் அவனது செயல் இது இந்த நாடகத்தால் நம் தலைவர் நம்மைக் குறியிடத்து வந்து நம்மைக் காணும் காட்சி கெடும்படி நமக்குத் துன்பமாய் அமைந்தது இது நிகழ்ந்தது எப்படிப்பட்டது என்றால் ஒன்றுக்கும் கெடாத வன்மையையும் வளைந்த வரியையும் அஞ்சாமையையும் உடைய புலியைக் கொள்வதற்கு வைக்கப் பட்ட வலையிலே அத் தொழிலுக்கு வேறாய்க் குறுநரி அகப்பட்டுக் கொண்ட தன்மையாயிற்று! எனவே இனிமேல் நமக்கு இரவுக் குறி இல்லை போலும்!" என்றாள்*

# குறிஞ்சி

## பத்துப்பாட்டு

### 488. தோழி அறத்தொடு நிற்றல்

'அன்னாய், வாழி! வேண்டு, அன்னை! ஒள் நுதல்,
ஒலி மென் கூந்தல், என் தோழி மேனி
விறல் இழை நெகிழ்த்த வீவு அருங் கடு நோய்
அகலுள் ஆங்கண் அறியுநர் வினாயும்,
பரவியும், தொழுதும், விரவு மலர் தூயும்,
வேறு பல் உருவின் கடவுட் பேணி,
நறையும் விரையும் ஓச்சியும், அலவுற்று,
எய்யா மையலை நீயும் வருந்துதி—
நல் கவின் தொலையவும், நறுந் தோள் நெகிழவும்,
புள் பிறர் அறியவும், புலம்பு வந்து அலைப்பவும்.,
உள் கரந்து உறையும் உய்யா அரும் படர்
செப்பல் வன்மையின் செறித்து, யான் கடவலின்.

### தலைவியின் அன்பு மிகுதி

"முத்தினும் மணியினும் பொன்னினும், அத் துணை,
நேர்வரும் குரைய கலம் கெடின், புணரும்;
சால்பும் வியப்பும் இயல்பும் குன்றின்,
மாசு அறக் கழீஇ வயங்கு புகழ் நிறுத்தல்,
ஆசு அறு காட்சி ஐயர்க்கும், அந் நிலை,
எளிய என்னார், தொல் மருங்கு அறிஞர்;
மாதரும் மடனும் ஓராங்குத் தணப்ப,
நெடுந் தேர் எந்தை அருங் கடி நீவி,
இருவேம் ஆய்ந்த மன்றல் இது என,

நாம் அறிவுறாலின் பழியும் உண்டோ?
ஆற்றின் வாரார் ஆயினும், ஆற்ற
ஏனை உலகத்தும் இயைவதால், நமக்கு" என
மான் அமர் நோக்கம் கலங்கிக் கையற்று,
ஆனாச் சிறுமையள் இவளும் தேம்பும்,

## மண நிகழ்வை தோழி அறிவித்தல்

இகல் மீக் கடவும் இரு பெரு வேந்தர்
வினையிடை நின்ற சான்றோர் போல,
இரு பேர் அச்சமொடு யானும் ஆற்றலென்;
கொடுப்பின் நன்கு உடைமையும், குடி நிரல் உடைமையும்,
வண்ணமும், துணையும், பொரீஇ எண்ணாது,
எமியேம் துணிந்த ஏமம் சால் அரு வினை
நிகழ்ந்த வண்ணம் நீ நனி உணரச்
செப்பல் ஆன்றிசின்; சினவாதீமோ!

## தினைப்புனம் காத்தல்

"நெற் கொள் நெடு வெதிர்க்கு அணந்த யானை,
முத்து ஆர் மருப்பின் இறங்குகை கடுப்ப,
துய்த் தலை வாங்கிய புனிறு தீர் பெருங் குரல்
நல் கோட் சிறு தினைப் படு புள் ஓப்பி,
எல் பட வருதியர்" என நீ விடுத்தலின்,
கலி கெழு மரமிசைச் சேணோன் இழைத்த
புலி அஞ்சு இதணம் ஏறி, அவண,
சாரல் சூரல் தகை பெற வலந்த,
தழலும் தட்டையும் குளிரும், பிறவும்,
கிளி கடி மரபின ஊழ் ஊழ் வாங்கி,
உரவுக் கதிர் தெறூஉம் உருப்பு அவிர் அமயத்து –

## சுனையில் நீராடல்

விசும்பு ஆடு பறவை வீழ் பதிப் படர,
நிறை இரும் பௌவம் குறைபட முகந்து கொண்டு,
அகல் இரு வானத்து வீசு வளி கலாவலின்,
முரசு அதிர்ந்தன்ன இன் குரல் ஏற்றொடு,

நிரை செலல் நிவப்பின் கொண்மூ மயங்கி,
இன் இசை முரசின், சுடர்ப் பூண் சேஎய்
ஒன்னார்க்கு ஏந்திய இலங்கு இலை எஃகின்,
மின் மயங்கு கருவிய கல்மிசைப் பொழிந்தென
அண்ணல் நெடுங்கோட்டு இழி தரு தெள்நீர்,
அவிர் துகில் புரையும், அவ் வெள் அருவி,
தவிர்வு இல் வேட்கையேம் தண்டாது ஆடி,
பளிங்கு சொரிவு அன்ன பாய் சுனை குடைவுழி,
நளி படு சிலம்பின், பாயம் பாடி,
பொன் எறி மணியின் சிறு புறம் தாழ்ந்த எம்
பின் இருங் கூந்தல் பிழிவனம் துவரி,
உள்ளகம் சிவந்த கண்ணேம்.

## வள் இதழ் மலர்களைப் பறித்து குவித்தல்

வள் இதழ்
ஒண் செங் காந்தள், ஆம்பல், அனிச்சம்,
தண் கயக் குவளை, குறிஞ்சி, வெட்சி,
செங் கொடுவேரி, தேமா, மணிச்சிகை,
உரிது நாறு அவிழ் தொத்து உந்தூழ், கூவிளம்,
எரி புரை எறுழம், சுள்ளி, கூவிரம்,
வடவனம், வாகை, வான் பூங் குடசம்,
எருவை, செருவிளை, மணிப் பூங் கருவிளை,
பயினி, வானி பல் இணர்க் குரவம்,
பசும்பிடி, வகுளம், பல் இணர்க் காயா,
விரி மலர் ஆவிரை, வேரல், சூரல்,
குரீஇப் பூளை, குறுநறுங்கண்ணி,
குருகிலை, மருதம், விரி பூங் கோங்கம்,
போங்கம், திலகம், தேங் கமழ் பாதிரி,
செருந்தி, அதிரல், பெருந் தண் சண்பகம்,
கரந்தை, குளவி, கடி கமழ் நெய்தல்,
தில்லை, பாலை, கல் இவர் முல்லை,
குல்லை, பிடவம், றுமாரோடம்,
வாழை, வள்ளி, நீள் நறு நெய்தல்,
தாழை, தளவம், முள் தாட் தாமரை,

ஞாழல், மௌவல், நறுந் தண் கொகுடி,
சேடல், செம்மல், சிறு செங்குரலி,
கோடல், கைதை, கொங்கு முதிர் நறு வழை,
காஞ்சி, மணிக் குலைக் கள் கமழ் நெய்தல்,
பாங்கர் மராஅம் பல் பூந் தணக்கம்
ஈங்கை, இலவம், தூங்கு இணர்க் கொன்றை,
அடும்பு, அமர் ஆத்தி, நெடுங் கொடி அவரை,
பகன்றை, பலாசம், பல் பூம் பிண்டி,
வஞ்சி, பித்திகம், சிந்துவாரம்,
தும்பை, துழாஅய், சுடர்ப் பூந் தோன்றி,
நந்தி, நறவம், நறும் புன்னாகம்,
பாரம், பீரம், பைங் குருக்கத்தி,
ஆரம், காழ்வை, கடி இரும் புன்னை,
நரந்தம், நாகம், நள்ளிருள்நாறி,
மா இருங் குருந்தும், வேங்கையும், பிறவும்,
அரக்கு விரித்தன்ன பரு ஏர் அம் புழகுடன்
மால், அங்கு, அடைய மலிவனம் மறுகி,
வான் கண் கழீஇய அகல் அறைக் குவைஇ.

## தழை உடுத்து மாலை சூடி இருத்தல்

புள் ஆர் இயத்த விலங்கு மலைச் சிலம்பின்,
வள் உயிர்த் தெள் விளி இடை இடைப் பயிற்றி,
கிள்ளை ஓப்பியும், கிளை இதழ் பறியா,
பை விரி அல்குல் கொய்தழை தைஇ,
பல் வேறு உருவின் வனப்பு அமை கோதை, எம்
மெல் இரு முச்சி கவின் பெறக் கட்டி,
எரி அவிர் உருவின் அம் குழைச் செயலைத்
தாது படு தண் நிழல் இருந்தனம் ஆக—

## தலைவன் வருகை

எண்ணெய் நீவிய, சுரி வளர் — நறுங் காழ்,
தண் நறுந் தகரம் கமழ மண்ணி,
ஈரம் புலர விரல் உளர்ப்பு அவிழா,
காழ் அகில் அம் புகை கொளீஇ, யாழ் இசை

அணி மிகு வரி மிஞிறு ஆர்ப்ப, தேம் கலந்து–
மணி நிறம் கொண்ட மா இருங் குஞ்சியின்,
மலையவும் நிலத்தவும் சினையவும் சுனையவும்
வண்ண வண்ணத்த மலர் ஆய்பு விரைஇய
தண் நறுந் தொடையல், வெண் போழ் கண்ணி,
நலம் பெறு சென்னி, நாம் உற மிலைச்சி,
பைங் காற் பித்திகத்து ஆய் இதழ் அலரி
அம் தொடை ஒரு காழ் வளைஇ, செந் தீ
ஒண் பூம் பிண்டி ஒரு காது செரீஇ,
அம் தளிர்க் குவவு மொய்ம்பு அலைப்ப, சாந்து அருந்தி,
மைந்து இறை கொண்ட மலர்ந்து ஏந்து அகலத்து
தொன்று படு நறுந் தார் பூணொடு பொலிய,
செம் பொறிக்கு ஏற்ற, வீங்கு இறைத் தடக் கையின்,
வண்ண வரி வில் ஏந்தி, அம்பு தெரிந்து,
நுண் வினைக் கச்சைத் தயங்கு அறக் கட்டி,
இயல் அணிப் பொலிந்த ஈகை வான் கழல்
துயல் வருந்தோறும் திருந்து அடிக் கலாவ–

## தலைவனின் நாய்க்கு அஞ்சி - விலகுதல்

முனை பாழ் படுக்கும் துன் அருந் துப்பின்
பகை புறம் கண்ட பல் வேல் இளைஞரின்
உரவுச் சினம் செருக்கி, துன்னுதொறும் வெகுளும்,
முளை வாள் எயிற்ற வள் உகிர் ஞமலி
திளையாக் கண்ண வளைகுபு நெரிதர,
நடுங்குவனம் எழுந்து நல் அடி தளர்ந்து, யாம்
இடும்பை கூர் மனந்தேம் மருண்டு புலம் படர–

## தலைவன் மகளிடம் வினாதல்

மாறு பொருது ஒட்டிய புகல்வின் வேறு புலத்து
ஆ காண் விடையின், அணி பெற வந்து – எம்
அலமரல், ஆயிடை, வெரூஉல் அஞ்சி,
மெல்லிய இனிய மே வரக் கிளந்து, எம்
ஐம்பால்ஆய் கவின் ஏத்தி, “ஒண் தொடி
அசை மென் சாயல், அவ் வாங்கு உந்தி,

மட மதர் மழைக் கண், இளையீர்! இறந்த,
கெடுதியும் உடையேன்" என்றனன். அதன் எதிர்
சொல்லேம், ஆதலின், அல்லாந்து —

### தலைவன் தலைவி சொல்லை எதிர்ப்பார்த்தல்

"கலங்கிக்
கெடுதியும் விடீஇர் ஆயின் எம்மொடு
சொல்லலும் பழியோ, மெல் இயலீர், என,
நைவளம் பழுநிய பாலை வல்லோன்
கை கவர் நரம்பின், இம்மென இமிரும்
மாதர் வண்டொடு, சுரும்பு நயந்த இறுத்த,
தாது அவிழ் அலரித் தா சினை பிளந்து,
தாறு அடு களிற்றின் வீறு பெற ஓச்சி,
கல்லென சுற்றக் கடுங் குரல் அவித்து எம்
சொல்லற் பாணி நின்றனன் ஆக—

### யானை சினந்து வர மகளிர் நடுக்கம்

இருவி வேய்ந்த குறுங் காற் குரம்பை,
பிணை ஏர் நோக்கின் மனையோள் மடுப்ப,
தேம் பிழி தேறல் மாந்தி, மகிழ் சிறந்து
சேமம் மடிந்த பொழுதின், வாய்மடுத்து,
இரும் புனம் நிழத்தலின், சிறுமை, நோனாது,
அரவு உழற், அம் சிலை கொளீஇ, நோய் மிக்கு,
உரவுச் சின முன்பால் உடல் சினம் செருக்கி,
கணை விடு (பு), புடையூ, கானம் கல்லென,
மடி விடு வீளையர் வெடி படுத்து எதிர,
கார்ப் பெயல் உருமின் பிளிறிச், சீர்த் தக
இரும் பிணர்த் தடக் கை இரு நிலம் சேர்த்தி,
சினம் திகழ் கடாஅம் செருக்கி, மரம் கொல்பு,
மையல் வேழம், மடங்கலின் எதிர்தர,
உய்வு இடம் அறியேம் ஆகி, ஒய்யென,
திருந்து கோல் எல் வளை தெழிப்ப, நாணு மறந்து,
விதுப்புறு மனத்தேம், விரைந்து அவற் பொருந்தி,
சூர் உறு மஞ்ஞையின் நடுங்க —

வார் கோல்

உடு உறும் பகழி வாங்கி, கடு விசை,
அண்ணல் யானை அணி முகத்து அழுத்தலின்,
புண் உமிழ் குருதி முகம் பாய்ந்து இழிதர,
புள்ளி வரி நுதல் சிதைய, நில்லாது,
அயர்ந்து புறங்கொடுத்த பின்னர் – நெடு வேள்
அணங்கு உறு மகளிர் ஆடுகளம் கடுப்ப,
திணி நிலைக் கடம்பின் திரள் அரை வளைஇய
துணை அறை மாலையின், கை பிணி விடேஎம்,
நுரையுடைக் கலுழி பாய்தலின், உரவுத் திரை
அடும் கரை வாழையின் நடுங்கப், பெருந்தகை
"அம் சில் ஓதி! அசையல்; யாவதும்
அஞ்சல் ஓம்பு; நின் அணி நலம் நுகர்கு" என
மாசு அறு சுடர் நுதல் நீவி, நீடு நினைந்து,
என் முகம் நோக்கி நக்கனன்.

தலைவி - தலைவன் கூடல்

அந் நிலை,
நாணும் உட்கும் நண்ணுவழி அடைதர,
ஒய்யெனப் பிரியவும் விடாஅன், கவைஇ
ஆகம் அடைய முயங்கலின், அவ் வழி,
பழு மிளகு உக்க பாறை நெடுஞ் சுனை,
முழு முதற் கொக்கின் தீம் கனி உதிர்ந்தென,
புள் எறி பிரசமொடு ஈண்டி, பலவின்
நெகிழ்ந்து உகு நறும் பழம் விளைந்த தேறல்,
நீர் செத்து அயின்ற தோகை, வியல் ஊர்ச்
சாறு கொள் ஆங்கண் விழவுக் களம் நந்தி,
அரிக் கூட்டு இன் இயம் கறங்க, ஆடு மகள்
கயிறு ஊர் பாணியின் தளரும் சாரல்,
வரை அரமகளிரின் சாஅய், விழைதக,
விண் பொரும் சென்னிக் கிளைஇய காந்தள்
தண் கமழ் அலரி தாஅய், நன் பல
வம்பு விரி களத்தின் கவின் பெறப் பொலிந்த
குன்று கெழு நாடன், எம் விழைதரு பெரு விறல்,

உள்ளத் தன்மை உள்ளினன் கொண்டு,
“சாறு அயர்ந்தன்ன மிடாஅச் சொன்றி
வருநர்க்கு வரையா, வள நகர் பொற்ப,
மலரத் திறந்த வாயில் பலர் உண,
பைந் நிணம் ஒழுகிய நெய்ம் மலி அடிசில்
வசைஇல் வான் திணைப் புரையோர் கடும்பொடு
விருந்து உண்டு எஞ்சிய மிச்சில், பெருந்தகை,
நின்னோடு உண்டலும் புரைவது, என்று”, ஆங்கு,
அறம் புணை ஆகத் தேற்றிப், பிறங்கு மலை
மீமிசைக் கடவுள் வாழ்த்தி, கைதொழுது,
ஏமுறு வஞ்சினம் வாய்மையின் தேற்றி,
அம் தீம் தேள் நீர் குடித்தலின், நெஞ்சு அமர்ந்து,
அரு விடர் அமைந்த களிறு தரு புணர்ச்சி,
வான் வரி உறையுள் வயங்கியோர் அவாவும்
பூ மலி சோலை, அப் பகல் கழிப்பி,
எல்லை செல்ல, ஏழ் ஊர்பு, இறைஞ்சி,
பல் கதிர் மண்டிலம், கல் சேர்பு மறைய–

## மாலைக் காலம்

மான் கணம் மரமுதல் தெவிட்ட, ஆன் கணம்
கன்று பயிர் குரல மன்று நிறை புகுதர,
ஏங்கு வயிர் இசைய கொடு வாய் அன்றில்
ஓங்கு இரும் பெண்ணை அக மடல் அகவ,
பாம்பு மணி உமிழ, பல் வயின் கோவலர்
ஆம்பல் அம் தீம் குழல் தெள் விளி பயிற்ற,
ஆம்பல் ஆய் இதழ் கூம்பு விட, வள மனைப்
பூந் தொடி மகளிர் சுடர் தலைக் கொளுவி,
அந்தி அந்தணர் அயர, கானவர்
விண் தோய் பணவைமிசை ஞெகிழி பொத்த,
வானம் மா மலைவாய் சூழ்பு கறுப்ப, கானம்
கல்லென்று இரட்ட, புள்ளினம் ஒலிப்ப,
சினைஇய வேந்தன் செல் சமம் கடுப்பத்
துனைஇய மாலை துன்னுதல் கானூஉ –

### தலைவன் நிலை

“நேர் இறை முன்கை பற்றி, நுமர் தர,
நாடு அறி நல் மணம் அயர்கம்; சில் நாள்
கலங்கல் ஓம்புமின், இலங்குஇழையீர்” என,
ஈர நல் மொழி தீரக் கூறி,
துணை புணர் ஏற்றின், எம்மொடு வந்து,
துஞ்சா முழவின் மூதூர் வாயில்,
உண்துறை நிறுத்துப் பெயர்ந்தனன்

### தலைவன் வரும் வழி அருமை, தலைவி கலங்கல் அதற்கொண்டு

அன்றை அன்ன விருப்போடு, என்றும்,
இர வரல் மாலையனே; வருதோறும்,
காவலர் கடுகினும், கத நாய் குரைப்பினும்,
நீ துயில் எழினும், நிலவு வெளிப்படினும்,
வேய் புரை மென் தோள் இன் துயில் என்றும்
பெறாஅன்; பெயரினும் முனியல் உறாஅன்;
இளமையின் இகந்தன்றும் இலனே; வளமையின்
தன் நிலை தீர்ந்தன்றும் இலனே; கொன் ஊர்
மாய வரவின் இயல்பு நினைஇ, தேற்றி,
நீர் எறி மலரின் சாஅய், இதழ் சோரா
ஈரிய கலுழும், இவள் பெரு மதர் மழைக்கண்;
ஆகத்து அரிப் பனி உறைப்ப, நாளும்,
வலைப் படு மஞ்ஞையின், நலம் செலச் சாஅய்,
நினைத்தொறும் கலுழுமால் இவளே –

கங்குல்

அளைச் செறி உழுவையும், ஆளியும், உளியமும்,
புழற் கோட்டு ஆமான் புகல்வியும், களிறும்,
வலியின் தப்பும் வன் கண் வெஞ் சினத்து
உருமும், சூரும், இரை தேர் அரவமும்,
ஒடுங்கு இருங் குட்டத்து அருஞ் சுழி வழங்கும்,
கொடுந்தாள் முதலையும், இடங்கரும், கராமும்,
நூழிலும், இழுக்கும், ஊழ் அடி முட்டமும்,

பழுவும், பாந்தளும், உளப்படப் பிறவும்,
வழுவின் வழாஅ விழுமம், அவர்
குழு மலை விடரகம், உடையவால் எனவே. *– கபிலர் பத். 8*

## தோழி, அறத்தொடு நிற்றல்

*தாயே, வாழ்க! அன்னையே யான் கூறுவதைக் கேட் பாயாக ஒளி பொருந்திய நெற்றியினையும், மெல்லிய கூந்தலை யும் உடைய என் தலைவி தன் மனத்தில் மறைத்திருக்கும் பொறுத்தற்கரிய நினைவுகள் அவளை மெலிவிக்கின்றன அதனைப் போக்க வேலன், கட்டுவிச்சியிடம் வினவியும் வேறுபல தெய்வங்களை வாயால் துதித்தும், தொழுதும், மலர்த் தூவி வழிப்பட்டும் கூடப் பயனில்லை. அவள் அழகு கெடவும், தோள் மெலியவும் வளை கழலுதலைப் பிறர் அறிய நேரிட்டது அவள் படும் துன்பத்தை அறிய மாட்டாது நீ துன்பப்படுகின்றாய்! அவளது துயரைக் கூற மாட்டாது நானும் என்னுள்ளே அடக்கி நிற்கின்றேன்!*

## தலைவியின் அன்புமிகுதி

*முத்து, மணி, பொன் ஆகியனவற்றால் ஆகிய அணிகலன் கெடுமானால், தட்டாரால் அதனை முன்பிருந்தபடியே செய்ய வியலும்! குல ஒழுக்கமும், மேம்பாடும், பண்டைய தன்மையினின்றும் கெடுமானால் அந்த அழுக்கைப் போகும் படிக் கழுவி பழைய ஒழுக்கத்தை நிலை நிறுவுதல் இயலாது தொல் அறிஞர்களுக்கும், குற்றமற்ற மெய்யுணர்வுடைய மேலோர்க்கும் கூட அஃது எளிய தொரு செயல் அன்று! தலைவி, "என் பெண்மையும் மடனும் ஒருசேரப் போகும் படி நெடுந்தேர் உடைய என் தந்தையின் காவலைக் கடந்து தலைவனும் யானும் மேற்கொண்ட காதல்மணம் இதுவென நாமே அன்னைக்குக் கூறினால் பழியும் உள்ளதோ?" என்றாள் மேலும் "அப்படி கூறியும் நம் நெறிப்படி தலைவர்க்கே நம்மை நேராராயினும் பொறுத்து மறு பிறவியிலேனும் நாம் அவருடன் இணைவோம்!" என்று கொண்டு கூறி மான் நோக்குடைய தலைவி நீங்காத நோயுடையளாகத் தேம்பு கின்றாள்*

பகை வேந்தரிடை நட்பமைதி செய்விக்க நின்ற சான்றோர் போல அச்சத்துடன் இவள்படும் துன்பத்திற்கும் நினைவுக்குமிடையில் யான் நிற்கின்றேன். ஒருவர்க்கு மகள் கொடுப்போர், நன்மை, குடிப்பிறப்பு, குணம் சுற்றம் இவற்றை ஒப்பிட்டு மேலும் பலரிடம் உசாவி நேர்வர் நாங்களோ உன்னையும் கேளாது உடன்பட்ட இக் கனவு நிகழ்ந்த தனைக் கூறுவேன் சினவாதே கேள்!

## தினைக் காத்தலும் சுனையாடலும்

'முத்துடை மூங்கிலைத் தின்ற யானை அவ் வருத்தம் நீங்க, மருப்புக்கிடையே தொங்கவிட்ட துதிக்கையினைப் போல, விளைந்து, வளைந்த தினைக் கதிர்களைக் கொள்ள வயல் வெளியில் வீழும் பறவைகளை ஓட்டிப் பகற் பொழுது கழியும்போது வருவீராக' என்று கூறி நீ போக விட்டாய்! மரத்தின் மீது பொருந்திய புலி அஞ்சும்படியான பிரம்பினால் பின்னிய பரணில் ஏறித் தழல், தட்டை, குளிர் ஆகிய கருவி களால் முறையாகக் கிளிகளை ஓட்டினோம்.

வானகத்தில் பறக்கும் பறவைகளெல்லாம் கூடுகளில் சென்றடைய, கடல் குறையும்படியாக நீரை முகந்து கொண்டு முரச முழங்குவது போன்ற இடியோசையுடன் ஒழுங்காகச் செல்லும் முகிலானது இன்னிசை முரசும், ஒளியணி கலன் களும் உடைய முருகக் கடவுள் பகைவர்க்காக எடுத்த ஒளி வீசும் இலை வடிவான வேல் போல் மின்னியது வான் வெளியில் வீசும் காற்றுப் பட்டவுடன் மலை மேல் மழை யாகப் பொழிந்தது உச்சிப் போதில், தலைவனுடைய நெடிய மலையின் கொடுமுடியினின்றும் குதிக்கின்ற தெளிந்த வெள்ளாடை போன்ற அருவியிலே மிக விருப்பத்துடன் நீராடினோம் செறிவான மலைச் சுனையின் பளிங்கு நீரிலே குடைந்து விளையாடினோம்! பிறகு, எங்கள் மனதிற்குப் பிடித்த பாடல்களைப் பாடி யாடிய பின்பு, பொன்னிலே அழுத்திய நீலமணி போல சிறிய முதுகில் தாழ்ந்து கிடந்த எம்முடைய பின்னியிருந்த கரிய கூந்தலின் நீரைப் பிழிந்து ஈரத்தைப் புலர வைத்து, உள்ளிடமெல்லாம் சிவந்த விழிகளை உடையவர்களாக இருந்தோம்

## நூறு வகை மலர்கள்

வளமான இதழ்களையுடைய ஒளிமிக்க சிவந்த கோடற் பூவும், ஆம்பல், அனிச்சம் பூக்களும், குளிர்ந்த குளத்தில் பூத்த குவளையும், குறிஞ்சிப் பூவும், வெட்சிப்பூவும், செங்க கொடுவேரிப் பூவும், தேமாம் பூவும் பறித்தோம் தனக்கே உரிய மணத்துடன் கமழும் பெருங் கொத்தான பெருமூங்கிற் பூவும், கூவிளமாகிய வில்வப் பூவும், நெருப்பு போன்ற எறுழம் பூவும், மராமரப் பூவும் கூசரம் பூவும், வட வனம், வாகை, வெட் பாலை ஆகிய பூக்களும் தொகுத்தோம் எருவைப் பூவும், வெண் களக்கணம் பூவும், நீலமணி அன்ன கருவிளம் பூவும் பயினிப் பூவும், வானிப் பூவும், பச்சிலைப் பூவும், வகுளம், காயாம் பூவும், விரிமலர் ஆவிர மலரும், சிறு மூங்கிற் பூவும், சூரைப் பூவும், சிறு பூளைப் பூவும், குன்றிப் பூவும், குருகிலை, மருதம், ஆகிய மலர்களும் பறித்தோம் விரிந்த கோங்க மலரும் மஞ்சாடிப் பூவும் திலகப் பூவும், தேன் கமழும் பாதிரிப் பூவும், செருந்திப் பூவும், புனலிப் பூவும், பெரிய சண்பகம், கரந்தை, காட்டு மல்லி,மாம் பூவும் பறித்தோம் தில்லை, பாலை, கல் முல்லை, குல்லை, பிடவம், கருங்காலி, வாழை, வள்ளி, நெய்தற்பூ, தாழை, தளவம், முள் தாமரை, ஞாழல், மௌவல், கொகுடி, சேடல், செம்மல், குரலி, கோடல், கைதை, சுரபுன்னை, காஞ்சி, கருங்குவளை, பாங்கர், மரவம், தணக்கம், ஈங்கை இலவம், கொன்றை, அடும்பு, ஆத்தி, அவரை ஆகிய பூக்களும் பறித்துச் சேர்த்தோம். பகன்றைப் பூவும் பலாசம் பூவும், அசோகம் வஞ்சி, பிச்சி, கரு நொச்சி தும்பை, திருத்துழாய், தோன்றி, நந்தியா வட்டை, நறவம், புன்னாகம், பருத்திப்பூ, பீர்க்கம்பூ, குருக்கத்தி, சந்தனப் பூ, அகிற்பூ, பெரும்புன்னைப் பூ, நாரத்தம் பூ, நாகப் பூ, இருவாட்சி, குருத்தம், வேங்கை ஆகிய பூக்களுடன் சாதிலிங்கம் பரப்பினாற்போல ஏனைய மலர்களுடன் மலை எருக்கம் பூவும் பலகாலும் திரிந்து பறித்தோம் மழை நீரால் தூய்மை யாக்கப்பட்ட அகன்ற பாறையில் அப் பூக்களை எல்லாம் குவித்து வைத்தோம்!

## தலைவன் வருகை

பறவைகளின் ஒலியாகிய இசையில் மலையின் பக்கங்களின் தினைப்புனங்களில் பெரிய ஓசையுடன் கூடிய சொற்களை இடையிடையே சொல்லிக் கிளிகளை ஓட்டினோம் புற இதழ்களை நீக்கிக் கொய்த தழையை ஒழுங்கு செய்து பாம்பின் படம்போல் பரந்த அல்குலை உடைய இடையில் கட்டி உடுத்தோம். பல்வேறு நிறத்தையுடைய அழகான மாலைகளை எங்கள் மெல்லிய கருமையான கூந்தலில் கவின் பெற அணிந்தோம் நெருப்புப் போலும் தளிர்களையுடைய அசோக மரத்தின் குளிர்ந்த நிழலில் இருந்தோம்

அப்போது, அங்கே வந்த தலைவன் பல காலமும் எண்ணெய் வார்த்து வளர்க்கப்பட்ட தலை மயிருக்குக் குளிர்ந்த நறுமணம் வீசும் மயிர்ச் சந்தனத்தை மணம் கமழப் பூசியிருந்தான். அந்த ஈரம் உலரும்படி விரலாலே அலைத்து, பிணிப்பை அவிழ்த்து விடுத்து, அதற்கு நறுமணம் வீசும் கரிய வயிரமுடைய அகில் புகையை ஊட்டியிருந்தான் யாழ் ஒலி போல் பாட்டினை உடைய வண்டுகள் ஆரவாரிக்கும் படி, இன்மணத் தைலம் பூசிய கரிய நிறத் தலையில் மலையில் பூத்தனவும், நிலத்தில் மரக்கிளைகளில் பூத்தனவும், சுனையில் உருவானவையுமான வண்ண வண்ண மலர்களைச் சூடி இருந்தான். ஆராய்ந்த மலர் மாலையுடன் வெண்தாழை மடலினால் ஆன கண்ணியுடையவனாக இருந்தான் பசிய பிச்சி மலர், அழகிய அலரி ஆகிய இணைத்துக் கட்டிய சரத்தை ஒரு புறம் தொங்க விட்டுத் தீப் போன்ற அசோகந் தளிரை ஒரு காதிலே செருகிக் கொண்டிருந்தான் சந்தனம் பூசிய மார்பில், அணிகலன்களோடு மாலையணிந்து, இறுகின முன் கையில் வரிவில் ஏந்தி, அம்பு பிடித்து, நுண்வினை ஆடையினைத் துளக்கமின்றி அணிந்திருந்தான். பொன் கழல்கள் நடைக்கேற்ப, ஏறுவதும் இறங்குவதுமாய் ஒலித்தன.

## வேட்டை நாய்கள் - தலைவன் வருகை

பகைவர்தம் நாட்டைப் பாழாக்கும் வலிமிக்க எதிரி களைப் புறமுதுகிட்டோடச் செய்யும், பல வேலினையுடைய வீரரைப்

போல், சினத்தால் செருக்குற்று, நெருங்கும் தோறும் வெருளும் மூங்கில் முளை போன்ற ஒளிபெற்ற பற்களைக் காட்டும், பெரிய நகங்களையுடைய நாய்கள்! அவை இமையாத கண்களையுற்றனவாய் எம்மை வளைத்துக் கொண்டு மென் மேலும் பாய்ந்து வந்தன. யாங்கள் அஞ்சி, எழுந்து, விரைந்திட இயலாமல் தளர்ந்து, துன்பம் மிக்க மனத்துடன் மருண்டு, வேறிடம் போகாமல் நின்றிட்டோம். அப்போது காளை களை வென்று ஓட்டி, வேற்று நிலத்தில் கண்ட புதிய பசுவிடம் செருக்குற்று வரும் ஏறு போல அழகுடன் தலைவன் வந்தான்.

எம் அச்சம் போக்கும் நற் சொற்களைக் கூறினான் எங்கள் ஐவகைக் கூந்தலின் அழகைப் புகழ்ந்தான் 'ஒளி பொருந்திய வளைகளையும், மென் சாயலையும், அழகிய வளைந்த தொப்புளையும், இளமையான மதர்த்த குளிர்ந்த கண்களையும் கொண்ட அசைகின்ற இளையவர்களே! வழி தவறி இவ் இடம் வந்த நான் பல தொல்லைகளையடைந் தேன்' என்றான்.

நாங்கள் அவனுக்கு மறு மொழி ஒன்றும் கூறாமல் திகைத்து நின்று விட்டோம் அதனால் மனம் வருந்தி, 'மென் சாயலீர் வழிகாட்டாவிட்டாலும், என்னோடு ஒரு சொல் பேசுதலும் உங்களுக்குப் பழியாகுமோ?' என்று சொல்லிய படியே, யாழென ஒலிக்கும் காதல் வண்டுகள் தங்கியிருந்த அலரிக் கிளையினை ஒடித்து அதில் தேன் உண்ணும் சுரும் பினங்கள் உதறி, பிறகு ஓயாமல் குலைத்து அச்சுறுத்தும் வேட்டை நாய்களை அப் பூங்கொம்பால் அடித்து வாயடக்கி, எங்கள் வாய்மொழியை எதிர் நோக்கி நின்றனன்

## களிறு தரு புணர்ச்சி

தினையரிந்த தாளால் வேய்ந்த சிறிய கால்களைப் பெற்ற குடிசையில் இருக்கும், மான் நோக்கியாகிய மனைவி எடுத் தளிப்ப - தேனால் சமைத்த கள்ளினை உண்டு மகிழ்ச்சி தலைக்கேறக், கானவன் காவலை மறந்து விட்டான்

அதனால் பெரிய தினைப்புனைத்தை வாய் மடுத்து, உண்டு யானை பிளிறுவதைக் கண்டு, சிறுமை தாங்காமல் வருந்தி,

அளவு கடந்த சினமடைந்தான் கானவன் பாம்பு போன்ற அழகிய வில்லை வளைத்து நாணேற்றிச் சீற்றத்துடன் அம்பை எய்தான் தட்டையை அடித்துக் காடே கல்லென ஒலிக்கும்படி ஓசையுண்டாக்கினான். வாயை மடித்துச் சீழ்க்கையடித்து, யானையை விரட்டினான்.

ஆகவே, சினம் மிக்கு மதமேறி மனம் செருக்கிய யானை, மரங்களை முறித்துக், கார்கால இடிபோல் முழங்கிக் கொண்டு, தன் பெருமைகேற்ப நீண்ட துதிக்கையைப் பெரிய நிலத்தில் ஓங்கியறைந்து, விரைவாக அரிமாப் போல் எங்கள் மேல் வந்தது! உயிர் பிழைக்க இடனறியாமல், மன நடுக்கங்கொண்டு உயிரினும் மிக்க நாணத்தையும் மறந்து வளையொலிக்க, விரைந்து அவனை நெருங்கித் தெய்வம் ஏறின மயிலைப் போல் நடுங்கினோம்

அம்பினை வில்லில் பதித்துக் கடுவிசையுடன் யானை யின் நெற்றியில் அவன் பாய்ச்சிட, குருதி வடிந்து முகம் மறைத்தலால் யானை புறங்கொண்டோடியது பிறகு முருகன் வெறியாடும் மகளிர் கடம்ப மரம் சூழ்ந்து கைக் கோர்த்து நின்றாற் போல அவன் கைகளை விடாமல் பற்றிக் கொண்டு நாங்கள் புதிய வெள்ளம் பாய, கரையில் நடுங்கும் வாழை போல் நடுங்கினோம். அப்போது பெருந்தகை! "அஞ்சாதே பெண்ணே! நின்னைப் பிரியேன். உன் அணி நலம் நுகர்வேன்" என்று தலைவியின் நெற்றியினைத் துடைத்து நீவி, நீடு நினைந்து, என்னை நோக்கிச் சிரித்தனன்!

## கூடலும், ஆடலும்

அவ்வாறு அவன் அணுகியவுடன் இயல்பான நாணமும், அச்சமும் வந்து தோன்ற, விரைவாக அவனைவிட்டுத் தலைவி ஒதுங்கினாள் அவன் விடாதவனாக, நின்ற நிலையிலேயே அவளைக் கைகளால் இறுக அணைத்து, இவள் மார்பு தன் மார்பிலே அழுந்தும்படித் தழுவினான்

பழுத்த மிளகுப் பழங்கள் உதிர்ந்து கிடக்கின்ற சுனை யில், இனிய மாம்பழங்களும், வெடித்து தேன் சிந்தும் பலாக்

கனிகளும், இணைந்து விளைந்த கள்ளானது தேனடை உடைந்து ஊற்றிய தேனுடன் கலந்து திரண்டிருக்கையில், அதனை நீரென்று மாறாகக் கருதி உண்ட மயில் மயங்கி ஆடும் எப்படியெனில், இன்னிசை ஒலிக்க, கழைக்கூத்தில் கயிற்றிலாடும் பெண் தாளத்திற்கு ஆற்றாது இப்படியும் அப்படியும் தளர்ந்தாடுதல் போல் கள்ளுண்ட களிப்பால் அசைந்தாடும் சாரலினையுடையது அத் தலைவன் குன்று அது மட்டுமன்று, வானகத்தை அளாவும் முடிகளில் செழித்த செங்காந்தள் பூக்கள் சூடிய மகளிர் பரந்து விளையாடுதலால் சிறிது கசங்கிக் கீழ் நிலத்தில் அழகிய கச்சுகள் வீழ்ந்து கிடப்பதைப் போல் கிடந்து பொலிவு பெற்று விளங்குவது மாகிய அழகிய குன்றின் தலைவன் அவன். இவளது உள்ளத்து உணர்வினை உணர்ந்து திருமணம் புரிந்து இல்லறம் நிகழ்த்த எண்ணி இருந்தனன்

பலரும் விருந்துண்ணும் இல்லம் மேலும் பொலிவு பெற நெய்மிகு அடிசிலை நீ இடுகையில் உயர்ந்தோர் சுற்றமுடன் விருந்தயர்வர். எஞ்சிய அடிசிலை எனக்களிக்க உண்ணுதல் உயர்ந்ததே. அத்தகைய இல்லறம் நமக்குத் துணையாகுக என்று தெளிவித்து, முருகனை வாழ்த்தி, வஞ்சினம் கூறி களிறுதரு புணர்ச்சியை, அன்றைய பகலெல்லாம் பூஞ் சோலையில் கழித்தனர் அப்போது, பல கதிர் ஞாயிறு ஏழு குதிரை தேரில் சென்று மலைவாயில் மறைந்தனன்

## தலைவன் பிரிதல்

அந்தி மாலையில், மான்களின் கூட்டம் மரத்தடியில் வந்து கூடின. பசுக்களின் திரள் கன்றுகளை அழைக்கும் குரலுடன் பட்டிகளில் வந்து நிரம்பின. ஊதுகின்ற கொம்பு போன்ற ஓசையுடைய அன்றில், பெரிய பனை மரத்தின் உள் மடலில் இருந்து அகவின பாம்பு உணவெடுக்கத் தன் மாணிக்கத்தை உமிழ்ந்தன இடையர்கள் பல இடங்களில் நின்று ஆம்பல் பண்ணினை இசைக்கத் தொடங்கினர்

ஆம்பல் பூக்கள் மெல்ல இதழ் விரித்தன அந்தணர்கள் அந்தி சந்திகளை முடித்தனர் செல்வ வளம் மிக்க வீடுகளில்

தொடியுடை மகளிர் விளக்கைக் கொளுத்தி மாலைக் காலத் தொழிலை நிகழ்த்தினர் காட்டில் வாழ்வோர் வானைத் தீண்டும் உயரமான பரண்களில் தீக் கடைக் கோலால் நெருப்பை உண்டாக்கி எரிக்கத் தொடங்கினர்

முகில் மலையிடத்துச் சூழ்ந்து கறுத்துத் தோன்றியது காட்டிலுள்ள விலங்குகள் எல்லாம் கல் என்னும் ஓசை உடையனவாய் ஒன்றற்கொன்று மாறி மாறிக் கூப்பிடத் தொடங்கின பறவைகள் கூடுகளில் செய்யும் ஆரவாரம் பகை வேந்தன் போருக்குச் செல்லும் அரவத்தை ஒத்திருந்தன இவ்வாறு மாலைக் காலம் விரைந்து வருதலைக் கண்டான் தலைவன்

உடனே, "விளங்குகின்ற நின் முன் கையினைப் பற்றி உங்கள் பெரியோர் தர, சில நாள்களில் 'நாடறி நன் மணம்' அயர்வோம்; கலங்க வேண்டா இலங்கிழையீர்!" என்று பிரிவுடை நன்மொழிகளைத் தீர்மானமாகக் கூறினான். ஆவினைப் புணர்ந்த காளை போல, விடாமல் எங்களுக்குத் துணையாக வந்தான் முழவு ஓசை குன்றாத பழைய நம் ஊரின் வாசலில், பலரும் நீருண்ணும் துறையிலே எம்மை விட்டு, மீண்டு போயினன்!

## வழியருமை தலைவி கலங்குதல்

அன்று தொடங்கித் தொடக்க நாள் போன்ற விருப்ப முடன் நாளும் இரவுக் குறியில் வருதலைத் தலைவன் இயல்பாகக் கொண்டு விட்டான் அப்படி வரும் போதெல் லாம், ஊர்க் காவலர் இடைப்பட்டாலும், காவல் நாய் குரைத்தாலும், தலைவியின் மூங்கிலன்ன மென் தோளில் பெறும் இன் துயில் பெறாது போவான் பிழைக் குறியால் கூடாமல் திரும்பி விட்டாலும் அதற்காக வெறுத்தலைச் செய்யான் அவன் இளமைப் பருவம் கடந்தவனும் அல்லன் செல்வச் செருக்கால் என்றும் தன் குலத்திற்குரிய நற்குண ஒழுக்கங்களிலிருந்து நீங்கியவனும் அல்லன் ஆனால், இரவுக் குறியில் வரும் தலைவனைக் குகையில் மறைந்திருக்கும் புலிகளும், யாளிகளும், கரடிகளும் உள்ளே துளையுடைய

கொம்புடைய யானைகளும் தொல்லை தரும் என்று எண்ணி தலைவி வருந்துகின்றாள். மேலும், இடியும், கொடுந் தெய்வங்களும் இரை தேடும் பாம்புகளும், நீர்ச் சுழியில் திரியும் முதலைகளும், ஆறலைக் கள்வர் சூழ்ந்து, கொன்று குவிக்கும் இடங்களும், வழுக்கு நிலங்களும், திரும்ப வழியின்றி முட்டும் இடங்களும், பேய்களும். மலைப் பாம்புகளும் இவை அன்ன துன்பம் தரும் பிறவும் தலைவன் வரும் வழியிலுள்ள மலைவிடரகத்தில் இருக்குமே என்றும் கலங்குகின்றாள். நினைக்கும் போதே இவள் வலைப்பட்ட மான் போல் உள்ளம் நடுங்கி ஊர் அலர் கூறுதலுக்கும் அஞ்சி, இரவுக் குறியில் கூடுவதற்கு வருந்தித் துடிக்கின்றாள்

பெரும் மழைச் சாரலில் இதழ் அழகு கெட்டு, வாடிய மலர் போலக் கவின் இழந்து இமை சோர்ந்து நீர் துளிக்கக் கலங்குகின்றாள் அன்னையே அறிவாயாக!

